# ஞானத்தின் குரல்

அமரகவி சித்தேஸ்வரர்











பிரபோதரன் சுகுமார்

# ஞானத்தின் குரல்

## அமரகவி சித்தேஸ்வரர்

பிரபோதரன் சுகுமார்



அயக்கிரிவா பதிப்பகம்
சங்கர் கிருபா, ப. எண் 108 பு. எண். 176, பெரிய தெரு
திருவல்லிக்கேணி, சென்னை 600 005
Ph: 044 – 2844 4275 Mobile: 98409 17127
E-mail: taponishta@rediffmail.com

# நூல் விவர அட்டவணை

| | | |
|---|---|---|
| நூலின் தலைப்பு | : | ஞானத்தின் குரல் |
| ஆசிரியர் பெயர் | : | பிரபோதரன் சுகுமார் |
| பொருள் | : | ஆன்மிகம், ஒருங்கிணைந்த யோகம் |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற் பதிப்பு |
| பதிப்பாண்டு | : | 2009 |
| உரிமை | : | © ஆசிரியருக்கே |
| அச்சிட்டோர் | : | மூகாம்பிகை ஆப்செட் சென்னை – 600 005 |
| வெளியீடு | : | அயக்கிரிவா பதிப்பகம் திருவல்லிக்கேணி, சென்னை 5 |
| நூலின் அளவு | : | டெம்மி 1 / 8 |
| தாள் | : | 16 கி.கி. டபுள் டெம்மி |
| கட்டமைப்பு | : | சாதாக் கட்டு |
| அச்சு எழுத்து | : | 12 புள்ளி |
| மொத்த பக்கங்கள் | : | 160 பக்கம் |
| பிரதிகள் | : | 1000 |
| விலை | : | ரூ.60 |

ISBN: 978-81-903924-7-1



அயக்கிரிவா பதிப்பகம்
108. புதிய எண்176, பெரிய தெரு
திருவல்லிக்கேணி, சென்னை 600 005
தொ.பேசி: 044 2844 4275
அலை பேசி: 98409 17127
மின் அஞ்சல்: taponishta@rediffmail.com

# பொருளடக்கம்

## ஸ்ரீ வித்தையும் யோகமும் 15 – 33



## "யோகம்" – அதி அற்புதக் கலை 34 – 47

## சோம வட்டம் 58 – 72



## ஓங்காரத்தைச் சுற்றியே இயங்கும் பிரபஞ்சம் 73 – 88

## இந்து மதத்தில் மோட்சம் 89 - 102



## விண்வெளிப் பயணமும், யோகத்தின் வான் வெளியில் தன்னாட்சி புரியும் வலிமையும் 103 - 152

## வாழ்த்துரை

## கவியோகி வேதம் (யோகியார்)

..சமீபத்தில் நம்மிடையே திருவல்லிக்கேணியில் வாழ்ந்த மகான் ஸ்வாமி (அமரகவி) **சித்தேஸ்வரரின்** யோக வாழ்க்கையில் அநேக அதிசயங்கள், அநேக அனுபவங்கள் நடத்தேறியுள்ளன. அவருடன் நெருங்கிப் பழகியவர்களுக்கே அவை பற்றித் தெரியும். அந்த அளவுக்கு அவர் உலகியல் வாழ்க்கையில், விளம்பரப் புகழ் தேடும் பரபரப்பு உணர்வுகளில் பற்றற்றவராயிருந்தார்.

..ஆகவே அவர் சமீபத்தில் மறைந்தபின் அவருடைய நெருங்கிய சீடரான '**பிரபோதரன் சுகுமார்**' (நூலாசிரியர்) அவரிடையே பழகிய அனுபவங்களை வைத்தும், அவரது டயரியிலிருந்த அழகிய குறிப்புக்களை வைத்தும் நமக்கு அற்புதமான "**தெய்வீக அருள் வாக்குகளையும்,**" அவ்வுலகில்நாம் தெரிந்து கொள்ள வேண்டிய யோக, த்யான சூஷ்ம விஷயங்களையும் மிக அழகாகத் தொகுத்து வெளியிடுகிறார் தம் "**ஞானத்தின் குரல்**" எனும் இந்த நூல் மூலம்.

..விக்ரக ஆராதனை மூலமும், ஸ்ரீவித்யா பூஜை மூலமும் நம் முன்னோர்கள் எப்படிக் கடவுளை அடைந்தார்கள் எனவும், பின்பு யோகம், த்யானம் போன்ற "ஏரோப்ளேன் வழிமுறை" மூலம், பயின்று சதா தெய்வத்தை நெஞ்சின் "உள்" நிறுத்தித் தாங்களே எப்படி ஒரு தெய்வத்தின் அம்சமாக, சக்திகளை உள்வாங்கிய மனிதர்களாகப் பிறருக்கும் பயன் தந்தவர்களாக விளங்கினார்கள் என்பதையும், அந்த வழியிலேயே முயன்று இடையறாது பயிற்சி செய்து, **ஸ்ரீவிநாயகரின்** அருளை நேரிலேயே பெற்று, தினசரி அவர் சொல்ல ஸ்வாமி '**அமரகவி**' அவர்கள் அந்த வாக்குகளை ஒரு நோட்டில் எழுத.. என்று

பல வித்தியாசமான, புல்லரிக்கும் சம்பவங்களை நூலாசிரியர் இந்நூலில் விவரித்துள்ளார். மந்திரம், தந்திரம், யந்திர பூஜை முதலிய சூஷ்ம வழிமுறைகளும் அழகுற விளக்கப்பட்டுள்ளன. அந்த திருவல்லிக்கேணி மகானுடன் இவர் நெருங்கிப் பழகியதாலேயே இவர் இவ்வளவு விஷயங்களையும் கிரகித்துக்கொண்டு நமக்கு நூல் மூலம் பகிர்ந்தளிக்கிறார் என்னும்போது ஆச்சர்யமாயிருக்கிறது.

...எனவே, **தெய்வீக ஞானப் பயிற்சி, ஆகம சாஸ்திரம், யோக நித்திரை, அமிர்த நாடி, ப்ரம்ம ஐக்கிய பாவம்** போன்ற பல நுணுக்கமான செய்திகளையும் உள்ளங்கை நெல்லிக்கனி போல் கற்பிக்கும் இந்த நூலை அனைவரும் படித்து ஆதரிக்குமாறும் பயன்பெறுமாறும் வேண்டுகிறோம்.

**கவியோகி வேதம்**
**(யோகியார்)**

2 682, ரெங்கா ரெட்டி கார்டன்,
நீலாங்கரை, சென்னை 600 041
போன் 044 64565979

# ஞானத்தின் குரல்

ஆசிரியர் பிரபோதரன் ஸ்ரீ சுகுமாரன் ஒவ்வொரு மனிதனும் அறிந்த கொள்ள வேண்டிய "ஒருங்கிணைந்த யோக" விஷயங்கள் பலவற்றை விளக்கியுள்ளார். ஸ்ரீவித்தை, யோகங்கள், சிருஷ்டி தத்துவம், ஓம்காரம், யோகத்தின் முடிவு நிலை, மோட்சம், விஞ்ஞானமும் யோகமும் போன்ற பல கோணங்களில் ஆன்மிக உண்மைகளை விளக்கி கூறியுள்ளார்.

அமரகவி சித்தேஸ்வரர் என்ற சமீபத்தில் வாழ்ந்த சித்த யோகியின் ஆன்மிக அனுபவங்களையும் ஆங்காங்கே குறிப்பிட்டுள்ளார். யோகம், ஆன்மிகம், தியானம் மற்றும் வேதம், உபநிடதம் போன்ற நூல்களை கற்று உணர முயலும் அனைவரும் படித்து உண்மையான சித்த மகா புருஷர்கள் வழியினை அறிய உதவும் புத்தகம் இது. எல்லா யோக முறைகளிலும் உள்ள பல சூத்திரங்களை, உண்மைகளை தத்துவங்களை எளிமையாக்கி ஒருங்கிணைத்து உள்ள செயலை நாம் இந்த புத்தகத்தில் காணலாம். ஒவ்வொரு மனிதனும் அறிய வேண்டிய உண்மைகள் இதில் அடங்கி உள்ளன.

மனிதனின் ஆற்றல், உடல், மனம், இவையாவும் சூட்சுமானவை. விஞ்ஞானத்தால் ஸ்தூலத்தை மாத்திரமே அறிய முடியும். சூட்சுமாய் இருக்கும் விஷயங்களை விஞ்ஞானத்தினால் அறிய முடியாது. உயிர் எவ்வாறு உள்ளது? அது எவ்விதம் மனித உடலை இயக்குகிறது? இறப்பை ஏன் விஞ்ஞானம் தவிர்க்க முடியவில்லை? மனிதன் தெய்வமாக எப்படி மாற முடியும்? சிற்றறிவும் பேரறிவும் எப்படி இணைய முடியும்? இதுபோன்ற மற்றும் இன்னும் பல கேள்விகளை விஞ்ஞானம் சந்தித்து செயலற்று உள்ளது. எனவே ஆன்மிக உலகத்தில் இன்றைய விஞ்ஞானம்

மிகச்சிறியது என்பதை உணர்த்துகின்ற வகையில் பல விஷயங்களை ஆசிரியர் இதில் தொகுத்துள்ளார். மக்கள் இதனைப் படித்து விஞ்ஞானம் ஆன்மிகத்தில் ஒரு காமெடி என்பதை உணர வேண்டும். சித்தர்கள் பாணியில் சொல்ல வேண்டுமானால் விஞ்ஞானம் ஒரு சிறு பிள்ளை விளையாட்டு என்பதை உணர வேண்டும்.

இப்படிக்கு

**வி. ஆர். விஜயகுமார்**

13, மத்தள நாராயணன் தெரு,
மயிலாப்பூர், சென்னை – 600 004

கைபேசி 99403 58165

# ஸ்ரீ வித்தையும் யோகமும்

இந்து தருமத்தைப் பற்றி நாம் ஆழமாக அறிந்து கொள்ள வேண்டுமானால் நான்கு வேதங்களான ரிக், யஜுர்,சாம, அதர்வணம், மற்றும் மகரிஷிகள் இயற்றிய உபநிஷத்துக்கள், பிரம்ம சூத்திரம், சாஸ்திரங்கள், இதிகாசங்களான இராமாயணம், மகாபாரதம் மற்றும் ஸ்ரீமத் பகவத் கீதை போன்ற இன்னும் எண்ணிலடங்கா பல கிரந்தங்களும் நாம் படித்துத் தெரிந்து கொள்ள உதவியாக உள்ளன. இவற்றில் ஏதாவது ஒன்றில் நன்கு கற்றுத் தேர்ச்சி பெறுவது என்பது மனித ஆயுள் காலத்தில் எளிதில் முடியாத ஒன்றாகும். தொடர்ந்து பல ஜன்மங்களில் முயற்சி செய்தால் தான் அதன் முழுப் பங்குப் பலன் கிட்டும்.

“வேதங்கள்” என்பவை வேத காலத்தில் வாழ்ந்த மகரிஷிகளுக்கு பிரம்ம சிருஷ்டியின் தத்துவ இரகசியத்தை விளக்கமாக, நேரிடை வருணனையாக இறைவனால் எடுத்துச் சொல்லப்பட்ட “தெய்வீகக் குரலின் வாக்காகும்.” வேத கால மகரிஷிகளுக்குப் பின் அடுத்து வந்த தலை முறையில் தோன்றிய ரிஷிகள் நான்கு வேதங்களை மிக ஆழமாக ஆராய்ந்து சென்று அவற்றின் சாராம்சத்தை நன்கு பிழிந்தெடுத்து “உபநிஷத்துகளாக” உலகிற்கு அறிமுகப்படுத்தினார்கள். இவை யாவும் அதனை வழங்கிய ரிஷிகளின் பெயர்களிலேயே அழைக்கப்படுகின்றன.

இவை யாவும் நன்கு கற்றுத் தேர்ந்த பண்டித ஞானம் பெற்ற பண்டிதர்கள், புலமை பெற்ற சாஸ்திர விற்பன்னர்கள், அறிவு ஜீவிகள் போன்றவர்களுக்கு அறிந்து கொள்ளவே மிகவும் கடினமான விஷயமாக இருக்கும் போது சாதாரண மனிதனைப் பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை. பாமரன் சாஸ்திரங்களை அறிந்து கொள்வது என்பது கடினமான காரியமாகும். இதனைக் கருத்தில் கொண்டு தான் சிருஷ்டியின் இரகசியங்களை விளக்கிக் கூறும் பிரம்ம தத்துவங்களை மக்கள் எளிதில் புரிந்து கொண்டு அவற்றின் அர்த்தங்களை ஆழ்ந்து சிந்திக்க வேண்டும் என்கின்ற நோக்கத்தில் அவை

யாவும் கதை வடிவமாக மிகவும் சுவாரசியமாகவும், விறுவிறுப்பான முறையிலும் எடுத்துச் சொல்லப்பட்டு வருகின்றன. தொன்று தொட்டு, காலம் காலமாக அம்முறையே மக்களிடம் நன்கு பிரபலமாகி இந்து மதத்தின் ஆணி வேர் போன்று உறுதியாக இன்றும் நிலைத்து நிற்கின்றது.

காலத்தினால் அழியாக் காவியங்களாகத் திகழும் இராமாயணம், மகாபாரதம் போன்ற இதிகாசங்களை எவ்வளவு முறை எடுத்துக் கூறினாலும், மீண்டும் மீண்டும் அவற்றைப் புதுமையான முறைகளில் விரும்பிப் படிக்கத் தூண்டும் ஆவலைத் தான் மக்களிடையே ஏற்படுத்தி வருகின்றன என்பதைக் கண்கூடாக இன்றும் நாம் காணலாம். வேத வியாசர் தொகுத்து வழங்கியுள்ள 18 புராணங்களில் பல யுகங்களில் நடை பெற்ற தெய்வீக நிகழ்ச்சிகளையும், சம்பவங்களையும் கதைகளாக எடுத்துச் சொல்லி அவற்றை ஆவலுடன் விரும்பிக் கேட்கும் பாமரனின் மனத்தில் கதைகளின் கருத்துகள் நன்கு ஆழமாகச் சென்று பதியும் விதமாகத் தொகுத்து வழங்கியுள்ளனர். அதில் சிலேடையாகக் கலந்துள்ள மாபெரும் தத்துவ உண்மைகளை மிகவும் எளிய முறையில் குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை புரிந்து கொள்ளும் வகையில் அற்புதமாக எடுத்துச் சொல்லப்பட்டதால் தான் இந்து மதத்தின் சிறப்பும் அதன் ஈடு இணையற்ற பெருமையும் நமக்கு விளங்குகிறது.

சிருஷ்டியின் நியதிகளுக்குக் கட்டுப்பட்டு, ஒரு வரைமுறைக்குட்பட்ட உயிர்–உடல் (ஜீவித–தேக) வாழ்க்கையை மேற் கொண்டுள்ள மனிதன், எங்கும், எதிலும் எல்லையில்லாமல் நீக்கமறப் பரவியிருக்கும் இறைவனை உணரும் முக்கிய வழி முறைகள் கீழ்க் கண்ட மூன்று பெரும் பிரிவுகளாக அறிவிற் சிறந்த நம் முன்னோர்களால் வகுக்கப்பட்டுள்ளன. அவையாவன

| வழிமுறைகள் | மார்க்கங்கள் |
|---|---|
| முதல் வழி முறை | ஸ்ரீ வித்தை |
| 2 ஆவது வழி முறை | அஷ்டாங்க யோகம் |
| 3 ஆவது வழி முறை | அத்வைத விசாரம் |

ஸ்ரீ வித்தை

இந்தப் பரத கண்டத்தில் பிறந்துள்ள ஒவ்வோர் இந்துவும் மேற்கூறிய ஏதாவது ஒரு வழி முறையைக் கடைபிடிப்பவராகத் தான் இருப்பார். இம்மூன்று

முக்கிய வழிமுறையில் முதலாவதான "ஸ்ரீ வித்தை" என்பதன் பொருள்.

| | |
|---|---|
| ஸ்ரீ என்ற சொல் | தெய்வீகத்தைக் குறிக்கும் |
| வித்தை என்ற சொல் | "ஞானத்தைக்" குறிக்கும் |

எனவே மனிதன் "தெய்வீக ஞானத்தைத்" தேடும் வழிமுறையைப் பற்றி விளக்கிச் சொல்வது தான் ஸ்ரீ வித்தையாகும். இந்த வழிமுறையே பரத கண்டத்தில் வாழும் இந்துக்கள் பலரும் இன்றும் கடைப்பிடித்து வரும் மார்க்கம் என்றால் அது மிகையாகாது. ஸ்ரீ வித்தையை முதன் முதலில் உலகத்திற்கு அறிமுகப்படுத்திய பெருமை அகஸ்தியரையே சாரும். அகஸ்தியரே சகல ஞானத்திற்கும் நாயகனாகத் திகழும் ஹயக்ரீவரிடம் (ஸ்ரீமகா விஷ்ணுவின் அம்சம்) அதன் கலைகளை எல்லாம் முறையாகப் பயின்று, அதனைத் தன்னுடைய தரும பத்தினி லோபா முத்திரையை முதல் சிஷ்யையாக ஏற்றுக் கொண்டு உபதேசித்தார்.

இதன் முதல் தொடக்கம் விக்கிரக ஆராதனையில் (உருவ வழிபாடு) உருவெடுத்து பூஜை, விரதம், ஹோமம், நாம சங்கீர்தனம், க்ஷேத்திரங்களுக்குச் சென்று வழிபடுதல், தீர்த்த யாத்திரைகள், புனித நதிகளில் நீராடல், ஹரிகதா காலட்சேபம், பண்டிகை, திரு விழாக்கள், சத் சங்கம், சாது சங்கமம் போன்ற எல்லோராலும் கடைப்பிடிக்கப்படும் முறைகள் முதல் அதற்கு அடுத்த படியான சாஸ்திர சம்பிரதாயங்கள், அனுஷ்டானங்கள் வரை முன்னோர்கள் ஏற்படுத்தி இருந்தார்கள்.

ஆகம சாஸ்திரம் மற்றும் அதன் முக்கிய அங்கங்களாகக் கருதப்படும் மந்திரம், தந்திரம், யந்திரம், யோகம் ஆகிய சாஸ்திரங்களில் நன்கு தேர்ச்சி பெற்று ஆச்சார அனுஷ்டானங்களில் சிறந்து விளங்கியவர்கள் பண்டிதர்களாகவும், சாஸ்திரிகளாகவும், கோவில்களில் குருக்கள், அர்ச்சகர்கள், பட்டாசாரியர்களாகவும் தொண்டு புரிகின்றனர். "ஸ்ரீ வித்தை" இந்து சமுதயத்திற்கு அப்படி என்ன சேவை புரிந்துள்ளது எனச் சிலர் கேட்கக் கூடும். இசையுடன் இணைந்து செல்லும் இராகத்தைப் போல் "ஸ்ரீ வித்தை" தான் தொன்று தொட்டுச் சிறப்பாக விளங்கும் இந்து மதத்தின் பாரம்பரியம் மிக்க புராதானக் கலை, இலக்கியம், பண்பாடு, நாகரிகம் ஆகிய இவை யாவும்

சிறந்து விளங்க அருந்தொண்டினை ஆற்றி வருகின்றது. அது மட்டுமல்லாமல், பண்டைய கால பரத தேசத்தின் கலாச்சாரப் பெருமைகளை மற்ற உலக நாடுகளுக்குப் பறை சாற்றும் கலைப் பொக்கிஷமாகத் திகழ்கின்றது.

இந்து மதத்தின் இந்தப் பலமான அஸ்திவாரத்தின் மேல் இன்னும் பல படிகளைக் கடந்து மேலேறிச் செல்ல வேண்டிய யோக சாதனையின் பல கடினமான நிலைகளைப்பற்றி ஸ்ரீ வித்தையில் மிகவும் விளக்கமாகவும் தெளிவாகவும் நம் முன்னோர்களால் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. குறிப்பாக எடுத்துக் கூறவேண்டுமானால் ஸ்ரீ வித்தையில் பிரம்ம விசாரத்தின் உச்ச கட்டச் சிகரமாகத் திகழும் "சோடச கலை, அப்ரேக்ஷ ஞானம், யோக நித்திரை, பிரம்ம நிஷ்டை, கேசரி சித்தி, வாக் மவுனம், மனோ மவுனம், அகார சித்தி, நாதோபாசனை சித்தி, ஆழ்நிலை தியான சமாதி யோகம்" என பல விசேஷமான நிலைகளையும் உள்ளடக்கி "ஜீவ–பிரம்ம ஐக்கியத்தின்" பூரணத்துவத்தை எட்டும் அளவிற்குள்ள அதன் சிறப்புக்கும் பெருமைக்கும் சான்றாகத் திகழ்கின்றது.

ஸ்ரீ வித்தையின் மிக மேன்மையான (அதி உன்னத நிலை) எனக் கருதப்படுவது "அமிர்த நாடி" திறப்பேயாகும். அதன் மர்மமான ரகசியப் பாதை தமிழ் நாட்டில் அவதரித்த சித்த மகா புருஷர்கள் மட்டுமே அறிந்திருந்த ஓர் அற்புதமான வழிமுறையாகும். "அமிர்த கலை" உடல் முழுவதும் பாய்ந்தால் "இறப்பு" என்னும் சொல்லுக்கு இடமேது?

ஸ்ரீ வித்தை வழிமுறையின் மற்றொரு முக்கியமான சிறப்பம்சம் யாது எனில் இறைவனுடன் ஒன்றிடும் அபூர்வ நிலைகளாகக் கருதப்படும் "பிரம்ம பாவம், ஐக்கிய பாவம்" ஆகிய இவற்றின் மூலம் எட்டப்படும் ஆத்ம போதனை என்கின்ற முறையாகும். "ஆத்ம போதனையின்" மூலம் அகண்டாகார விருத்தியான, பிரம்ம சிருஷ்டியின் தத்துவ இரகசியமாக கருதப்படும் உடல், உயிர், ஆத்ம விஷயங்களை பூரணமாக இறைவனின் கருணையினால் அறிந்து கொள்ளலாம். மேலும், அதி உன்னத நிலைகளாகக் கருதப்படும் "விஞ்ஞான மய கோசம்," மற்றும் "பரமாகாசத்தின்" சிகரத்தைத் தொட்டு, பல கல்ப கோடி காலம் வரை வாழும் "சீரஞ்ஜீவியாக" நிலைத்து நிற்கும் தேவ கதியின் ஒப்பற்ற சித்தியை இறைவனின் பேரருளால் உறுதியாகப் பெற முடிகின்றது.

ஸ்ரீ வித்தையின் இவ்வளவு கடினமான முயற்சிகளை மேற் கொண்டு அவற்றின் பல் வேறு நிலைகளை நிதானமாகத் தாண்டிச் சென்றாலும் இந்த மார்க்கமே கை மேல் பலனளிக்கும் வழி முறையாகும். முக்கியமாக எளிமையானதும், மிகவும் பாதுகாப்பானதும், சமூகத்தின் அனைத்துத் தரப்பினர்களாலும் விரும்பிக் கடைப்பிடிக்கப்படும் வழியாகும் இது. ஸ்ரீ வித்தையின் முதல் படி, பக்தியில் தொடங்கி குழந்தைகள், பெண்கள் முதல் பெரியவர்கள் வரை சமுதாயத்தில் வாழும் அனைத்துத் தரப்பு மக்களையும் அரவணைத்து அழைத்துச் செல்லும் வழிமுறையாக விளங்குகின்றது. அவரவர்கள் குடும்ப பாரங்களைச் சுமந்து கொண்டே, அன்றாட அலுவல்களையும் புரிந்து கொண்டே கடைப்பிடிக்கும் மார்க்கமாக உள்ளது. பக்த மீரா, ஔவையார், சூர்தாசர், துக்காராம், திருஞான சம்பந்தர், சைதன்ய மகா பிரபு, இராம கிருஷ்ண பரமஹம்சர் போன்ற எண்ணற்ற பெரியோர்கள் ஸ்ரீ வித்தை மார்க்கத்தின் வழியில் சென்று இறைவனை உணரும் பேறு பெற்றார்கள் என்பது நாமெல்லோரும் அறிந்த விஷயமாகும்.

அஷ்டாங்க யோகம்

வேத காலத்தில் மிகவும் பிரபலமாக விளங்கிய ஸ்ரீ வித்தையின் பல படிகளை ஒவ்வொன்றாகத் தாண்டிச் சென்று, பல ஆண்டுகள் நிதானமாகக் கடந்து செல்ல வேண்டிய மார்க்கத்திலிருந்து, சுலபமாகச் செல்லக் கூடிய முற்றிலும் வேறுபட்ட ஒரு மாற்று வழிமுறையை "பதஞ்சலி முனிவர்" அறிமுகப்படுத்தினார். அதற்கு எட்டு வகையான வழிகளான "இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தியானம், தாரணை, சமாதி" என்பவைற்றை வகுத்து, "அஷ்டாங்க யோகம்" எனப் பெயரிட்டார். இதனையே பதஞ்சலி யோக சாஸ்திரம் என்னும் மற்றொரு பெயரிலும் அழைக்கின்றார்கள். சாதகன் இதற்கு நல்ல ஆரோக்கியத்துடன் கூடிய கட்டுறுதியான உடல் அமைப்பைப் பெற்று அதன் பலமான அடிப்படையிலே யோக சாதனைகளைத் தொடங்க வேண்டிய அவசியத்தை இது வலியுறுத்திக் கூறுகின்றது.

அஷ்டாங்க யோகத்தின் உச்சக்கட்ட சிகரமான "சிவ–சக்தி சம்யோகம்" என்னும் நிலையைச் சாதகன் எய்தி, உயிர் நாடியை, ஸ்தூல உடலின் தொடர்பை தேகத்திலிருந்து முழுமையாகத் துண்டித்து, சர்வ சுதந்திர சாஸ்வத நிலையை அடைவதையே குறிக்கோளாகக் கொண்டுள்ளது. மேலும் துணிவும் இயற்கையின் புதிர் நிறைந்த அதன் மர்மங்களை அறிந்து கொள்ள

வேண்டும் என்கின்ற ஆர்வமும் துடிப்பும் மிக்க சாதகனை இம்முறை உற்சாகப்படுத்தியது. மனிதனைப் பரவசப்படுத்தும் பல வகையான சவால்கள் நிறைந்த இந்த யோக முறை அண்ட சராசரங்களைப் பற்றிய உண்மைகளை அறிந்து கொள்ள ஊக்கப்படுத்தியது. இதற்குக் கட்டாயம் குரு முகாந்திரப் பயிற்சி முறை அவசியம் தேவை. வேத–உபநிஷத் காலங்களில் மிகவும் பிரசித்தி பெற்று விளங்கிய இம்முறை, மக்களிடம் அமோக வரவேற்பினைப் பெற்றுச் சிறந்து விளங்கியது. காரணம் விரைவில் பலனளிக்கும் ஒரு புதிய மார்க்கமாக திகழ்ந்தது. அஷ்டாங்க யோகப் பயிற்சியில் தலை சிறந்த ரிஷிகள் குருவாக அமர்ந்து தன்னலமில்லாமல் யாதொரு பிரதிபலனும் எதிர்பாராமல், யோக வித்தையைத் தங்களிடம் பயின்ற மாணவர்களுக்கு கற்றுக் கொடுத்தனர். ஆனால் கால வெள்ள ஓட்டத்தில் இதன் அருமை பெருமைகள் யாவும் மங்கிப் போய் அதனுடய மிச்சம் தான் இன்று நம்மிடையே எஞ்சியுள்ளது. இதற்கு முக்கியமான காரணம் யாது எனில் வேத உபநிஷத் காலங்களில் நிலவியது போன்ற சுபிட்சமான சூழ்நிலை தற்காலத்தில் முற்றிலும் இல்லை என்பது தான் உண்மையாகும்.

அஷ்டாங்க யோகத்தைச் சிரத்தையுடன் அப்பியசிக்கும் சாதகன் இதனால் அடையும் பலன் முதலில் "சித்த விருத்தி நிரோதம்" மூலம், சித்த சலனம் எனப்படும் எண்ண குவியல்களினால் அலைபாயும் மனம் தடுத்து நிறுத்தப் படுகின்றது. அதன் பின் "மனோ சாந்தி" என்கின்ற நிலையை அடைய முடிகின்றது. மனிதனின் சூட்சும சரீரத்தினுள்ளே மறைந்து கிடக்கும் சூட்சும சக்கரங்களான மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞா ஆகிய இவையனைத்தும் தூண்டுதல் பெற்று "ஷட் சக்கர சித்தியின்" மூலம் "குண்டலினி மகா சக்தி" என்கின்ற நிலையை எட்ட முடிகின்றது.

குண்டலினி சக்தி

குண்டலினி சக்தியைப் பற்றி ஒரு வார்த்தை இங்கு கூற வேண்டிய அவசியம் உள்ளது. எந்த ஒரு அஷ்டாங்க யோகப் புத்தகத்தையும் புரட்டிப் பார்த்தோமேயானல் குண்டலினியைப் பற்றி மிகவும் விரிவான முறையில் எடுத்துக் கூறியிருப்பார்கள். "குண்டலினி" உறங்கிக் கொண்டிருக்கும் "பாம்பு" எனவும், தகுந்த சாதனையின் மூலம் அதனை விழித்து எழச்செய்யும் போது குண்டலினி சக்தி அடியுண்ட நாகத்தைப்போல் மூலாதாரத்திலிருந்து சீறி எழுந்து உச்சியை நோக்கி மேல் எழும் எனவும் பலவிதமாக வருணித்து

அதி முக்கியத்துவம் வாய்ந்த விஷயமாக கூறியிருப்பார்கள். குண்டலினி சக்தியை விழித்து எழச் செய்யும் முயற்சியில் சாதகன் வெற்றி அடைந்து விட்டால், அதுவே மிகப் பெரிய இமாலாய சாதனை எனக்கூறிக் கொள்வார்கள். அதே போல ஏழாவது சக்கரம் என்றழைக்கப்படும் சகஸ்ராரத்தை சாதகன் தொட்டு விட்டால் அதையும் ஒரு மிகப் பெரியச் செயற்கரியச் செயல் என அஷ்டாங்க யோகம் பயிலுவோர்கள் கூறிக் கொள்வார்கள். உண்மையில் குண்டலினி சக்தியும், சகஸ்ரார சித்தியும் ஆன்மிக பயணத்தின் தொடக்க நிகழ்வேயாகும். குண்டலினி சித்தியின் மூலம் "மனோ லயமும்" சகஸ்ரார சித்தியின் மூலம் "மனோ மவுனம்" ஆகிய நிலைகளையே எட்ட முடிகின்றது.

## பஞ்ச ஆகாசங்கள்

அஷ்டாங்க யோக பயிற்சி யோகிகள் கூறிக் கொள்வது போல் அவ்வளவு பெரிய சாதனையே அல்ல. அவை யாவும் சாதனையின் தொடக்கத்தின் முதல் படிகளேயாகும். அதற்கும் மேல் பல முக்கிய படிகளைத் தாண்டிச்செல்ல வேண்டிய கடினமான நிலைகள் உள்ளன. குண்டலினி சக்தி என்பது பூதாகாசத்தின் வலிமையான புவியீர்ப்புச் சக்தியைத் தாண்டிச் செல்வதற்குத் தேவைப்படும் ஒரு மகா சக்தி ஆகும். "பஞ்ச ஆகாசங்கள்" என்றழைக்கப்படும் பூதாகாசம், பிரணவாகாசம், சிதாகாசம், பரமாகாசம், அறிவாகாசம் ஆகிய ஐந்து நிலைகளும் மனித தேகத்தின் உள்ளே சூட்சுமான முறையில் அமைந்துள்ளன. இவ்வைந்து நிலைகளில் பூதாகாசம் தான் மிகவும் வலிமையானது. இதனைத் தாண்டிச்செல்வது என்பது பிரம்மப் பிரயத்தனமான காரியமாகும். இயற்கை மனிதனை ஸ்தூல உடலின் பிடியில் நிரந்தரமாக கட்டுப்படுத்தி வைத்திருக்கும் இரும்பு வலையைத் தாண்டிச் செல்வது என்பது அவ்வளவு எளிதான செயல் அல்ல. எனவே குண்டலினி சக்தி என்பது பூதாகாசத்தைத் தாண்டிச் சென்று அதன் அடுத்த கட்ட நிலையான பிரணவாகாசத்தை அடைவதற்குத் தேவைப்படும் ஒரு நிலை. பிரணவா–காசத்தில் சாதகன் பிராணசக்தியை (ஜீவசக்தி) தன் உடலிருந்து சிதறிச் செல்ல விடாமல் தடுத்து அதனை முழுவதும் தனக்குள்ளேயே சேமித்து வைத்து கொள்ளப் பயன்படும் ஒரு யோக முறையாகும். அஷ்டாங்க யோகத்தில் சாதகன் அடைய வேண்டிய பரமாகாசத்தைப் பற்றியோ அல்லது அதற்கும் அடுத்த நிலையான அறிவாகாசத்தை தொட வேண்டிய அவசியத்தைப் பற்றியோ எடுத்து கூறப்படவேயில்லை.

## விசுத்தி – விண்வெளி சக்கரம்

மேலும் ஹடயோகிகள் விசுத்தியை ஒரு சாதாரணமான சக்கரமாகத்தான் எடுத்துக் கொள்வார்கள். அதற்கு அடுத்த நிலையான

"ஆக்ஞாவை" குறிவைத்துத்தான் செல்வார்கள். உண்மையை சொல்ல வேண்டுமானால் "விசுத்தியை" வெற்றி கொள்வது என்பது மிகவும் கடினமான செயல் ஆகும். விசுத்தி தான் ஜீவ–பிரம்ம ஐக்கியத்தின் திறவு கோலாகும். மனிதனுக்கு நன்மையளிக்கும் பல விஷயங்கள் அங்கு அடங்கியுள்ளன. மனிதனின் தொண்டையின் நடுமைய பகுதியை அலங்கரிக்கும் "விசுத்தி" தான் "ஆகாய தத்துவம்" அல்லது விண்வெளி சக்கரமாகும். விசுத்தியில் நிலைத்து நிற்பது என்பது ஆகாயத்தில், விண்வெளியில் சஞ்சாரம் செய்வதற்கு ஒப்பாகும். அதுவே பூதாகாசத்தில் புவியீர்ப்பைத் தன்வயப்படுத்தி உடம்பை ஒரு புள்ளியில் நிறுத்தும் ஒப்பற்ற நிலையாகும்.

நவீன காலத்து விஞ்ஞான யுகத்தில் அறிவியல் கருவிகளின் துணையுடன் விண்வெளியில் சுற்றித்திரியும் விண்வெளி வீரர்கள் நடத்தும் (Space Walk) ஆகிய சாகச நிகழ்ச்சிகள் விசுத்தியில் சஞ்சாரம் புரிவதையே குறிக்கும். நம்முடைய பண்டைய கால யோகிகளும், சித்தர்களும் எந்தவிதமான புறக்கருவிகளின் துணையின்றி சர்வ சாதாரணமாக நினைத்த மாத்திரத்தில் விண்வெளியில் சஞ்சாரம் புரிந்து பல அரிய சாதனையைப் படைத்துள்ளார்கள் என்பதனை இக்காலத் தலைமுறையினர் அறிந்து கொள்ள வேண்டும். பஞ்ச பூதங்களில் "ஆகாயம்" என்பது தனிப்பட்டது. அதன் இரகசியம் சொல்ல ஒண்ணாதது. மற்ற நான்கு பூதங்களான பிருத்வி, அப்பு, தேயு, வாயு ஆகியவை இவை அனைத்தையும் ஒன்று சேர விடாமல் தனித்தனியே பிரித்து வைப்பது ஆகாயம் தான். ஆகாயத்தை (விசுத்தி) வெற்றி கொண்டு விட்டால், ஏனைய நான்கு பூதங்களும் ஒன்று சேர்ந்து விடும். இதன் மூலம் பிரம்ம சிருஷ்டியின் தத்துவத்தை தாண்டிச் சென்று விட முடியும் என்பது நன்கு புலனாகின்றது. இத்துணை மகத்துவம் வாய்ந்த விசுத்தி ஸ்தானமே ஸ்ரீ வித்தையில் "திருநீலகண்டம்" என்றழைக்கப்படுகின்றது. இதன் அருமை பெருமை அனைத்தையும் நாயன்மார்கள் தேவார திருப்பதிகத்திலே பக்தி ரசம் சொட்டப், பரவசப்பட்டுப் பாடியுள்ளனர்.

## மனித தேகத்தின் மூன்று சுழல் நிலைகள்

எனவே, "ஆக்ஞா" என்பது "விசுத்தி" சக்கரத்திற்கு கட்டுப்பட்ட ஒரு நிலையாகும். ஆக்ஞா மனிதனின் ஜன்ம சிறையாகும். "ஆக்ஞா" என்கின்ற சொல், "கட்டளை, உத்திரவு, கீழ் படிதல் அல்லது கட்டுப்பட்டு அடங்கி நடத்தல் என்கின்ற அடிமை நிலையையே குறிக்கும். இதன் செயலிருந்து எந்த ஒரு மனிதனும் தப்பிச் செல்லவே முடியாது. இயற்கை மனிதனை பூதாகாசத்தின்

வலிமையான ஜட அலைகளின் ஈர்ப்பு சக்தியை ஆக்ஞா மூலம் தொடங்கி வைத்து அதன் இரும்புப் பிடியினுள் உள்ளேயே அவனை என்றுமே தன் கை வசத்திலிருந்து மீறிச் செல்லாமல் இறுக்கமாகப் பிடித்து வைத்துள்ளது. அதுமட்டுமல்லாமல் ஆக்ஞா மனிதனை விழிப்பு நிலை (ஜாக்ரதம்) கனவு நிலை (சுவப்னம்) உறக்க நிலை (சுஷுப்தி) ஆகிய மூன்று நிலைகளுக்குள்ளேயே அடக்கி வைத்துள்ளது. மனிதனுக்கு அண்டசராசரங்களைப் பற்றிய உண்மை நிலைகளையும், சிருஷ்டியின் இரகசியத்தையும், இயற்கையின் புதிர் நிறைந்த அதன் மர்மங்களையும் நாம் அறிந்து கொள்ள அதி உன்னத நிலையாகக் கருதப்படும் "துரிய நிலையை" (அல்லது நான்காவது நிலை எனக் கூறப்படும் – பேருறக்கம்) அடைய விடாமல் ஆக்ஞா சக்கரம் தடுக்கின்றது. ஆக்ஞா தான் மூன்றாவது கண், அல்லது "நெற்றிக்கண்" என்பதாகும். அதுவே "ஞான திருஷ்டி" எனப்படும். அதில் லயித்திருப்பதே யோக நித்திரை என்படும். யோக சாதனையில் ஆக்ஞா மிகவும் அற்புதமான, தகுந்த முறையில் பயன்படுத்திக் கொள்ள வேண்டிய ஒரு கருவி ஆகும்.

ஆனந்தமய கோசம்

மனித உடம்பின் உள்ளே அடங்கியிருக்கும் அனைத்து உடல் அங்கங்களின் அலுவல்களையும், சூட்சுமமான உயிரின் 'அற்புத வெளிச்சத்தையும்,' நாம் முழுமையாக அறிந்து கொண்டு, அதன்படி யோக சாதனையில் எச்சரிக்கையுடன் செயல்படத் துணைபுரிவது ஆக்ஞா சக்கரமாகும். ஆக்ஞாவைத் தாண்டிச் செல்வது என்பது எத்தனை கடினமான செயல் என்பது தற்போது விளங்கும். எனவே ஆக்ஞாவை அடக்குவது அல்லது வெற்றி கொள்ள வேண்டிய அவசியத்தை விசுத்தி சக்கரம் நமக்கு நன்கு புலப்படுத்துகிறது. அஷ்டாங்க யோக சாதனையாளர்கள் இதனை எல்லாம் கவனத்தில் எடுத்துக் கொள்ளவே மாட்டார்கள். அடுத்து அடுத்து, மேல் நோக்கிச் செல்லவே, முயற்சிகள் மேற்கொள்வார்கள். இதற்கு எல்லாம் சிகரம் வைத்தால் போல் அவர்கள் சகஸ்ராரத்தை அடைவதையே இலக்காகக் கொள்வார்கள். உண்மையில் "சகஸ்ராரம்" என்பது தான் "ஆனந்தமயகோசம்." இன்ப சுகத்தை அளித்து, மயக்கத்தை உண்டாக்கும் அனந்தாஸ்பத நிலையை அள்ளித் தருவது (Bliss Wases) சகஸ்ராரமேயாகும். அதுவே சிவ–சக்தி சம்யோகத்தின் உச்சக் கட்ட நிலையாகும். சகஸ்ராரத்தில் "அறிவு" அல்லது "ஞானம்" (Consciousness or Cosmic Wisdom) ஆகிய இவை

இரண்டுக்குமே இடமில்லை. அலை அலையாக அடித்துத் தள்ளும், சுகபோகஆனந்த அனுபவத்திலேயே முழ்கித் திளைத்திருக்கும் ஒருவித இன்ப நிலையை யோக சாதகன் அனுபவிப்பதற்குத் துணையாக உள்ளது. சூன்ய நிலை அல்லது எந்தவித தேவ அனுக்கிரகமும் இல்லாத ஒரு பூமி என்பது இதுவே. தன் சுய முயற்சியை அடிப்படை ஆதாரமாக வைத்துச் செல்லும், தன் உயிரின் மேல் பயணம் வைத்துச் செல்லும் அபாயகரமான முயற்சி இதுவேயாகும். சகஸ்ரார சித்தியில் தொடர்ந்து கவனம் செலுத்தும் ஹடயோகிகள், அதிலே சிக்கிக் கொள்ள நேரிடும் அபாயமும் உள்ளது. ஹடயோகிகள் சகஸ்ரார சித்தியை முடிவாக அடைவதையே இலக்காகக் கொண்டுள்ளனர்.

## மனித சுவாசத்தின் பல்வேறு நிலைகள்

மனித ஜீவிதத்தின் மிக முக்கிய அம்சம் அவன் அன்றாடம் விடும் சுவாசமுறையே ஆகும். எனவே, மூச்சு என்பது உயிருடன் நேரிடையாகத் தொடர்பு கொள்ளும் விஷயமாகும். மூச்சுக் காற்றின் மூலம் பிராண வாயு உட்கொள்ளப்பட்டு ஸ்தூல உடலின் இயக்கத்திற்குக் காரணமான ஜீவசக்தியை அளித்துப் பெற்று உடலின் சீரான தங்கு தடையில்லா ஒட்டத்திற்குக் காரணமாகத் திகழ்கின்றது.

மூச்சை வலுக்கட்டாயமான முறையில் அடக்கிக் கும்பக சாதனை புரிந்து "கேவல கும்பகத்தில்" தொடங்கி "பூரண கும்பக சித்தியை" அடையும் நிலையைப் பெற வேண்டும். அதற்கும் மேல் நிலைகளாக விளங்கும் நிர்விகல்ப சமாதி மற்றும் சித்தாகாசத்தில் சென்று சிவ–சக்தி சம்யோகத்துடன் நிறைவு காண்கின்றது.

யோக சாதனையில் கேவல கும்பக சித்தி அடைதல் என்பது மிகவும் விசேஷமானதும், முக்கியமான ஒரு நிலையுமாகும். நிறையப் பேர்கள் கேவல கும்பகத்தின் அதிமுக்கியத்துவம் வாய்ந்த சாதனையாகக் கருதாமல், ஒரு சாதாரண நிகழ்ச்சியாக எடுத்துக் கொள்வார்கள். இதனை "சித்தி பெறுவது" என்பது கடினமான செயலாகும். கேவல கும்பகம் என்பது இரட்டை சுவாசம் எனப்படும். மனித சுவாசத்தின் மொத்த நீளம் 16 அங்குலமாகும். கேவல கும்பகத்தில் அதன் நீளம் 8 + 8 அங்குலமாக சரி சமமான முறையில் செயல்படுத்தும் வகையாகும்.

| | |
|---|---|
| 8 அங்குலம் சுவாசம் | தேக நினைவுடன் கூடிய சுவாசம் |
| 8 அங்குலம் சுவாசம் | தேவ லோக நினைவுடன் சுவாசம் |

கேவல கும்பகம் – இரட்டை சுவாசம் (Double Breathing)

கேவல கும்பகத்தில் சாதகன் தேவ லோக நினைவுடனும் அதே சமயத்தில் தம்முடைய ஸ்தூல தேக பிரக்ஞை நிலையிலும் இருந்தால்தான் "தெய்வீகக் குரலின்" (Inner Voice of the Divine) அந்தரங்க போதனைகளை அறிந்து கொள்ள முடியும். ஹட யோகிகள் கேவல கும்பகத்தில் நிலைத்திராமல் அதன் அடுத்த தொடர்ச்சியான "பூரண கும்பகத்தைக்" குறி வைத்து அதில் தீவிர கவனத்தைக் செலுத்தினார்கள். பூரண கும்பகத்தில் 16 அங்குல சுவாசமும் தேவ லோக நினைவுடன் கூடிய சுவாசமாக மாறி விடுவதனால் அதில் தங்களுடைய ஸ்தூல தேக உணர்வை முழுமையாக இழந்து விட வேண்டிய நிர்ப்பந்தத்தில் வலுக்கட்டாயமாகத் தாங்களாகச் சிக்கிக் கொள்கின்றனர். தேக உணர்வே முற்றிலும் இல்லாத ஒரு நிலையில் எப்படி ஹட யோகிகளால் தெய்வீக உணர்வைப் பெற இயலும் ? அபாயகரமான மரணத்தைத் தழுவிக் கொண்டுள்ள அந்நிலையில் மீண்டும் பூலோக நினைவைச் சாதகன் பெறுவது என்பது மிகக் கடினமே. ஆகவே பூரண கும்பக சித்தி என்பது "ஜட சமாதி" நிலையிலேயே இறுதி காணும் விதமாக உள்ளது.

அஷ்டாங்க யோகத்தில் சில சாதகர்கள் தேவ சக்தியின் துணையின்றித் தன்னுடைய சுய முயற்சியின் அடிப்படையிலேயே சாதனையில் முன்னேறிச் செல்கிறார்கள். அதனால் சாதனையின் பலா பலனையும் எதிர்பார்த்தே செல்கிறார்கள். பிரம்ம முக்திக்கு தேகாபிமானமே முதல் சத்ரு. மேலும், உருவ வழிபாடோ அல்லது தேவ சக்தியின் அநுக்கிரகத்தைப் பெறும் எந்த வழிமுறையும் இந்த மார்க்கத்தில் கூறப்படாததால் ஹட யோகியின் சுய முயற்சிகள் யாவும் பட்டாபட்ட பாக்கியமாக உள்ளன. இந்தக் குறைபாடு ஸ்ரீ வித்தையில் நிவர்த்தி செய்யக்கூடுவதனால், இது "*நிவர்த்தி மார்க்கம்*" எனவும் நம் முன்னோர்களால் அழைக்கப்படுவதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை.

ஸ்ரீ வித்தையில் சாதகன் தேவ நினைவையும் தேக நிலைகளையும் ஒரே நேரத்தில் அனுபவிப்பதனால் அவனால் தெய்வீக சக்தியுடன் பூரணமாக

இணைத்துக் கொள்ளவும், அதன் மூலம் சிருஷ்டியின் தேவ ரகசியங்கள் அனைத்தையும் அறிந்து கொண்டு "அதுவாகவே" மாறி விட முடிகின்றது. வேத வாக்கின்படி "நீ எதை தெரிந்து கொள்ள முயலுகின்றாயோ அதுவாகவே மாறி விடுகின்றாய்" என்பது அதுவே. இப்பேர்ப்பட்ட மகோன்னத கேவல கும்பக சித்தியை அருளும் தெய்வம் ஸ்ரீ பிரணவ தேவி காமாட்சி அம்பிகையே ஆவாள். சர்வ மங்களம் சித்திக்கும் தாயின் காலடியில் இயற்கையை அடக்கியாளும் அஷ்ட லக்ஷ்மிகளும், அஷ்ட ஐஸ்வரியங்களும் அடங்கிக் கிடக்கின்றன.

அஷ்டாங்க யோக சாதனையில் "*காய சித்தியில்*" பூரண நிலையைப் பெற முடியாவிடினும் அதன் ஒரு பகுதியை அடைய முடிகின்றது. இயற்கையை அடக்கி ஆளும் வலிமை பெற்ற "அஷ்ட மா சித்திகள்" என வருணிக்கப்படும் இவற்றில் "ஈசத்துவம் வசித்துவம்" ஆகிய இவ்விரண்டு முக்கிய நிலைகள் நீங்கலாக மற்ற சித்திகளைப் பெற முடிகின்றது.

சாதாரணப் பாமர மக்கள் இவ்வழி முறையைப் பின் பற்றிச் செல்வது என்பது மிகவும் கடினமான காரியமாகும். சாதகன் சிரத்தையுடன் கடினமான பயிற்சி முறைகளை எல்லாம் துணிச்சலுடன் தனக்கு விடப்பட்ட சவால்களாக ஏற்றுக் கொண்டு பக்குவமான முறையில் அப்பியசிக்க வேண்டிய வழிமுறையாக உள்ளது. இவ்வளவு பகீரதப் பிரயத்தனத்தைச் செய்து சிரமமான வழிகளில் அஷ்டாங்க யோகத்தை மேற் கொண்டாலும், ஸ்ரீ வித்தையில் அடையும் பரிபூரண நிலையை எட்ட முடிவதில்லை. அஷ்டாங்க யோக சாதனையில் "அப்ரேக்ஷ ஞானம்" கிடையாது. "நிர்வாண நிலை" எய்துதல், மற்றும் "சகஜ நிஷ்டையின்" ஆழத்துக்குச் சென்று "*பிரணவ சித்தியில்*" வயப்படுதல் ஆகிய வழிமுறையும் அதில் கூறப்படவேயில்லை. மேலும், மிக முக்கியமாகப் படைப்பின் ரகசியத்தை அறிந்து கொள்ள வேண்டிய "*பிரம்ம விசாரம்*" பற்றிய எந்த வகையான விவரமும் அதில் கிடையாது. ஆகையால் இறைவனுடன் இதன் மூலம் ஒன்றிடும் அபூர்வ நிலைகளான ஐக்கிய பாவம் மற்றும் பிரம்ம பாவத்தில் சென்று. அந்தரங்கத்தில் உறவாடும் "*பரமாகாச நிலை*" மற்றும் "ஆத்ம போதனை அடையும்" பேறு அதில் கிடையாது.

சாதகன் ஆத்மானந்தத்திலேயே லயித்துக் கிடக்கும் "*ஆனந்தாஸ்பத நிலையை*" எய்துவதையே குறிக்கோளாகக் கொண்டுள்ளது. சாதகன் இவ்வளவு அபாயகரமான முறைகளைக் கையாண்டு அதன் பல படிகளில்

மேலேறிச் சென்று, அதன் முடிவில் “ஜீவன் முக்தி” என்கின்ற ஒரு மாபெரும் சித்தியைக் கைவரப் பெற்றாலும், மீண்டும் பூலோகத்திற்குத் திரும்ப வேண்டிய கட்டாயத்தில் தான் உள்ளான். எனவே, பதஞ்சலி முனிவர் ஏற்படுத்திய அஷ்டாங்க யோகம் ஒரு கடினமான பயிற்சி முறையைக் கொண்டுள்ள இந்த மார்க்கம், நவீன காலத்தின் வேகத்திற்கு ஏற்றுக் கொள்ளத் தக்க விதத்தில் அமையவில்லை என்பது இதன் மூலம் தெளிவாகின்றது. இதுவே அமரகவி சித்தேஸ்வரரின் தெளிவான அநுபவ பூர்வமான முடிவாகும்.

விசார மார்க்கம்

விசார மார்க்கம் என்பது வேதம், உபநிஷத்துகள், பிரம்ம சூத்திரம், பகவத் கீதை மற்றும் இந்து மத தர்ம சாஸ்திரங்கள் ஆகிய இவற்றை யெல்லாம் தத்துவ விசாரணையின் மூலம் ஆழ்ந்து சென்று *நாதாந்தம், போதாந்தம், வேதாந்தம், கலாந்தம், சித்தாந்தம், யோகாந்தம்*, ஆகிய ஆறு அந்தங்களிலும் தீவிர விசாரணை புரிந்து “பிரம்மனை” உணர்ந்து கொள்ளும் ஒரு தர்க்க சாஸ்திர மார்க்கமாகும். பண்டைய கால பாரத தேசத்தில் சிறந்து விளங்கும் பலவிதமான புராதன ஆன்மிகக் கிரந்தங்களையும், தொன்மையான யோக நூல்களையும் ஐயம் தெளிவுறக் கற்றுத் தேர்ந்து, கடல் போன்று பரந்து விரிந்து கிடக்கும் எல்லை தாண்டிய பேரறிவினை, ஆத்ம விசாரணை புரிவதனால் இம்முறை “விசார சாகரம்” என அழைக்கப்படுகின்றது. இந்த விசார வழிமுறை மிக கடினமானது. அதற்கு வைதீக சாஸ்திர ஞானத்தில் நல்ல தேர்ச்சியும், பாண்டித்தியமும், இலக்கண, இலக்கிய புலமையும் தேவைப்படுகிறது. பாமரனின் ஈடுபாட்டுக்கு அங்கு அவசியமே இல்லை.

வேதாந்திகள் தத்துவ விசாரணையில் ஆழ்ந்து சென்று சுய அனுபவத்தைப் பெற்று அதன் அடிப்படையில் தான் சுயமாக அனுபவித்த உள்ளுணர்வின் நிலைகளைப் பற்றி விவரித்துக் கூறாமல் தங்களுடைய புத்திக் கூர்மையின் கிரகிப்புத் தன்மையின் சக்தியினால் சாஸ்திரக் கருத்துக்களைக் கோர்வையாக மிகவும் நுணுக்கமான முறையில் விவரித்துக் கூறுவதால் பிரசங்கத்தைக் கேட்கும் மக்கள் அப்படியே சொக்கிப் போய் அமர்ந்து விடுவார்கள். ஆனால் வேதாந்தப் பிரசங்கங்களை நடத்தும் சில வேதாந்திகள் ஒரு சர்வ கலா சாலையில் பாடங்களை நடத்துவது போல் தத்துவங்களை

விளக்கிக் கூறித் தங்கள் "பகுத்தறிவைக்" கொண்டு, ஒரு வேளை அப்படியிருக்கலாம், அல்லது இப்படி இருக்கலாம் என விளக்கம் கூறி, மக்களின் மனத்தில் ஒருவிதமான நிச்சயமில்லாத தன்மையை உண்டாக்கி விடுகின்றனர். "உள்ளுணர்வின்" சுய அனுபவத்தைப் பெறாமல் "பகுத்தறிவைக்" கொண்டு விளக்கும் எந்த வித தர்க்கமும் (வேதாந்தப் பிரசங்கங்கள்) சந்தேகத்தில் சென்று முடிந்து விடும். (Reason always incites doubt) இது தான் உண்மை. இதற்கு மேல் எதுவுமில்லை, என அடித்துக் கூற அவர்களால் முடிவதில்லை.

குரங்கு–பூனை, கயிறு–பாம்பு விளக்கு–எண்ணெய், குயவன்–மண், விதை–மரம் போன்ற தர்க்க சாஸ்திர உவமைகளை வேதாந்த சர்ச்சைகளாக, விவாதங்கள் மூலம் துவக்கி, பல்வேறு சாஸ்திரங்களிலிருந்து மேற் கோள் காட்டி மக்களை அப்படியே ஈர்த்து விடுவார்கள். ஆனால் "*கட்டிக் கொடுத்த சோறும் சொல்லிக் கொடுத்த வார்த்தையும் பல நாள் நிலைக்காது*" என்னும் முது மொழிக்கேற்ப வேதாந்தச் சொற்பொழிவு பாஷ்யங்களால் எந்த வகையான ஆழ்ந்த சிந்தனையையும் மக்கள் மனத்தில் உண்டாக்க முடிவதில்லை.

**அத்வைத விசாரம்**

இதற்கு அடுத்த "பிரம்ம விசார" முறையினைச் சிறப்பாக விவரிக்கும் இந்து மதத்தின் இணையற்ற மூன்று வேதாந்தப் பள்ளிகளைத் தோற்றுவித்த ஆச்சாரியர்கள் ஸ்ரீ மத்வாசாரியார், இராமானுஜர், ஆதி சங்கரர் ஆகியோர் ஆவர். அவர்கள் அருளிய கொள்கைகள் முறையே துவைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம் என்கின்ற பெயர்களில் அழைக்கப்படுகின்றன.

"அத்வைத அனுபவம்" பிரம்ம விசாரத்தில் ஆழ்ந்து சென்று "சகஜ நிஷ்டை" "*தடஸ்த லக்ஷனம்*" (பார்வையின் குறுக்கீடு) 'திரிபுடி' போன்ற ஸ்ரீ வித்தையின் சிறந்த அம்சங்களைப் பற்றி மிக விரிவாகக் கூறி, "விஞ்ஞான மயகோசத்தின்" எல்லையில்லா அகண்டாகார விருத்தியான தெய்வீகப் பேரறிவின் பல்வேறு நிலைகளைத் தீவிரமாக ஆராய்ந்து சென்றாலும், "ஆனந்தமய கோசத்தின்" தடையைத் தாண்ட முடிவதில்லை. காரணம், அங்கு ஆனந்தத்தை அளிக்கும் இன்ப வெள்ளம் ஒருவிதச் சுழல் போல் அலை அலையாக அடித்துத் தள்ளும். அதன் பேரலைகளின் தாக்குதலில் சிக்குண்டு, அதிலே ஆழ்ந்து கிடக்கும் அனுபவத்தை அளித்து, அதற்கு மேல்

கட்டத்திலுள்ள பல நிலைகளைத் தாண்டிச் செல்ல விடுவதில்லை. எனவே, தத்துவ வேதாந்திகளுக்கு, சகல சாஸ்திர ஞானத்தையும் கரைத்துக் குடித்து விட்ட "மனோபாவத்தை" உண்டாக்கி விடுவதால், "ஆத்ம சாந்தி" என்கின்ற ஒரு நிலையோடு திருப்தியை ஏற்படுத்தி விடுகின்றது.

மனித உயிரின் அதி சூட்சும நிலைகளான பரா, பஸ்யந்தி, மத்தியமா, வைகரி மற்றும் நாபி, இருத், கண்ட, ரசனா ஆகிய பல்வேறு நிலைகளைப் பற்றி "சௌந்தர்ய லஹரியில்" விவரமாக எடுத்துக் கூறியிருந்தாலும், முக்கியமாக மானிடனைச் சுற்றியிருக்கும் "பேச்சின்" மர்மங்களை அலசும் விஷயங்களில் "மௌனம்" சாதிக்கின்றது. எதை மனித வர்க்கம் முக்கியமாகத் தெரிந்து கொள்ள மிக ஆவலாக உள்ளதோ அந்த விஷயத்தை எடுத்துக் கூறாமல் தயக்கம் காட்டுகின்றது. சகஜ நிஷ்டையை பற்றிப் பல விஷயங்களை அலசிக் கூறியிருந்தாலும், ஒரு கட்டத்தில் அதன் மேல் நிலையில் அடையும் வைபவங்களைப் பற்றி ஆராயாமல் அப்படியே நின்று விடுகின்றது. காரணம் 'சகஜ நிஷ்டை' என்பது ஆழ்ந்த அனுபவ நிலை, வெறும் விளக்க நிலை அன்று என்றும் கூறலாம்.

| ஸ்ரீ வித்தையில் "சோடச கலையின்" சிறப்பு | | |
|---|---|---|
| பரா | உதிக்கும் **திருமூலத்தில்** | நாபிக்குக் கீழ், அதோமுகத்தில் குதம் குய்யத்தின் தோன்றும் உயிர் மூச்சின் (மூலப் பிராணன்) நில்லா நிலைமை. |
| பஸ்யந்தி | வளரும் **நாபியில்** | உயிரின் வளர்ச்சி, நன்மை அளிக்கும் இடம் நாபியே ஆகும். யோக சாதனையில் "சிக்கெனப்" பிடிக்க வேண்டியது. |
| மத்தியமா | தொடரும் **கண்டத்தில்** | மத்தியமா மானிடனின் திக் பிரமையின் போக்கு. விதியின் வலிய போராட்டம். ஜீவனின் துன்ப கதி. |
| வைகரி | அழிக்கும் **நாக்கில்** | பேச்சின் அலைகளாகச் சுழன்று சென்று மடியும் உயிரின் நசிப்பு. ஜீவனின் அதோகதி. |

| ஸ்ரீ வித்தையில் "நாதோபாசனை சித்தியின்" சிறப்பு | | |
|---|---|---|
| நாபி | பூ சக்கரம் | யோக சாதனையில் தேர்ச்சி பெற்று, **"உயிரின் சீரான வளர்ச்சியை"** ஸ்தூல தேகத்தில் காணுதல் |
| **இருத்** | **இருதயாகாசம் இருதய புண்டரீகம்** | பரமன் உள்ள இருப்பிடம். "ஆருயிர் பேருயிராய்" விளங்கும் ஒப்பற்ற ஸ்தானம். ஜீவன் **"ஒப்பற்ற சிவன்"** ஆகுமிடம். |
| **கண்டம்** | கண்ட சித்தி | ஊர்த்துவ கதி பிரக்ருதி – இயற்கையை அடக்கியாளும் சக்தி பெறுதல். ஆகாயத் தத்துவத்தில் தன்னாட்சி புரிதல். |
| **ரசனா** | அறிவுக் களஞ்சியம் | பரமாகாசம். ஆத்ம ஞானத்தில் **"அறிவின் சுடர்"** சுயம் பிரகாசம் ஆகும் அதில். அருள் ஜோதி வட்டம். "ஜீவ கதியை" நிரந்திரமாக துறந்து "பர கதியை" அடைதல். |

*"ஜகத் மித்யா! பிரம்ம சத்யம்!!"* பிரம்ம சூத்திரத்தின் ஒப்பற்ற நிலையை உணர்த்துபவள் ஜகதாம்பிகையே ஆயினும், தத்துவ விசார வேதாந்தியின் அதீத சாஸ்திர ஞானத்தினால் உண்டாகும் "ஆணவ நினைவின்" காரணமாகவே அதன் பூரணத்துவத்தை எட்ட முடிவதில்லை. எவ்வளவு தான் கற்றறிந்த மேதையாக, அறிஞராக, ஏன் பேரறிஞராக இருந்தாலும் கூட, "பரமாத்மாவின் தாசன்" என்ற எண்ணம் உள் மனத்தில் ஒலித்துக் கொண்டே இருக்க வேண்டும். "தானும் மற்ற பாமரனைப் போல் ஒரு சாதாரண மனிதன் தான்" என்கின்ற உணர்வினை சாஸ்திர ஞானம் அளிக்கத் தவறி விடுவதனால், இயல்பாகவே "ஆணவ நினைவு" குடி கொண்டு விடுகின்றது. பற்றித் தொடரும் இரு வினைகள் எனப்படும் "கரும வினையையும்" தாண்டலாம்! ஏன் அதற்கு அடுத்த "மாயையையும்" தாண்டிச் செல்லாம்! ஆனால் "ஆணவ நினைவு" தாண்டுவது என்பது மிகவும் அரிதான செயல் (துர்லபம்!) "தான் அற்ற நிலையும், எல்லாம் ஈசன் செயல்" என்கின்ற பற்றற்ற உள்ளத்தின் மூலமே அதனை இறைவனின் கிருபையால் மட்டுமே பெறும் பேறாக உள்ளது!

அம்பாள் உபாசனையின் அநுக்கிரகத்தினால் திரோதான சக்தியைத் தாண்டிச் சென்று சோடச கலையில் தேர்ச்சி பெற்று, *மகா சோடச சித்தி, அப்ரோக்ஷ ஞானம்* ஆகிய இவற்றில் சுய அனுபவ ரீதியாக அனுபவிப்பதனால், "*தத்துவ ஞான போதம்*" என்கின்ற நிலையை மட்டும் பெற முடிகின்றது. எனவே அதில் ஆத்ம சாந்தி என்கின்ற நிலையைத் தான் எய்த முடியும். "ஆத்ம போதனை" கிடையாது. பிரம்ம சூத்திரத்தின் மகா வாக்கியங்களாகத் திகழும் "*தத்துவ மசி,*" "*அகம் பிரம்மாஸ்மி,*" "*சர்வம் பிரம்ம மயம் ஜகத்*" என்கின்ற மூன்று மிக பெரிய நிலைகளை "பிரம்ம நிஷ்டையில்" அனுபவித்து உணர்வதில் "சர்வம் பிரம்ம மயம் ஜகத்" என்கின்ற மூன்றாவது நிலையை மட்டுமே எட்ட முடிகின்றது. "ஜீவன் முக்தி" என்கின்ற ஒரு நிலையை, தத்துவ விசார வேதாந்திகளால் தொட முடிந்தாலும், மீண்டும் பூமியில் பிறப்பு என்பது தவிர்க்க இயலாத ஒன்றாக உள்ளது.

## நிஜ-ஆனந்த-போதம்

தற்காலத்தில் உள்ள குறைபாடே ஸ்ரீ வித்தை உபாசனை முறையில் உள்ளவர்கள் அஷ்டாங்க யோகத்தையோ அல்லது அத்வைத விசாரத்தையோ நன்கு அறிந்து கொள்ள எந்த வித முயற்சியையும் மேற்கொள்வதில்லை. அதேபோல் அஷ்டாங்க யோகத்தை அப்பியசிப்பவர்கள் ஸ்ரீ வித்தை உபாசனை முறையைப் பற்றியோ அல்லது அத்வைத விசாரத்தைப் பற்றியோ தெரிந்து கொள்ளாமல் அப்படியே ஒதுக்கித் தள்ளி விடுகின்றனர். அத்வைத விசாரனை மேற் கொள்ளும் வேதாந்திகளும் எந்த வித மாற்றமும் இல்லாமல் அப்படியே உள்ளனர். இந்து தருமத்தின் முப்பெரும் பிரிவுகளாக விளங்கும் இம்மூன்று மார்க்கங்களையும் ஒருங்கிணைந்து அவற்றில் கூறியுள்ள எல்லா யோக வழி முறைகளையும் தெளிவாகப் புரிந்து கொண்டு தகுந்த முன்எச்சரிக்கையுடன் சென்றால்தான், ஜீவ-பிரம்ம ஐக்கியத்தின் எல்லா வித இரகசிய கதவுகளையும் எளிதில் திறந்து, அதில் முழுமை காணமுடியும். அங்குதான் இறைவனின் கிருபையால் பூரணத்துவத்தையும் எட்ட முடியும் என்பது ஆன்றோர்கள் வாக்காகும்.

எனவே, மேலே சொல்லப்பட்ட அனைத்துக் கிரந்தங்களிலும் எடுத்துக் கூறப்பட்டுள்ள சாராம்சத்தை, அதன் ரசத்தை எல்லாம் பிழிந்தெடுத்து, அதனை ஒரு திவ்விய அமிர்தமாக்கி, சுலபமான முறையில் அதன் நுணுக்கங்களை நாம் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும் என்கின்ற உயர்ந்த நோக்கத்தில்

அமரகவி சித்தேஸ்வரர், சிந்தூரன் மூல கணபதியின் கருணையினால் "நிஜானந்த போதம்" என்கின்ற புத்தகத்தில், உள்ளங்கை நெல்லிக் கனி போல் அதன் சுவை சிறிதும் மாறுபடாமல் நமக்கு அளித்துள்ளார்கள்.

அமரகவி சித்தேஸ்வரர் சுய அனுபவத்தில், தான் அனுபவித்த தெய்வீகப் போதனைகளை, எவ்வாறு தமக்கு நேரிடையாக இறைவனால் எடுத்துச் சொல்லப்பட்டனவோ, அதே மாதிரியான தேவ பாணியில் சொல்கிறார். மேலும், அதன் நடை முறையைச் சிறிதும் மாற்றாமல், அப்படியே திருத்தம் ஏதுமில்லாமல், அதன் தெய்வீக ரசத்தின் சுவையில் மாற்றமில்லாமல், நமக்குக் கிரந்தமாக அருளியிருக்கின்றார். சில இடங்களில் அதன் கோர்வையான வரிசை முறையில்லாமலும், அங்கு ஒன்றும், இங்கு ஒன்றும், தத்துவ போதனையின் விளக்கங்கள் இடத்திற்கு இடம் வித்தியாசமாக எடுத்துக் கூறியிருப்பதனால், வாசகர்கள் சில நேரங்களில் சிரமப்படலாம், தடுமாற்றமடைய நேரிடலாம். அவை எல்லாம் பக்த கோடிகள் சிரத்தையுடனும், முழு கவனத்துடனும், கருத்தூன்றிப் படிக்கும் போது, ஜீவித வாழ்க்கைப் போராட்டத்தின் பல விறுவிறுப்பான கட்டங்கள், இயற்கை விடுக்கும் அறை கூவல்கள், துணிந்து எதிர் கொள்ள வேண்டிய சவால்கள், போன்ற சுவாரசியமான விஷயங்களை ஆழ்ந்து சிந்தித்துப் படிக்கும் போது, நம்மை அறியாமல் அதில் ஓர் ஈடுபாடு உண்டாவதைக் கண்கூடாக அறிந்து கொள்ளலாம்.

மேலும், இதனை ஒரு புத்தகத்தைப் படிப்பது போன்று ஒரே மூச்சில் அவ்வளவு சுலபத்தில் படித்து விட முடியாது. அதற்குக் காரணம் என்னவென்றால் "மனிதன் தன்னுடைய சொந்த ஜீவித வாழ்க்கையில் மிகவும் நுணுக்கமான முறையில் ஒன்றுடன் மற்றொன்று பின்னிப் பிணைந்து கிடக்கும் உடல், உயிர், ஆத்ம சக்தி மற்றும் இவையனைத்தும் பிரபஞ்சத்துடன் கூடிய நெருங்கிய தொடர்பு ஆகிய இவற்றைப் பற்றிய மர்மமான விளக்கங்களை, ஒவ்வொருவரும் தங்களுடைய சொந்த சுய அனுபவத்தின் மூலம் மட்டுமே தெரிந்து கொள்ள வேண்டிய விஷயமாகும். பகிரங்கமாக எடுத்துச் சொல்ல முடியாத பிரம்ம இரகசியமாக உள்ள போது, அதனைக் கட்டுரைகளாக எடுத்து விளக்கிக் கூறுவது என்பது நிச்சயம் முடியாது. அது மனிதச் செயலே அல்ல." மனிதனின் ஜன்மாந்திர நெடிய வாழ்க்கைப் பயணத்தின் போது ஏற்படும் சம்பவங்கள், எதிர் பாராமல் உண்டாகும் திடீர்த் திருப்பங்கள், மாற்றங்கள் ஆகிய

அவனுடைய அன்றாட அவலங்கள் மற்றும் அவற்றின் கொடுமைகளிலிருந்தும், துயரங்களிலிருந்தும் தப்பிச் செல்லும் மார்க்கங்கள் இவையே மீண்டும் ஒருமுறை அவனுடைய சொந்த நன்மைக்காகவே அமரகவி சித்தேஸ்வரால் எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

தெய்வீகச் சக்தியின் பல்லாயிரக் கணக்கான வருடங்களின் "மௌனம்" கலைந்து, நவீன கால வெள்ள ஓட்டத்தின் அலைகளால் அடித்துச் செல்லப்பட்டுள்ள மனிதனின் ஜீவித வாழ்க்கையில் உறைந்து போய்க் கிடக்கும் அவனுடைய தெய்வீக உணர்ச்சியைத் தட்டி எழுப்பி, ஜட தேக நினைவுகளிலே கட்டுண்டு கிடக்கும் அடிமைத் தளையிலிருந்து விடுவித்து, "தேவ உணர்வினைப்" பெறும் அந்த ஒப்பற்ற தெய்வீகத் திருப்பணிக்காகவே, இறைவனால் விரும்பித் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு மாமனிதர் தான் "அமரகவி சித்தேஸ்வரர்" ஆவார்.

அமரகவி சித்தேஸ்வரர் மனித குலத்தின் மேன்மைக்கு ஆற்றியுள்ள சேவை மகத்தானது. ஈடு இணையற்றது. இந்த அகிலத்தில் வாழும் ஒவ்வொரு மனிதனும் அமரகவி சித்தீஸ்வரரின் செயற்கரிய அருந்தொண்டிற்கு மிகவும் கடமைப் பட்டவர்களாவார்கள். தொன்மையான ஆன்மிக கலாசார பாரம்பரியம் மிக்க நம்முடைய பாரத தேசத்தின் அருமை பெருமைகளை மீண்டும் ஒரு முறை, இந்த நவீன விஞ்ஞான காலத்தில், இறைவனின் கருணையினால் மனித சமுதாயமனைத்தும் நன்மை அடையும் பொருட்டு, விளக்கிக் கூறப்பட்டுள்ளது "நிஜானந்த போதம்" என்னும் ஒப்பற்ற நூலின் சிறப்பம்சமே ஆகும்.

# யோகம் அதி அற்புதக் கலை

யோகம் என்பது விஞ்ஞானத்தின் ஒரு விந்தையான பிரிவைச் சேர்ந்த அறிவியலின் கண்டுபிடிப்புக் கலையாகும் (Super Science) தற்காலத்தில் வாழும் புதுமைவாதிகள் இக்கருத்தைக் கேட்டு எள்ளி நகையாடலாம், ஆனால், வருங்கால உலகம் யோகத்தை ஓர் அற்புத விஞ்ஞான அறிவியல் கலையாக நிச்சயம் அங்கீகரித்து ஏற்கப் போகின்றது என்பதுதான் நிதர்சன உண்மையாகும். அதுவே மனத்தின் பிடிமான சக்தி. அந்தச் சூழ்நிலைக்குத் தகுந்தவாறு கட்டளையிட்டு, மனத்தின் இயக்கத்திற்குப் பிரதான காரணமாகத் திகழும் புலன்கள், அதன் ஒற்றுமையின் மேல் நம்பிக்கையுடன் வருங்காலத்தில் செயல்படும் என்பது தீர்க்க தரிசனமாகும்.

## விஞ்ஞானத்தின் ஆய்வுகள்

விஞ்ஞானம் அதன் இரண்டு கணக்கீடுகளின் அளவில்தான் முக்கியமாக உள்ளது.

1. அனுமானம் மற்றும்
2. விஷயத்தைக் கிரகித்து அறிந்து கொள்ளுதல்

ஆகிய அதன் இரண்டு முக்கிய அம்சங்களின் மேல்தான் விஞ்ஞான மேதையின் திறமையான தீவிர ஆராய்ச்சி மற்றும் புறக் கருவிகளின் துணையுடன் செயல்படும் பலன்களின் அடிப்படையில் அமைந்துள்ளது.

இயற்கையில் காணப்படும் எல்லா வகையான, பலவிதமான பௌதிக ஜட வஸ்துக்களைக் (Physical, Matter and Biological effects) கூர்ந்து ஆய்வுகளை மேற் கொண்டு, அதன் சூட்சுமங்களை எல்லாம் வெளிப்படையாக அறிவிக்கவே விஞ்ஞானம் அதன் நேரம் அனைத்தையும் செலவிட்டுக் கொண்டுள்ளது.

## அறிவியல் பயன்கள்

எனவே விஞ்ஞான அறிவியல் என்பது "எல்லாவற்றையும் சிருஷ்டிக்கக் கூடிய" திறமை படைத்த ஒன்று அல்ல. இயற்கையின் புதிரான விஷயங்களைத் தேடி, அலைந்து சென்று கண்டு பிடித்து, ஒளிவு மறைவு இன்றி அதன் உண்மைகள் எல்லாவற்றையும் வெளிப்படையாகவே வெளியிட்டு,

மனிதனின் அன்றாட லௌகீக வசதியான வாழ்க்கைக்கும், (material comforts) தேகத்தின் சுகபோகக், குதூகலமான வாழ்க்கைக்குத், தேவையானவற்றைக் கண்டுபிடித்து, அவனுக்குச் சௌகரியமான உலக வாழ்க்கையை நன்கு அனுபவிக்க உதவிகள் புரியும் விதமாகத் தான் விஞ்ஞானம் அமைந்துள்ளது.

இத்தகைய ஆடம்பரமான வாழ்க்கையில் மனிதனை வாழக் கட்டாயப் படுத்தித் தூண்டி விட்டு, அதன் மூலம் கண்டபடி அலைந்து திரியும் புலன்கள், எதற்கும் கட்டுப்பட மறுக்கும் எண்ணங்கள் ஆகிய மன அழுத்தத்தின் வலிமையான பிடிக்குள், "சித்த விருத்தியில்" அவனை நிரந்தரமாக அடிமைப் படுத்தியுள்ளது.

யோகத்தின் தாத்பரியம்

யோகத்தின் தாத்பரியமே இதற்கு முற்றிலும், மாறுபட்ட, நேர் விரோதமான ஒன்று தான். அது தான் சாதகன் தனக்குள்ளேயே ஆழ்ந்து சென்று, இயற்கையின் துணையையும் உடன் உதவிக்கு அழைத்துக் கொண்டு, இடைவெளி விடாமல் வரிசையாகத் தோன்றும் எண்ணத்தின் மூலமாக மூச்சு விட்டு சுவாசித்துக் கொண்டிருக்கும் உயிர் வாழியான "தன்னைப் பற்றியும்," (To Know Thyeself) "தன் சுய ஆத்ம சொரூபத்தையும்" (Human Self) அறிந்து கொள்வதாகும். உடலையே யுத்த களமாக்கித் தனக்குள்ளேயே போர் தொடுத்துச் சண்டையிட்டுக் கொண்டுள்ள ஜீவ-மரணப் போராட்டத்தில் ஸ்தூல தேகத்தை மரணத்தின் கோரமான பிடியிலிருந்து மீட்டு, வெற்றி வாகை சூடி, உயிரின் சாஸ்வத நிலையான கால, நேரம் மற்றும் கட்டுக்கு அடங்காத (Time and Space) நிலையைத் தாண்டிச் செல்வது தான் யோகத்தின் உண்மையான உட்கருத்தாகும்.

"யோகம்" என்பது இயற்கையினுடைய கட்டளைக்கு இணங்கிக் கண்டபடி அலைந்து திரியும் புலன்களை வெளியே செல்ல விடாமல் தடுத்து, உள்ளுக்குள்ளேயே இழுத்து வைத்து, தன் ஆத்மனின் எல்லைப் பரப்பிலே 'ஒடுங்கிக் கிடத்தல்' என்பதாகும். அதுவே மனித முயற்சியின் வாய்ப்புகளுக்கு அப்பால் சென்று தாக்குதல் புரிந்து, அதனுடைய உண்மையான கொள்கையில் நிலைத்து நிற்பதாகும். அப்படிப்பட்ட கடினமான சாதனைகளை எல்லாம்

சாதகன் யோக சாதனையால் கஷ்டப்பட்டு எதிர் கொள்ள வேண்டியிருந்தாலும், "யோகம்" பல யுகங்களைக் கடந்து இன்றும் புதுப் பொலிவுடன், பசுமை மாறாத இளமையின் பூரிப்புடன் 'சாஸ்வதமாக' நிலைத்துள்ளது.

### உயிர்த் தத்துவத்தைப் பற்றிய கொள்கை

இப்பொழுது அமரகவி சித்தேஸ்வரர் தன்னுடைய "உயிர்த் தத்துவத்தைப் பற்றிய" விவரமான கருத்துக்களை எடுத்துக் கூறப் போகிறார்கள். மேலும் மக்கள் அனைவரும் இதனைப் பற்றி நன்கு சிந்தித்துத் தன்னுடன் விவாதம் புரிய அமரகவி அவர்கள் அழைக்கும் அறைகூவலும், இந்தப் புத்தகத்தின் மூலமாக வெளியிடப்படுகின்றது. அமரகவி சித்தேஸ்வரரின் உயிர்க் கொள்கையின் தத்துவமனைத்தும் நவீன காலத்தில் ஏற்றுக் கொள்ளத் தக்க விதமாகவும், மனித இனத்திற்கு எல்லா வகையிலும் பொருத்தமுடையதாகவும், எளிய நடையில் சிறந்த விளக்கங்களுடன் கூடிய பல சிறப்பு அம்சங்களை உள்ளடக்கியதாகவும் உள்ளது.

### யோகத்தைப் பற்றிய தற்காலப் படிப்பு

தற்காலத்தில் மனிதனின் யோகத்தை பற்றிய படிப்பு பனி மூடிய திரையைப் போல் ஒரு தெளிவான கண்ணோட்டமில்லாமலும், குழப்பங்கள், சந்தர்ப்பவாதங்கள் நிறைந்த அவனுடைய வாழ்க்கையின் ஒவ்வொரு தோற்றத்திலும் செயலிலும் உறுதியற்றுக் காணப்படுகிறது. "யோகத்தின் தேவை" அவனுடைய ஜீவ வாழ்க்கையில் எவ்வளவு தூரம் முக்கியப் பங்கு வகிக்கும் என்கின்ற விஷயம் இன்னும் அவனுடைய மனத்தின் பிடிமான சக்திக்குள் அகப்படாமலே உள்ளது. "யோகம்" என்பது எங்கேயோ வெளியிலிருந்து வாங்கி வைக்கும் பொருள் அல்ல. அது அவனுக்குள்ளேயே அடங்கிக் கிடக்கும் அவனுடைய சொந்த உடைமை தான். இன்னும் சொல்லப் போனால் அவன் அதைச் சரியாகத் தட்டிப் பார்க்கவில்லை, அவ்வளவு தான்.

### யோகத்தின் தேவை

இன்றைய நவீன காலத்தில் நாம் கண்கூடாகக் காணும் பலதரப்பட்ட மக்கள் அனைவரும் (வாழ்க்கையில் எல்லா வசதிகள், சௌகரியங்கள் உடையவர்களா யிருந்தாலும்) பொதுவாகவே வாழ்க்கையில் அமைதியற்று மன விரக்தியில், தன்னிடமிருந்து ஏதோ ஒன்று பறிக்கப்பட்டு ஏமாற்றம் அடைந்தது போல் நிம்மதியிழந்து தத்தளித்துக் கொண்டுள்ளார்கள். இந்த மாதிரியான

இக்கட்டான சந்தர்ப்பத்தில் தான் மக்களை சரியான பாதையில் கொண்டு செல்ல வேண்டிய யோகத்தின் அவசரத் தேவைக்காகக் "குரல் எழுப்பி" இன்றைய சமுதாயத்தில் அதன் அற்புத ஆற்றலை விழித்து எழச் செய்து, நன்கு பரவலாக்கி அதன் "சிறப்புப் பார்வையை" உலக மக்களின் கவனத்திற்குக் கொண்டு செல்ல வேண்டியது, இந்து மத தர்மத்தின் அவசியமாகும்.

திட சித்தம்

இவை அனைத்தின் அடித்தளமே முதலில் யோகத்தைத் தன்னுள் நிச்சயப்படுத்தி, சமுதாயத்தின் எல்லா பிரச்சனைகளுக்கும் தீர்வு காண முடியும், என்கின்ற நம்பிக்கையை உருவாக்கி, அதன் பலமான அஸ்திவாரத்தின் சாரத்தில் பின்பற்றிப் பங்கு கொள்ளச் செய்ய வேண்டும். மேலே சொல்லப்பட்ட அனைத்து விஷயங்களும், அமரகவியினுடைய குடும்ப வாழ்க்கையிலும் ("கிரகஸ்த தர்மம்") சிக்கல்கள் பல நிறைந்து தர்ம சங்கடமான சூழ்நிலையில் அவர் தத்தளித்துக் கொண்டிருந்தாலும், அவர் பிறர் உதவியின்றி சுயமாக ஜீவிதத்தின் துன்பங்களில் சிக்கிக் கொள்ளாமல், அதன் கஷ்ட நஷ்டங்களைச் சிறிதும் பொருட்படுத்தாமலும், "எல்லாம் ஈசன்" செயல் என எண்ணி அதினிலிருந்து தள்ளி, விலகியே நின்றிருந்தார்! ஜீவித வாழ்க்கையின் போராட்டத்தில் அமரகவியிடம் இருந்த ஒரே சொத்து யாதெனில் "அசைக்க முடியாத திட நம்பிக்கை" (Determined Will) ஒன்று தான்! எதற்கும் கலங்காத நெஞ்சத்தை அவர் பெற்றிருந்தார்! மேலும் அதற்குச் சமமாகத் தன் அன்புக்குப் பிரியமான உள்ளத்தையெல்லாம் கொள்ளை கொண்டு, தன் பூஜையை அலங்கரித்த "மூல கணபதி" தெய்வத்தின் மீது அளவில்லாத நம்பிக்கை கொண்டிருந்தார் அவர்! அது தான் அவர் இறைவனின் மீது கொண்டிருந்த "பரபக்தி" என்கின்ற தெய்வீக உபாசனை முறையாகும்! அமரகவிக்கு அளிக்கப்பட்டிருந்த எல்லா வகையான யோகத்தின் பலன்களுக்கும் அந்த "தெய்வீகத் திருவருள் கடாட்க்ஷம்" தான் முக்கியக் காரணமாகும்!

நால் வகை யோகம்

கீதையில் யோகம், நான்கு நிலைகளை உள்ளடக்கியதாகக் கூறப்பட்டுள்ளது. அவை முறையே பக்தி யோகம், கர்ம யோகம், ராஜ யோகம், மற்றும் ஞான யோகம் என்பதாகும். இந்த நால்வகையான யோகத்தில் "ஞான யோகம்" மற்றெல்லாவற்றையும் விட மிகவும் கடினமான பாதையாகும்.

சித்தர்கள், முனிவர்கள், மகரிஷிகள் போன்ற மகான்களே இதில் சிக்கித் தவிப்பார்கள் எனில் சாதாரண வேதாந்திகள், தத்துவ மேதைகளைப் பற்றி சொல்லவே முடியாது. இறைவனே ஞானத்தின் சொருபம். விவேகத்தின் கடல். சர்வ பிரபஞ்சத்தின் "பஞ்ச கிருத்திய" இயக்கமான சிருஷ்டி, ஸ்திதி, சங்காரம், திரோதானம், அனுக்கிரகம், இவையாவும் இறைவனின் பேரறிவான "அகண்டாகார விருத்தியில்" தான் சுழன்று கொண்டே உள்ளது. ஞான யோகமார்க்கம் என்பது "பிரம்ம சொருபம்." இறைவனையன்றி வேறு ஒருவராலும் சரிவர எடுத்துக் கூற இயலாது. இறைவனே தன் விருப்பத்திலுள்ள (Choosen Recipient) சித்த மகா புருஷர்களுக்கு மட்டும், பிரம்ம உபதேசத்தை தெய்வீகக் குரல் மூலம், நேரிடையாக எடுத்து சொன்னால்தான் (Divine guidance) விளங்கிக் கொள்ள முடியுமே தவிர, வேறு எந்த வித மனித முயற்சிகளும் பலன் அளிக்காது

ஞான யோகம்

அமரகவி சித்தேஸ்வரர் இறைவனின் பூரண அனுக்கிரக சித்தத்தின் பேரருளால் ஞான யோகத்தின் உச்சக் கட்ட சிகரத்தை எல்லாம் தொட்டு, அதனைச் சிறப்பாக விளக்கி கூறுவதில் தேர்ச்சியும் பெற்றுள்ளார். அமரகவி தனக்கென்று ஓர் "ஆன்மிக குருவை," அவர் வாழ்நாளில் தேடிச் சென்றது கிடையாது. எல்லா ஞானமும் சுயமாகத் தானே கடும் சாதனையில், "ஸ்ரீ வித்தை உபாசனையின்" உயர் நிலையில் தேடிக் கொண்டது தான்.

தெய்வீக சொப்பன தரிசனங்கள்

அவருடைய தெய்வீக விக்ரக ஆராதனையில் தீவிரமாக "ஐக்கிய பாவத்தில்" ஈடுபட்டுக் கொண்டிருந்த தொடக்க காலத்தில், அனுதினமும் ஏராளமான "தெய்வீகக் கனவுகள்" சொப்பன தரிசனத்தின் மூலம் பல ஆண்டுகள் விடாமல் தொடர்ச்சியாக தெய்வம் அருள் புரிந்தது. அந்த அருள் சக்தியினால் தோன்றிய தெய்வீகக் கனவுகள் மூலம் பல "ஆத்ம போதனைகளை" திவ்விய தரிசனத்தின் மூலம் "சித்தி" பெறும் பாக்கியத்தைப் பெற்றார். சித்த புருஷர்கள் பல பேர்கள் அமரகவியுடன் நெருங்கிய நட்புடன் பழகினார்கள். அவருக்குப் பல சந்தர்ப்பங்களில் அவர்கள் சிறந்த ஆன்மிக வழி காட்டிகளாகவும், விளங்கினார்கள். அத்துடன் மட்டுமல்லாமல் அன்புடன் ஆதரவு அளித்து "அனுக்கிரகம்" புரிந்து, பற்பல பேருதவிகளைச்

செய்துள்ளனர். பூர்வ ஜன்ம புண்ணியங்களின் பலனால் அவருக்கு அத்தகைய உதவிகள் குறையாமல் கிடைத்து வந்தன.

### துரிய நிலை – திரு மூச்சு

கனவு நிலையில் தெய்வீக அருள் சக்தியின் சொப்பன தரிசனங்களைப் பெறுவது என்பது சாதகன் "பூத பிரக்ஞையில்" ஸ்தூல தேக வாழ்க்கையின் மனத்தின் அழுத்தங்களை (Mental Stress) யெல்லாம், யோக சாதனையின் மூலம் தானாகவே தாண்டி மேலேறிச் செல்லும் போது தான் உண்டாகும். அதற்கென்று ஒரு "புனிதமான குரல்" ஒன்று உண்டு. அது இயற்கையின் கைவசம் எப்பொழுது வேண்டுமானாலும் பயன்படுத்திக் கொள்ளும் வகையில் தயார் நிலையில் உள்ள இருப்பாகும். "கனவு நிலை" என்பது சாதகன் ஸ்தூல தேக வாழ்க்கையின் நியதிகளுக்கு உட்பட்டிருந்தாலும், அதனுடைய சக்தியின் ஆற்றல்களனைத்தும் தெய்வீக சொப்பன தரிசனத்தின் மூலம் "துரிய நிலையின் அனுபவங்கள்" (Thuriya State – The Fourth Dimension) அனைத்தும் கிடைத்துவிடும். எவன் ஒருவன் அதன் சக்தியின் ஆற்றல்களை யெல்லாம் "திரு மூச்சு" அல்லது தேவ பிராணன் "வியானன்" முலம், தனக்குள்ளேயே தட்டிப் பார்க்கின்றானோ, அவனுக்குத் தான் "யோகம்" அதன் ஆக்கப் பூர்வமான பாதையில் தொடர்ந்து சரியாக வழி நடத்திச் செல்லும்.

### சங்க நாதம்

அமரகவி தன்னுடைய ஆன்மீக அனுபவங்களில் தொடர்ந்து முன்னேறிச் சென்று கொண்டிருந்த போது, திடீரென ஒருநாள் இரவு, அவர் சற்றும் எதிர்பாராத திவ்விய மங்கள அற்புதமான "ஆன்மிக நிகழ்ச்சி" ஒன்று அவர் வாழ்க்கையில் பெரும் திருப்பு முனையாக அமைந்தது. அது தான் தேவ லோகத்தின் வரவேற்பு ஒலியான பரமாத்மாவின் "சங்க நாதம்" கம்பீரமாக அவருள் ஒலித்து, பூலோகத்தின் ஓர் ஒப்பற்ற ஜீவனின் விடுதலையை, சர்வ பிரபஞ்சத்திற்கும் பறை அறிவித்தது. அதுதான் அமரகவியின் தற்கால ஆன்மிக வாழ்க்கைத் தொடரின் முதல் கட்டத் தொடக்க நிலையாகும்.

### நாத பிரம்மத்தின் திவ்விய நிலை

"யோக நிஷ்டையில்" பரமாத்மாவின் "சங்க நாதம்" ஒலிப்பது என்பது சுத்த பிரணவத்தின் சகல சம்பத்துக்களும், அஷ்ட ஐஸ்வர்யங்கள்

அடங்கிய "ஓம்காரம்" எனப்படும் "நாத பிரம்மத்தின்" திவ்விய நிலையாகும். மானிடனின் குரல் ஓசையின் சூட்சுமத்தினுள்ளேயே அடங்கியிருக்கும் அது தான் "பேச்சு." சப்த சுவரங்களின் இனிமையான ஏழு வகையான ராகங்களனைத்தையும் "யோக நிஷ்டையில்" அனுபவித்து அந்த ஆனந்தத்தின் பேரின்பப் பெருவெள்ள அலைகளில் ("ஆனந்தாஸ்பதம்") நீந்தி அதனை கடந்து செல்லுதல், (அல்லது) இயற்கையின் சகலத்தையும் சிருஷ்டிக்கக் கூடிய உணர்ச்சியைத் தூண்டி விருத்தி செய்யும் சக்தி, மற்றும் பூலோகத்தின் எல்லாவித ஜீவன்களின் தோற்றத்திற்கும் காரணமான காதலின் மேல் உண்டாகும் காம உணர்ச்சியின் இன்ப அலைகளின் மேல் நீந்திச் சென்று, அதனையும் கடந்து செல்லுதலாகும். மனித ஜீவிதத்தின் மேல் மனிதனாக இருக்கும் போதே "யோக நிஷ்டையில்" ஒலிக்கும் புதிரான "தெய்வீகக் குரல்" தான், அவன் மேல் சூட்டப்படும் எல்லா வகையான ஒலிகளுக்கெல்லாம் பிரதானமாக விளங்கும் மணி மகுடமாகும்.

பூதாகாசம்

பொதுவாக யோக சாதனையின் உச்சக்கட்ட நிலையைத் தொடும் போது பலவித மங்கள வாத்தியங்களின் இன்னிசைகளான "பேரி, மத்தளம், மிருதங்கம், கிண்கிணி, விணை, உடுக்கை, யாழ்" போன்ற தேவ கானங்கள் ஆகும் இசையின் ஒலியை உணருகின்றனர். இவை எல்லாவற்றிற்கும் தலைமைக் கீரிடமாகவும், பிரதானமாகவும் விளங்கும், "பவித்ரமான சங்கநாதம் தான்," "தெய்வீகக் குரலாகும்." அதுவே "பூதாகாசம்" என்கின்ற உடலின் ஈர்ப்புச் சக்தியை எதிர்த்து போர் தொடுத்தல் என்தாகும். அல்லது பூலோகத்தில் ஜீவ-மரண போராட்டத்தில், ஜீவனின் மரணத்தை நிரந்தரமாக வென்று, வெற்றி வாகை சூடும் பவித்ரமான நாத ஒலி ஆகும்.

தேவ ரகசிய போதனை

நாபிக்குக் கீழ் நோக்கி, "அதோமுகத்தில்" செல்லும் வருத்தம் தோய்ந்த ஜீவனின் மூச்சுக் காற்று, அவன் அன்றாடம் கவளம், கவளமாக உட்கொண்டு விழுங்கும் உணவு மற்றும் மல ஜல விசர்ஜனமாக உடலிலிருந்து வெளியேறும். அதன் மர்மத்தில் தான் மனிதனின் "ஜீவ சக்தியின்" ஆற்றலனைத்தும் ஏறக்குறைய நசிந்து, தொலைந்து போய், அவனை வலிமை

குன்றியவனாக்கிச் செயல் இழக்கச் செய்துள்ளது. தொண்டைக் குழியும் (மிடறு) அதன் பங்குக்குப் புரட்சி செய்து "சுக்கிலத்தின் அலைகள்" அனைத்தையும் நாபிக்குத் தீப்பற்றி எரியும் திரவமாக ("ஜாடராக்னி") விரட்டி, பசி, தாகம் என மாற்றி அதன் கொடுமைக்குள் ஜீவனை நிரந்தர அடிமையாக்கி, அதில் மிதந்து கிடக்கும் மிச்சத்தைத்தான் ஜீவனில் "காம உணர்ச்சியை" அனுபவிப்பதற்கும் இடமளிக்கின்றது.

மனிதன் தன்னுடைய ஜீவித வாழ்க்கையில் அன்றாடம் நிஜத்தை வெளியே தள்ளி, உடலில் பொய்யைப் பரப்புகின்றான். இதுவே "பிரகிருதியின்" விளையாட்டாகும். பதினாறு வயதில் இளமையின் பூரிப்புடன் பூத்துக் குலுங்கும் வலிமை மிக்க, கட்டுறுதியான உடல் அமைப்புடன் திகழ்ந்த அவன் தேகம், இதன் காரணமாகவே ஏழு பருவங்களில் நலிவடையத் தொடங்கித், தள்ளாத முதுமையில் நாடி தளர்ந்து, நோய் வாய்ப்பட்டு, முடிவில் மரணத்தை தழுவுகின்றது. அதிலும் முக்கியமாகக் "கபத்தின்" பங்கு மிகவும் விசித்திரம். மலத்தின் விஷமான அது உடலிலிருந்து நீங்காமல் உள்ளேயே தங்கி, விஷ வாயு மூலம் பிராணனைத் தாக்கிக் கொல்கின்றது.

பிரணவாகாசம்

இதுவரையில் யாரும் சொல்லாத இவ்விஷயத்தை அமரகவி சித்தேஸ்வரர் இங்குக் குறிப்பாகத் தெளிவுபடுத்துவதற்குக் காரணம் இறைவனே, மக்களுக்கு இதனை நேரிடையாகத் தெளிவு படுத்த வேண்டும் என விரும்பியதால்தான். அமரகவி சித்தேஸ்வரர் இங்கு குறிப்பாக அனைத்தையும் சுட்டிக் காட்டுவதன் நோக்கமே, ஒவ்வொரு மனிதனும் தனக்குள்ளே மிகவும் தீவிரமாக இதனைப் பற்றி நன்கு சிந்தித்து, மனித குலத்துக்கு அமரகவி சித்தேஸ்வரர் ஆற்றியுள்ள மகத்தான சேவையின் மதிப்பை சரியாக உணர்ந்து கொள்ள வேண்டும் என்பது தான்!

எப்பொழுதும் பேச்சில் ஒலிக்கும் மின்னணு ஆற்றலான "புரோட்டானை" படிப்படியாக சென்று அடையாளம் கண்டுபிடித்து, மேல் தூக்கி ஆத்மாவுடன் இணைத்துக் கொள்ளும் போது தான், ஜீவ வாழ்க்கையின் துன்பம் மிகுந்த சம்பவமனைத்தும் ஒரு முடிவுக்கு வந்து, அதற்கும் ஒரு படி மேலாகப் புனிதமான "தெய்வீகக் குரல்" (The mystic whisper) அவன் மீது "யோக நிஷ்டையில்" அலங்கரிக்கப்படுகின்றது. இதன் அனைத்து மீட்பும்

தொண்டைக்குழியில் ("விசுத்தியில்") தான் அடங்கியுள்ளது. அதுவே "பிரணவாகாசம்" அல்லது தேவபிராணன் வியானன் என்பதாகும். அதுவே இரண்டு உதடுகளில் ஒளிந்து மறைந்து, பின் அதனைத் தேடிக் கண்டு பிடித்து விளையாடும் ஆட்டமேயாகும்.

நாதாந்தம்

அமரகவி சித்தேஸ்வருடைய விசேஷ வலிமையானது, அவர் தனக்குள்ளே "பேச்சின்" மூலம் (நிவர்த்தி) பிராயச்சித்தம் செய்து கொண்டு அதன் பின், "புதிரான குரலின்" (The Sacred Inner Voice) மேல் மிதந்து செல்லும், அந்த தெய்வீக அனுபவ நிகழ்ச்சியே வேதத்தில் சிறப்பாக கூறப்படும் ஆறு அந்தங்களான "நாதாந்தம்" – நாதத்தின் முடிவு காண்பது, என்கின்ற அந்த திவ்விய நிலையைத் தன்னுள் பூரணமாக அனுபவித்து உணர்ந்தது தான்.

ஆறு அந்தங்கள்

| ஆறு அந்தங்கள் | |
|---|---|
| 1 | நாதாந்தம், |
| 2 | போதாந்தம், |
| 3 | வேதாந்தம், |
| 4 | சித்தாந்தம், |
| 5 | கலாந்தம், |
| 6 | யோகாந்தம் |

ஆகிய இவ்வாறு அந்தங்களின் யோக சாதனையில் அதி தீவிரமாக ஆராய்ந்து சென்று "உயிரின் இறுதி" காண்பது, என்கின்ற அந்த திவ்விய நிலையே "ஸ்ரீ வித்தையின்" பூரணத்துவத்தின் முடிவில் எட்டப்பட்டும் ஒரு மகத்தான "அதி மானுஷ" நிலையாகும்.

ஒவ்வொரு மனிதனும் அவசியம் ஸ்தூல தேக வாழ்க்கையின் பரிணாம வளர்ச்சியை அதன் இறுதி வரைக்கும் விடாமல் சென்று, இழந்த ஆன்மீக சக்தியை "ஸ்ரீ வித்தையின் பூரணத்துவம்," என்கின்ற அதன் வழியில் சென்று தான் திரும்பப் பெற்றுக் கொள்ள முடியும். அதுவே "கண்ட சித்தி" என வேதத்தில் விசேஷமாக அழைக்கப்படுகின்றது.

கண்ட ஸ்தானம் - கழுத்துப் பகுதி

மானிட உடலிலே மிகவும் புனிதமான தெய்வீக அங்கம், போற்றத் தகுந்த ஸ்தானம் "கழுத்துப்" பகுதியாகும். அதுவே "கண்ட ஸ்தானம்" எனவும் "விசுத்தியின் இருப்பிடம்" எனவும், "மேல் மூலம்" எனப் பலவகையான சொற்களால் வேதத்தில் குறிப்பிடப் படுகின்றது. அதுவே யோகத்தில் வெற்றி காணும் போது "கண்ட சித்தி" அல்லது திரு நீலகண்டமாகும்.

"கடல்தனில் அமுதொடு கலந்த நஞ்சை
மிடற்றில் அடக்கிய வேதியனே
இதுவே எம்மையாளுமாறு ஈவதொன்று
அதுவோநின்னருள்ளாவதுமுறையரனே!"

- திருஞான சம்பந்தர்

அமுதம் = சுக்கிலத்தின் வீரிய அலைகள், மிடறு = கழுத்து பாகத்தில் அதுவே, "நஞ்சாக" மாறி ("ஜாடராக்னி") பசி, தாகம் என ஜீவனை வருத்தி எடுக்கும் கொடும் பாவியாக மாறிக் கொல்கின்ற அந்தத் துன்ப கதியிலிருந்து தங்களைக் காத்து "அமுதம், நஞ்சாக" மாறாமல் மிடற்றில் தடுத்து, "கண்ட சித்தியில்" அருள் புரிந்து அடியவரைக் காக்கும், இறைவனின் கருணையை நினைத்து நினைத்து, மனமுருகி இப்பாடலின் மூலம் தெளிவாக எடுத்துக் கூறியுள்ளார் திருஞான சம்பந்தர்.

அண்டஞ் சுருங்கில் அதற்கோர் அழிவில்லை
பிண்டம் சுருங்கில் பிராணன் நிலைபெறும்
உண்டி சுருங்கில் உபாயம் பலவுள
கண்டங் கறுத்த கபாலியு மாமே

- திரு மூலர்

திரு மூலரின் தத்துவ விசாரணைகள் யாவும் பாடல் வடிவம். அமரகவி சித்தேஸ்வரரின் தத்துவ விளக்கங்கள் அதன் நேரடி அனுபவ விமர்சனங்களாக இறைவனால் அருளப்பட்டுள்ளன.

அமிர்த நீர் – சுக்கில அலைகள்

அமிர்த நீரின் கலப்பு நாக்கில் கலக்கும் போது சுவை உண்டாகிறது. இதுவே "ஷட் ரசம்" என்கின்ற அறுவகை சுவை ருசி பார்த்து உண்பதற்கும், உணவின் ருசியைச் சுவைக்கவும் உதவி புரிகின்றது.

நஞ்சு என்பது பித்தம். மானிடனின் உடலில் இதுவே வாதம், பித்தம், கபம், ஆகிய "மும் முர்த்திகளின் ஆட்டம்" எனப்படுகின்றது. பித்தம் என்பது விஷ நீரில் நஞ்சுண்டு கிடக்கும் ஜீவன். பித்தம் முழுவதும் கெட்டிப்படுவது என்பது (Consolidation) தான் பாம்பின் கொடிய விஷமாகும். மானிடனில் அதன் அளவு சீரான முறையிலிருக்கும் போது பித்த நீர் தான் பசி, தாகம் உணர்வைத் தூண்டும் "ஜாடராக்னி" அல்லது "பசி, தீபாக்னி" என யோக சாஸ்திரத்தில் அழைக்கப்படுகின்றது. உடலின் வீரியமான அமிர்த நீரான "சுக்கில அலைகளை" ஒய்வில்லாத புலன்களின் சலனங்கள் தாக்குதல் புரிவதால், அதுவே பித்த நீராகின்றது. பாம்பின் பித்த நீர் அடர்த்தியாக இருப்பதால் அதன் நச்சுத் தன்மையை மற்ற உயிரினங்களால் தாங்கிக் கொள்ள முடிவதில்லை. நஞ்சு உடலில் ஏறிய உடன் இறந்து விடுகின்றது. ஆனால் தன் இரையைத் தின்னும் பாம்பு எந்த பாதிப்பையும் அடைவதில்லை.

கண்ட சித்தி

இயற்கையை நன்கு கலக்கி அதனை கிளர்ச்சி பெறச் செய்து, அதன் புதிர்களை விடுவிக்கக் கூடிய "கண்ட சித்தி" தான் சித்தர்களின் ஆன்மீக வாழ்க்கைப் பயணத்திற்குப் (பேருதவியாக உள்ளது. அதுவே அவர்கள் பூலோகத்தில் ஜீவ வாழ்க்கைக்கு உட்பட்டவர்களாக வாழ்ந்து கொண்டிருந்தாலும், தனக்குள்ளே ஆழ்ந்து செல்வதற்கும், அல்லது சித்தர்கள் தங்களுடைய ஜீவித வாழ்க்கையின் முடிவுக்குப் பின்னால் தேவலோகத்தின் புனிதமான ஆன்மீக வாழ்க்கையிலிருந்தாலும், ஆக இரண்டு விதமாக எப்படியிருந்தாலும் சகலத்தையும் தன்பால் வசீகரித்து ஆன்மீகத்தின் உச்சக் கட்டமாகத் திகழும் ஆதித்ய மண்டலத்தைக் "கண்ட சித்தியின்" வழியாக சென்று, "ஞான திருஷ்டியின்" மூலம் தான் உணர்ந்து கொள்கின்றனர். அனுபூதி பெற்ற மகான்கள் இகலோகத்தில் வாழ்ந்துக் கொண்டிருந்தாலும், "கண்ட சித்தியின்" மூலம் தான் சிருஷ்டியின் அற்புதங்களை எல்லாம் அறிந்து கொள்கின்றனர்.

அகக்கண் – ஞான திருஷ்டி

யோகிகள் உட்கார்ந்த இடத்திலே அல்லது எங்கிருக்கின்றார்களே அங்கிருந்தபடியே, அனைத்து உலகங்களிலும் என்ன நடக்கின்றது என்பதை "அகக்கண்" மூலம் அறிந்து கொள்ளும் ஆற்றல் படைத்தவராவார்கள். அவர்கள் அதற்கப்பாலும், வெகு தூரம் அதி சூட்சும கதியில் ஆழ்ந்து சென்று, இறைவன் சிருஷ்டியைத் தொடங்குவதற்கு முன், இந்த பிரபஞ்சம் அண்ட கோளங்கள், கிரகங்கள், நட்சத்திர மண்டலங்கள், ஆகிய இவையாவும் எப்படியிருந்தது என "ஞான திருஷ்டியின்" மூலம் அறிந்து கொள்கின்றனர். ஏனெனில் அது உடலோ, மனமோ, உயிரோ முற்றிலும் செயல்படவோ, சஞ்சாரம் செய்ய முடியாத இடத்தில் மனித அறிவு, புத்தி இவைகளுக்கும் எட்டாத இயற்கையின் சொல்ல ஒண்ணாத ஒரு அற்புத நிலையாகும். ஆகவே "கண்ட சித்தி" தான், சர்வ லோகத்திலும் சஞ்சாரம் புரிய அருள் புரியும் ஓர் ஒப்பற்ற ஸ்தானமாகும்.

பிராண சக்தி

உயிரைச் சுற்றியிருக்க கூடிய மூச்சு (பிராணன்) மாத்ருகா மாத்திரையின் (20 M. P.) அளவில் "கேவல கும்பகத்தில்" தானாகவே அந்த குறியீட்டின் அளவை எட்டும் போது தான் கண்ட சித்தி கைகூடுகின்றது. யோக சாதனையின் முதிர்ந்த பக்குவத்தில் ஏற்படும் அந்த கும்பக நிலையை, தொட்டுத் தொட்டு செல்லும் அதன் ஆற்றலைக் குறிப்பாகக் கவனத்தில் கொண்டு, ஏறக்குறையத் தேவை ஏற்படும் போதெல்லாம் அதன் மூலம் கையிருப்பில் சேமித்து வைக்கப்பட்டுள்ள "பிராண சக்தியைப்," பயன்படுத்திக் கொண்டே, கண்ட சித்தியின் உள் ஊடுருவிச் செல்ல வேண்டும். இதுவே சுவாமி அமரகவி கையாண்ட சுய அனுபவ முறையின் ரகசியமாகும்.

ஆதித்ய மண்டலம்

பூலோகத்தில் காணப்படும் சகலவிதமான ஜீவ ராசிகளும் ஆதித்ய மண்டலத்தின் கதிரியக்கத்தினால் தான் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கின்றன. அந்த சூரிய மண்டலமே, பூமிக்கு அப்பால், மனிதனின் கைகளுக்கு எட்ட முடியாத வெகு தூரத்தில் உள்ளது. சூரிய மண்டலத்துக்கு அப்பால் உயிர் வாழ்க்கை முற்றிலும் ஆதரிக்க முடியாத ஒரு விஷயமானதால், மனிதர்கள்

அதற்கு மேல் செல்ல முடியாமல் தடை விதிக்கப்பட்ட நிலமாகும். இன்றைய நவீன விஞ்ஞானம், இயற்கையின் இந்த அபூர்வ நிகழ்ச்சியை ஆராய்ந்து கண்டுபிடிக்க வேண்டிய ஒரு சவாலாக அளிக்கப்பட்டிருந்தாலும், அதற்கு அவ்வளவு தூரம் நெருங்கிச் செல்லக் கூடிய வாய்ப்பே எக்காலத்திலும் இல்லை என உறுதியாகக் கூறலாம்.

பிரம்ம சிருஷ்டி

அங்கு தான், சூரியன், சந்திரன், பூமி, நட்சத்திரம் என அதன் வரிசைக் கிரமம் அனைத்தும் ஒரு முடிவுக்கு வந்து, சர்வமும் ஒன்றிணைந்துள்ளது, அதாவது சிருஷ்டியில் சூரியன், சந்திரன், பூமி போன்ற சூரிய குடும்பங்கள் விண்ணில் தனித் தனியாகப் பிரிந்து கிடப்பதுபோல் அல்லாமல், 84 இலட்சம் யோனி பேதங்களையும் உள்ளடக்கிய பல வகையான உயிரினங்கள், அதன் ஜீவித வாழ்க்கையில் நிரந்தரமாக அல்லாமல், படைப்புத் தத்துவத்தின் நியதியின்படி ஓர் உயிரினத்திலிருந்து மற்றொரு உயிரினத்துக்கு, மாறி, மாறி கூடு விட்டுக் கூடு பாய்ந்து செல்லும் பரிணாம வளர்ச்சி பேதத்தில் உள்ள சகல ஜீவராசிகளையும் உள்ளடக்கி உள்ளது. சர்வ பிரபஞ்சத்தின் தோற்றத்திற்கு முன் காரணமாய் விளங்கிய, சிருஷ்டியின் சொல்ல ஒண்ணாத ஒரு அற்புதமான நிகழ்ச்சி நடைபெறுமிடத்தில், இந்துமதத் தத்துவத்தின் கொள்கையில் இதுவே “பிரம்ம சிருஷ்டி” இயங்கும் விதம் எனத் துல்லியமாக நிருபித்துக் கூறிய ஒரு அதி மானுஷ சித்தர் அமரகவி சித்தேஸ்வரர் ஆவார். இயற்கையின் சூட்சுமம் அனைத்தும் ‘ஞான திருஷ்டியின்’ மூலம் உணர்ந்து, பூலோகத்தின் புதிரான ஜீவித வாழ்க்கையின் ரகசியங்கள், மற்றும் மனிதனுக்குள்ளேயே புதைந்து கிடக்கும் அற்புத ஆற்றல் படைத்த தேவ சக்தியின் ரகசியங்களை எல்லாம் வெளிப்படையாக எடுத்துக் கூறாமல் உள்ளார். அமரகவி சித்தேஸ்வரர் தத்துவ விஷயங்களில் ஒரு சிலவற்றை மட்டுமே பகிரங்கமாக மக்களுக்கு எடுத்துக் கூறியுள்ளார். பிரம்ம சிருஷ்டியின் ரகசியங்களை முழுமையாக விளக்கி கூறாமல், அவற்றை எல்லாம் வேண்டுமென்றே ஒரு தெய்வீக நோக்கத்துகாக மறைத்து வைத்துள்ளார்.

பிங்களை நாடி

மனித தேகத்தின் ஆதிக்கத்தினுள்ளே மறைந்து கிடக்கும் சூட்சும நாடியான “பிங்களை” தான் ஜீவித ரகசியங்களை எல்லாம் தன்னுள்

கெட்டியாகப் பிடித்து வைத்துள்ளது. அற்புதமான தெய்வீக ரகசியங்களையும், இயற்கையின் புதிர் நிறைந்த மர்மங்களை எல்லாம், மனிதன் அறிந்து கொள்ள வேண்டும் எண்ணுகின்ற விருப்பம் தீவிரமாக அவனுக்கு உண்மையாகவே இருந்தால், யோக சாதனையால் "பிங்களை நாடியின்" துணையின் மூலம் சகலத்தையும் உணர்ந்து கொள்ளலாம், என அமரகவி சித்தேஸ்வரர் இதன் வாயிலாக மக்களுக்கு ஓர் உபாயத்தை எடுத்துக் கூறியுள்ளார்.

## அனைத்து உலகங்களிலும் பிரதிபலிக்கும் ஒரே பேரறிவு

### எங்கும் பரவியுள்ள இறைவன்

ஜீவனின் ஸ்தூல தேகத் தோற்றம் மற்றும் இவற்றின் ஒழுங்கான இயக்கம் இவ்விரண்டுக்கும் காரணமான இறைவனே, அந்த இரண்டுக்கு-மிடையே இயற்கையின் சிருஷ்டித் தத்துவதிற்கு ஆதரவு அளிக்கச் செய்து, தகுந்த உதவிகளும் புரிகின்றான்.

பிறந்த குழந்தையாக இருந்த போது இருந்த பொலிவு நிறைந்த இந்த போலியான மாயையின் முன்புற கோலாகலத்தொடக்கம் அதன் பின்னால், முடிவில் இருண்டு கிடக்கும் துக்கம் தோய்ந்த துன்ப கதி, ஆகிய இதனிடையே நாம் தான் மனிதனாகச் சிக்கி "பிரம்ம சிருஷ்டியில்" அகப்பட்டுக் கொண்டு பரிதாபத்துக்குரியவராக உள்ளோம். அத்வைத சித்தாந்தத்தின் "ஜகத் மித்யா" என்கின்ற இந்த உலக மாயையின் முன்புற கோலாகலமான தொடக்கத்தைப் பற்றி மிகவும் விரிவாக எடுத்துக் கூறுகின்றது.

### பறவைகளின் நியதி

பறவைகள், விலங்குகள் மற்றும் பல்வேறு வகையான உயிரினங்கள் யாவும் அவற்றுக்குப் பின்னால் பொருந்தியுள்ள ஒரு நல்ல குணமானது (virtue) அவை என்றுமே ஒரு சிறு அளவுக்குக் கூட இயற்கையின் நியதியிலிருந்து மாறுபடாமல் அதன் வாழ்க்கை முறைகள் யாவும் இயற்கையை ஒட்டியே பெருமைப்பட்டுக் கொள்ளும் அளவுக்கு திருப்திகரமாக உள்ளது. இவற்றின் மேன்மைகள் அனைத்தும் மனிதனிடம் மட்டும் காணாமல் விலகிப் போய், அதற்குப் பதிலாகப் புரிந்து கொள்ளும் சக்தியான 'புத்தி' (Intellect) என்கின்ற விசேஷப் பேறு அளிக்கப்பட்டு அதில் மிக நேர்த்தியாக 'நான்' (EGO) என்கின்ற தனிப்பட்ட தேக உணர்வும் (Body Awareness – Superb 'I') அவனுக்குக் கொடுக்கப்பட்டுள்ளது. அதுவே 'மனசாட்சியாக' பூதாகாசத்துடன் சேர்த்து அவனில் கைவிடப்பட்டு அவனுடைய பழைய நிலைமைக்கு ("சாஸ்வத பதம் நித்திய சுகம்") மீண்டும் திரும்ப முடியாத படி ஆகியுள்ளான்.

## விலங்குகளின் தேவ பிரக்ஞை நிலை

காட்டில் வசிக்கும் புலி தன்னுடைய இரையை வேட்டையாடி உணவு உண்ட பின்பு ஓய்வு கொள்கிறது. மிருகங்கள் அதன் பசி உணர்வுக்கு அப்பால் ஒரு சாதுவான ஜந்துவாக, இறைவனின் செல்லப் பிராணியாக உள்ளது. அதற்குப் பிறகு அந்த மிருகமே "தேவ பிரக்ஞை" என்கின்ற நிலைக்குக் கவரப்பட்டு செல்லப் பட்டுள்ளது. ஆனால் மனிதனிடம் மட்டும் இது எப்படி நேர் விரோதமாக முரண்பட்டு செயல்படுகின்றது என்பது விந்தையிலும் விந்தை. ஆகையால் மனிதன் தனக்குள்ளேயே தனிமையாக்கப்பட்ட ஒருவனாக உள்ளான்.

## உணர்ச்சி மய மிக்க மனிதன்

நம்மிடத்திலே 'ஆணவம்' அல்லது தேகாபிமானம் உறுதியாகவும் மிகவும் ஆழமாகவும் அமைக்கப்பட்டுள்ளது. உடல் அதனுடைய குற்றத்தினால் மனிதனின் உணர்ச்சியை நன்கு கலக்கி அவனைப் பொங்கி எழச் செய்து "உணர்ச்சி மயமாக்கி" மேன்மேலும் பல தவறுகள் புரிவதற்குக் காரணமாகின்றது. அதன் வேகம் தணிந்து குறையும் போது அதுவே அவனுடைய உள்ளுணர்வாக விவேகத்துடன் செயல்பட்டாலும், இயற்கையானது மனத்தின் எண்ண அலைகளின் மூலம் இடைமறித்து சிந்திக்கும் திறனை நாசம் செய்து, எப்பொழுதும் அவனை "ஆத்மாவிலிருந்து" தனியாகப் பிரித்து வைத்து விடுகின்றது. மனிதனின் ஓய்வில்லாத எண்ண ஓட்டங்களின் ("சித்த விருத்தி" என அழைக்கப்படும்) காரணமாகவே "பிராண சக்தி," "மனம்" இரண்டும் ஒன்றிணைவது இல்லை. மனித வாழ்க்கையின் மிகவும் முக்கியமான இந்த பிரச்சனை பற்றித்தான் அனைவரும் சிந்தித்துப் பேசிக் கொண்டுள்ளார்கள்.

## தேவ நிலையான பேச்சின் ஆற்றல்

மானிட வாழ்க்கையின் பொக்கிஷமாகத் திகழும் "பேச்சின் ஆற்றலில்" அதி சூட்சுமமாகச் சுற்றிக் கொண்டிருக்கும் "தேவ நிலை" தான் மனித வாழ்க்கையின் ஜீவித கதையின் ரகசியச் சுரங்கமாகும். இதுவரை எந்த வேதாந்தமும் மனித வாழ்க்கையின் பின்னணியில் திரை மறைவாக இருக்கும் இந்த முக்கியமான விஷயத்தைப் பற்றிக் குறைந்தபட்சம் அவனுடைய அனுகூலத்திற்காவது, அல்லது நன்மைக்காகவோ தொட்டுச்

சொன்னதில்லை. தெய்வீக நிலையுடன் ஒத்து போகும் மிருகங்கள் அளவுக்காவது மனிதன் தன் அளவுக்கு அதிகமாக மிதமிஞ்சிப் போயிருக்கும் சுமைகளைக் (துன்பங்களை) குறைத்துக் கொள்ள முயற்சிகளை மேற் கொள்வதில்லை. அதற்குப் பதிலாக "ஆணவம்" நம்மீது வட்டமிட்டு, மனத்தை வாட்டி வதைத்துக் கொண்டேயிருந்து பொய்யான சொந்தம் கொண்டாடிக் கொண்டுள்ளது. "அகங்காரம்" என்பது மனிதனில் புரிந்து கொள்ளும் சக்தியை இழக்க வைத்து, மனவேதனையை அதனுடைய போலியான வரட்டு கௌரவத்தினால், பன்மடங்கு அதிகரிக்கச் செய்து உடலின் "பிராண சக்தியின்" இழப்புக்கு முக்கியக் காரணமாக உள்ளது.

### சடலத்தின் வேட்கை

ஆகவே எப்பொழுது ஒருவன் மூச்சு விட்டு சுவாசம் புரிய வேண்டிய கட்டாயத்தில் உள்ளானோ, அதன் மூலமாகவே புலன்கள் உடலிலிருந்து வெளியேறிச் சென்று, அலைந்து, அதனுடைய மோசமான கட்டமனைத்தும் மனத்தின் நினைவலைகளின் மீது பிரதிபலிக்கச் செய்து அவனை அறியாமை என்கின்ற கடலில் தள்ளிவிட்டுச் சென்று விடுகின்றது.

மனிதனின் கண்களிலேயே ஆணவம் "ஆசையாகப்" பற்றிக் கொண்டுள்ளது. இவ்வுலகில் கண்ணில் காண்பதெல்லாம் தனக்கே சொந்தமாக்கிக்கொள்ள வேண்டிய ஆர்வம், உந்தல், வேட்கை ஆகிய இவையனைத்தும் அவன் நினைவைச் சுற்றியே வட்டமிட்டுக் கொண்டுள்ளன. அந்த மாதிரியான சமயத்தில் 'சடலம்' (corpse) தான் அவனை வரவேற்று உபசரித்து, விருந்தளிப்பவர். அதில் அவன் ஒரு விருந்தாளியாகி, அங்கு என்ன கொடுக்கின்றார்களோ அதை உண்ண வேண்டிய கட்டாயத்தில் தள்ளப்படுகின்றான்.

### ஜட தேகத்தின் நம்பிக்கை

மனிதன் என்பவனுடைய தற்கால நிலையானது அவன் உடம்பின் மேல் (ஸ்தூல தேகத்தின் மேல் கொண்டுள்ள அளவற்ற பாசம், பற்று) தான் அவனுடைய முழு நம்பிக்கையையும் வைத்துள்ளான். அவனுடைய ஜீவித நினைவுகள் எல்லாம் அதன் மீது மேல் வட்டமிட்டுப் பறக்கும் பறவையைப் போல் உள்ளன. தன்னுடைய ஸ்தூல உடல் மரணத் தறுவாயில் ஒரு முடிவுக்கு வரும் போது, தன்னுடைய நினைவு, எண்ணம் எல்லாம் ஒரு முடிவுக்கு வந்து

நிம்மதியடைந்து விடும், அதன் பின் துன்பம் என்கின்ற சொல்லுக்கே இடமில்லை என்கின்ற ஒரு தவறான கண்ணோட்டத்தில் வாழ்ந்து வரும் அவன், மரணத்துக்குப் பின்னால் தன் நினைவுகள் எப்படி எல்லாம் அல்லல்பட்டு துன்பம் கொள்ளும், என்பதைப் பற்றி அக்கறை யின்றி ஜீவ தேகத்தில் உள்ள போதே, மண்ணுலகின் சகல விதமான சுக போகங்களை எல்லாம், ஒன்று விடாமல் அனுபவித்து விட வேண்டும், என்கின்ற வேட்கையில் தான் தீவிர நாட்டமுடையவனாகவே உள்ளான்.

### மனிதத் தன்மை

இந்தப் புத்தகம் அச்சிட்டு வெளியாகும் போது தொலை தூரத்தில் அதனுடைய உயர்ந்த மனிதப் பண்புகள் பொருந்திய ஓர் அலையை வீசி நல்லுறவு கொண்டாடும், அதன் குறிக்கோளை நிச்சயமாக எட்டும். வருங்காலத்தில் இந்த உலகம் முழுவதும் “மனிதத் தன்மை” அதன் ஒளிமயமான எதிர்காலம் மூலம் வளர்ச்சியடையும். அதில் ஒரு சிலராவது அமரகவி சித்தேஸ்வரர் அருகில் வசீகரப்பட்டு நெருங்கி வந்தாலும் அவர்கள் சூட்சும புத்தியின் வேகத்தினால் அல்லாமல், புத்தகத்தை அங்கீகாரம் செய்து அறிந்து கொள்வதற்காக நட்புணர்வுடன் இணைந்து பணிபுரிவார்கள்.

### சீரழிந்து வரும் ஆத்ம சக்தி

நவ நாகரீக காலத்தில் வாழும் இன்றைய மனிதன் தனக்கு முன்பிருந்த பண்டைய காலத்திய மனிதனை விடத் தற்காலத்தில், மனித சமுதாயம் பல மடங்கு எல்லாத் துறைகளிலும் முன்னேறி உயர்ந்து விட்டதாகவும், அமைதியாகவும், நல்ல சுபிட்சமாக உள்ளதாக அவன் கூக்குரலிட்டாலும், அது வெறும் சாக்குப் போக்கு கூறும் சமாதானமேயாகும். உண்மை என்னவென்றால், முன்பிருந்த நிலைமை தற்காலத்தில் முற்றிலும் தலைகீழாக மாறியுள்ளது. அவனுடைய அருமை பெருமை எல்லாம் விஞ்ஞான அறிவியல், தொழில் நுட்பத்தின் மேல் கொண்டுள்ள மமதையும், மனத்திற்குக் களிப்பும் மகிழ்ச்சியளிக்கும் ஆடம்பரம், எனப் பகட்டுக்கு கூறிக்கொள்ளும் சௌகரியமான வாழ்க்கை, என்கின்ற இவற்றின் அடிப்படை மீது தான் அமைந்துள்ளது.

இதன் பின்னணியில் உள்ள கருத்து என்னவென்று பார்த்தால், அவன் தனக்குள் ஆழ்ந்து முன்னேறிச் செல்லும் பாதையை விட்டு விலகி வெகுதூரம்

பின்னடைவு பெற்றுச் சென்றது தான். இந்த வகையிலே நவீன கால மனிதன் தன்னுடைய ஆத்மாவை விட்டு ("ஆத்ம சக்தியின்" Human Self - மகத்தான ஆற்றலை எல்லாம் இழந்து) ஏறக்குறைய தொலைந்து காணாமல் போயுள்ள. அவன், அப்படியிருக்கையில், இந்த தொல்லைகள் நிறைந்த இக்கட்டான சந்தர்ப்பத்தில் வாழ்ந்து வரும் அவன், எங்கிருந்து வரும் காலத்தில் மேன்மை பெற்று எப்படி சிறப்பாக வாழ முடியும்? இப்படி எடுத்துச் சொல்லிக் குறைகளை சுட்டிக் காட்டுவதனால் அமரகவி சித்தேஸ்வரர் என்றும் தீமையையே (is not pessimist) எதிர்பார்ப்பவர் அல்லர். ஆனால் அவருடைய முயற்சிகளனைத்தும், மனிதன் தன்னுடைய திறமையை, அவனுக்குள் அடங்கியிருக்கும் அற்புத சத்தியை, இந்தப் புத்தகத்தின் பெருத்த ஓசையின் மூலம் விழித்து எழச் செய்யும் தீவிர முயற்சியில் நாட்டமுடையவராக உள்ளார்.

மனித குலத்தின் நன்னெறி

இந்தப் புத்தகத்தை அச்சிட்டு வெளியிட வேண்டிய தேவையே சுவாமி அமரகவியிடம் முற்றிலும் இல்லாமலிருந்த போதும், அவர் இறைவனின் கட்டளைக்கிணங்கி, மனித குலத்திற்கு நன்னெறியின் தெய்வீக ஒளிகாட்ட வேண்டும் என்ற லட்சியத்துடன் மக்களின் நன்மைக்காகவே அர்ப்பணித்துள்ளார்.

"யோக நிஷ்டையில்" அமரகவி சித்தீஸ்வரர்க்கு இறைவனின் கருணையால் "ஆத்ம போதனையாக" வெளி வந்த தத்துவ ஞானமனைத்தையும், இயற்கையின் புதிர் நிறைந்த பல விஷயங்களைத் தெளிவு படுத்தி, மனித ஜீவித வாழ்க்கையின் சிக்கல்கள் நிறைந்த பல கேள்விகளுக்கெல்லாம் விடைகள் யாவும் எடுத்துக் காட்டியுள்ளார். ஆத்ம போதனையை எல்லாம் "பிரம்ம ரகசியம்" என மக்களுக்கு பகிரங்கமாக எடுத்துக் கூறாமலும், அல்லது பொருள் நிறைந்த செய்யுள் பாடல்கள் மூலம் பாடி விட்டு, "ஆத்ம ஞானம்" தனக்கு மட்டும் புரிந்தால் போதும் என்கின்ற சுய நல நோக்கில் இல்லாமல் வாழ்ந்துள்ளார். பல வருடங்கள் இரவு, பகல் பாராமல் கடுமையாகத் தன் வாழ்நாளின் இறுதி வரை தெய்வீகத் திருப்பணிக்காகவே கடுமையாக உழைத்துத் தன் வாழ்நாளை முழுமையாக அர்ப்பணித்துளார். இதுவரை யாரும் எடுத்துச் சொல்ல முடியாத, சொல்லாத பல அரிய விஷயங்களை மற்றவர்களுக்குத் தெளிவுடன் எடுத்துக் கூற வேண்டும் என்கின்ற அந்த உன்னத நோக்கத்துடன் பல சிரமங்களை, கஷ்ட

நஷ்டங்களை மேற் கொண்டார். பாமர மக்களும் படித்துப் பயனடைய வேண்டும் என்கின்ற உயர்ந்த குறிக்கோளையே தன்னுடைய ஜீவித வாழ்க்கையின் இலட்சியமாகக் கொண்டிருந்தார்.

அமரகவி சித்தேஸ்வரரின் உன்னத இலட்சியம்

அமரகவி சித்தேஸ்வரரின் மனிதப் பிறவியின் நோக்கமே, அவர் முன் ஜன்மங்களில் செய்த பூர்வ புண்ணியங்களின் பலத்தினால் கடும் யோக தவத்தின் மூலம் சித்தி பெற்ற சாதனையின் பயன்களை இப்பிறவியில் அனுபவிப்பதற்காக "மூல கணபதியின்" திருவருள் மூலம் அனுக்கிரகிக்கப்பட்டார். எனவே இதனைப் புத்தகமாக வெளியிட்டு பெரிய அளவில் விற்பனை செய்து பொருளாதார ரீதியாக நன்மையடைய வேண்டும் என்கின்ற சுய நல நோக்கம் எதுவுமில்லாமலிருந்தார் அவர். இறைவனின் கட்டளையின் மூலம், "பிரம்ம உபதேசமாக" பெறப்பட்ட "ஆத்ம போதனைகள்" யாவும் அனைத்துத் தரப்பு மக்களுக்கும் சென்றடைய வேண்டும் என்கின்ற அந்த உன்னத குறிக்கோளின் அடிப்படையில் தன் சொந்த செலவில் புத்தகமாக அச்சிட்டு வெளியிட்டுள்ளார். மக்கள் இதனைப் படித்து பயனடைய வேண்டும்.

பூதப் பிரக்ஞை

மனிதனின் ஆன்மிக முன்னேற்றம் அல்லது அதன் வீழ்ச்சி (வெற்றி, தோல்வி) ஆகிய இவ்விரண்டும் அவனுக்குள்ளேயே தான் அடங்கியுள்ளதே அன்றி, அதன் மேல் ஓடுவதும் அல்லது விரக்தியடைந்து தாழ்ந்து போவதும் அவனுடைய சுய விருப்பமேயாகும். அவ்வாறு அவன் கீழ்விழும் சமயம் அவனுடைய கிரமப்படியின் வரிசையினால் ஏறும் பரிணாம வளர்ச்சி பெறும் சக்தியினால் ஒருபோதும் மன்னிக்கப்பட மாட்டான் என்பதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். ஆகையால் நாம் எப்பொழுதும் ஆன்மிக முன்னேற்றத்தில், அதன் வளர்ச்சியில், ஒரு நல்ல அடித்தளம் அமைத்துக் கொள்ள வேண்டும். அப்படிப்பட்ட ஒரு சூழ்நிலையை உருவாக்கிக் கொள்ளத் தவறி விட்டால், அவன் அடையாளம் காண முடியாத அளவுக்குப் 'பூத பிரக்ஞையின்' (உயிர் வாழியின்) மேல் கவனம் சென்று விடும் ஆபத்தான நிலைமை உண்டாகி, அதிலேயே மனதை வாட்டிக் கொண்டிருக்கும் துன்ப நிலை உண்டாகிவிடும்.

## தேவ கதியின் அற்புத சக்தி

மெய் அன்பர்கள் இந்த புத்தகத்தைக் கவனமாகப் பக்தி சிரத்தையுடன், கருத்தூன்றிப் படித்துக் கொண்டே அமரகவி சித்தேஸ்வரருடன் நெருங்கி அருகில் வரும் போது, அதன் சூட்சும ரகசியத்தை உணரத்தலைப்படுவார்கள். அதுவே "யுக தர்மத்தின்" நியதியின்படி ஒவ்வொருவரும் தனக்குள்ளே பரிமாண வளர்ச்சி (Human Evolution) பெற்று அதன் அடுத்தகட்ட மேன்மையுடன் வருங்காலத்தில் பெருமதிப்பு வாய்ந்த மனித குலத்தின் சிறப்பான வாழ்க்கையைத் துவக்கப் போகின்றார் என்பது மறுக்க முடியாத உண்மையாகும்.

அந்த வகையில் பார்த்தோமேயானால், நாம் நான்கு யுகங்களிலேயே சிறந்த யுகமாக விளங்கும் 'கிருதயுகம்' அல்லது "பொற்கால யுகத்தினை" நோக்கி முன்னேறி சென்று கொண்டுள்ளோம். இந்த அகிலத்தில் உள்ள அனைத்து ஜீவராசிகளின் வாழ்க்கையின் பின்னால் அடிப்படையில் 'தேவ கதியின்' அற்புதமான சக்தி இயங்கிக் கொண்டுள்ளது. மற்றும் ஒவ்வொரு மனிதனின் முயற்சி, சாதனை, வெற்றி ஆகிய இவை எல்லாம் "தேவ கதி" என்கின்ற 'முன்பதிவுப் பட்டியலில்' (Reserve list) இடம் பிடிக்க, மனிதனுக்குள்ளேயே அடங்கிக் கிடக்கும் அற்புத ஆற்றல் படைத்த "ஜீவ சக்தியினைப்" பின் தொடர்ந்து செல்லும் அளவுக்கு மனவலிமை யுடையவனாகவும், குறைந்தபட்சம் "ஆத்ம சக்தியைப்" பற்றி படித்துக், கேட்டு, அறிந்து கொண்டு, அதனைப் பற்றித் தொடர்ந்து சிந்தித்து, அதன் முன்னேற்றத்திற்குத் தரும் வரிசையிலாவது இடம் பிடித்துக் கொள்ள வேண்டும்.

## இருள் படிந்த நெஞ்சம் – அறியாமை

"சர்வப் பிரபஞ்ச ஞானம்" என்கின்ற சுயம் பிரகாச அறிவின் உணர்வினை "ஜீவ கதியின்" பல்வேறு பிறவிகளின் ஓய்வில்லாத, தாய் கர்ப்பத்தின் தொடர் ஓட்டத்தில் ஓடிக் கொண்டுள்ள மனிதன், அதன் அற்புத ஆற்றல்களை எல்லாம் இழந்து, அதற்கு பதிலாக "தேக உணர்வு," (Body Awareness) "அஞ்ஞானம்" ஆகிய 'அறியாமை' என்கின்ற கடலில் வீழ்ந்து தத்தளித்து கொண்டிருக்கும் அவன், தனக்குள்ளேயே உறங்கிக் கிடக்கும் தனது "சுய உணர்வான ஆத்மாவைப்பற்றி" (Human Self) சிறிதளவாவது சிந்தனை செய்து, மனத்தையும் புலன்களையும் தன் கட்டுப்பாட்டில் வைத்திருக்க

வேண்டிய முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும் என்பதே அமரகவி சித்தேஸ்வரர் இங்கு முக்கியமாக வலியுறுத்திக் கூறும் கருத்தாகும்.

அதிகார நந்தி

இந்து மதத்தில், கருத்துள்ள ஆன்மீக விஷயங்கள் மிகவும் சூட்சுமான முறையிலும், சிலேடையாகவும், சில இடங்களில் பல பொருள்கள் நிறைந்தாகவும், (Allegorical concept) இடத்திற்கு இடம் ஏற்றாற் போல கதையின் ரூபமாகவும், தத்துவமாகவும், வேதாந்த–சித்தாந்தக் கொள்கையாகவும், மனிதனின் சிந்தனைத் திறனைத் தூண்டும் அளவில் மிகச் சிறப்பாக நம் முன்னோர்களால் எடுத்துக் கூறப்பட்டுள்ளது. உதாரணமாக இங்கு மிகவும் வலியுறுத்திச் சொல்லப்படும் ஜீவ கதிக்குட்பட்ட "ஸ்தூல உடல்" மற்றும் மனிதனின் தேகத்திலேயே மறைந்து கிடக்கும் தேவ கதிக்குட்பபட்ட "சூட்சும சரீரம்," இவற்றைப் பற்றி விவரமாகச் சொல்லப்பட்டுள்ளது. ஸ்தூலம், சூட்சுமம் இவ்விரண்டைப் பற்றிய உண்மைகளை நம்முடைய புராணங்களிலும், ஆகம சாஸ்திரத்திலும், கதாரூபமாக, பக்திச் சுவையுடன் எடுத்து சொல்லப்பட்ட தத்துவ உண்மையை இப்பொழுது காணலாம்.

எல்லாச் சிவன் கோவில்களிலும் சிவ லிங்கங்களுக்கு எதிரே நந்தி தேவரின் சிலை குறுக்காக நின்று சிவ பெருமானின் தரிசனத்தை நம்முடைய திருஷ்டியிலிருந்து மறைக்கும் விதமாக அமைக்கப் பட்டுள்ளதை நாம் காணலாம்.

"நந்தி" என்பது நம்முடைய ஆணவ மலம் நிறைந்த ஸ்தூல உடலையே அல்லது "ஜட தேகத்தையே" குறிக்கும். நந்தி என்கின்ற வாகனமே "ஸ்தூல தேகம்," (Physical Body) என திருமூலரும் தன் பாடலில் குறிப்பிடுகின்றார். "தேவ சக்தி படைத்த சூட்சும சரீரம்" (Astral body) தான் 'சிவலிங்க' சொரூபமாகும். நம் முன்னோர்கள் ஜீவனின் ஆத்ம சொருபத்தை "லிங்க சரீரம்" என்றே அழைக்கின்றார்கள். யோக சாதனையற்ற மனிதன், ஆணவ சக்தியான அறியாமை என்கின்ற தேக நினைவில் இருக்கும் வரை "ஸ்தூலமும்," "சூட்சுமமும்" (Personal vs. Cosmic) ஒன்று சேர முடியாமல், தனித் தனியாக பிரிந்து உள்ளது. இதனால் தான் மனிதன் தெய்வீக ஆற்றல் எதுவும் அற்றவனாக, ஜட தேகத்திலேயே கட்டுண்டு உள்ளான். எப்பொழுது மனிதன் யோக சாதனையில் ஈடுபட்டு வெற்றி காண்கின்றானோ, அப்பொழுது

தான் "உயிர் உடலை வெல்லுதல்" என்கின்ற அற்புத சக்தியைப் பெறுகிறான், ஆகம சாஸ்த்திரத்தின் வாயிலாக எடுத்துச் சொல்லப்பட்டு, இது நாள் வரை எந்தச் சிவலிங்கத்திற்கு முன் தடையாக நின்றதோ அதே நந்தி தான் 'அதிகார நந்தியாக' தேவ லோகத்தின் சர்வ மங்களமான சித்தியினைப் பெறும் உரிமையை ஏற்றுக்கொள்கின்றது.

### பிரம்ம உற்சவம்

இந்தக் கருத்துத் தான் சிவன் கோயில்களில் பிரம்ம உற்சவம் நடைபெறும் சமயத்தில் "அதிகார நந்தி" என்கின்ற உற்சவத்தின் மூலம் வெகு விமர்சையாகக் கொண்டாடப் பட்டு நந்தியின் வடிவம் நன்கு அலங்கரிக்கப்பட்டு, அதன் மேல் இறைவன் சிவபெருமான் அமர்ந்து செல்லும் விதமாக இவ்விழாவானது மிகவும் கோலாகலமாகக் கொண்டாடப் படுகின்றது. உடல் உணர்வை வென்றால் தேவ தன்மை அடையலாம்.

'அதிகார நந்தியின் உற்சவம்' என்பது நம்முடைய ஸ்தூல உடலில் ஜீவித வாழ்க்கையில் வாழ்ந்து கொண்டே, தெய்வ சக்திகள் அனைத்தும் அடங்கிய "சூட்சும சரீர" அமைப்பைப் பெற்றுக் கொண்டதன் அடையாளமேயாகும். இதுவே அமரகவியின் கூற்றுப்படி 'ஸ்தூல சூட்சும இணைப்பு', அல்லது அஷ்டாங்க யோகத்தின் முறைப்படி அழைக்க வேண்டுமென்றால் "பிராண அனல சம்யோகம்" வேதாந்த சித்தாந்த முறைப்படி "புருஷ–பிரகிருதி சம்யோகம்," கீதையின் கூற்றுப்படி "கிருஷ்ணார்ஜுன சம்வாதம்" என பல வகையில் பல இடங்களில் சூழ்நிலைக்கு ஏற்றாற் போல் பலவித பெயர்களில் அழைக்கப்படுகிறது.

### கலியுகத்தின் அச்ச மூட்டும் விளைவுகள்

நான்கு யுகங்களின் அதன் கடைசி வரிசையான 'கலியுகம்' என்பது மிகவும் மோசமான காலகட்டமாகத் திகழும். இதில் ஒரு புறம் தர்மம் சீர்குலைந்து, அதர்மம் மேலோங்கியும், அதன் மறுபுறம் மனிதனின் அகவுணர்வுக்குரிய தேவ சக்தி படைத்த சூட்சும சரீரம், மற்றும் லௌகீக ஜீவித வாழ்க்கையிலேயே கவரப்பட்டு, அதன் மூலம் வெளிப் பார்வையின் (Perception) பக்கம் சுற்றித் திரியும் இயல்புடைய புலன்களின் மேல் வயப்பட்ட "ஜீவ கதியின்" அம்சமாகத் திகழும் ஸ்தூல உடல் ஆகிய இவ்விரண்டுக் கிடையே உள்ள இடைவெளி மிகவும் அதிகமாகும்.

மனிதப் பிறவியின் ஒப்பற்ற குறிக்கோள்

பலதரப்பட்ட மனிதர்கள் அவர்களின் சுய முன்னேற்ற ஆன்மீக வாழ்க்கையின் வரிசையில் அவர்களுடைய வருங்காலம் மிகவும் இருண்டு போய், மீள வழி தெரியாமல் பாழடைந்து கிடக்கின்றது. ஸ்தூல உடலின் "ஜடாதார நினைவிலிருந்து மீண்டு" அகவுணர்வுக்குரிய சூட்சும சரீரத்தின் சுய அறிவு நிலைக்குக் கிரமப்படியில் ஏறிச் செல்வது தான் முறை. அதுவே மனிதப் பிறவியின் ஒப்பற்ற குறிக்கோளாகும். அந்த ஒன்றிலிருந்து மற்றொன்றுக்கு முறைமாறிச் செல்லும் ("ஜீவ சக்தியிலிருந்து, தேவ சக்திக்கு முன்னேறிச் செல்லுதல்") நடைமுறையை, மனிதன் தன் வாழ்க்கையில் கடைபிடிக்கத் தவறி விட்டால், இயற்கை அதன் பங்குக்கு சுவாசத்தின் மூலம் அதற்குத் தகுந்த விதமாக மாறி, மனிதனுக்குள் விரோதமாகச் செயல்பட்டுப் பாதகமான பல கடுமையான விளைவுகளில் கொண்டு சென்று, ஆபத்தான நிலைமைக்குத் தூக்கி எறிந்து விடும்!

அறிவு ஜீவிகளின் கவலை

இன்றைய தினம் உலகெங்கும் நாமனைவரும் கண்கூடாகக் காண்பது மக்களின் நிலைமையனைத்தும் தலைகீழாக மாறிப் போய், மிகவும் மோசமான சூழ்நிலையில் பரிதாபத்துக்குரிய விதத்தில் அவன் தரம் தாழ்ந்து போய் உள்ளது! கற்றறிந்த மேதைகளும், சான்றோர்களும், அறிவு ஜீவிகளும், பலதரப்பட்ட மக்களின் வாழ்க்கைத் தரத்தின் மேம்பாட்டுக்கு உதவும் வழியின், திக்குத் திசை தெரியாமல் மனபலமிழந்து, இந்தத் திகைப்பூட்டும் அச்சத்தின் சூழலில் சிக்கிக், கவலையால் மிகவும் பிணைக்கப்பட்டவர்களாக அவதியுற்றுள்ளார்கள்!

மனிதாபிமானம்

எனவே இந்த இக்கட்டான சூழ்நிலையில் மனிதன் தெய்வீக சக்தி படைத்த "அதி மானுஷனாக" (Super man) உயர்வு பெற முடியா விட்டாலும், குறைந்த பட்சம் கொடிய குணங்கள், துஷ்டச் செயல்கள் நீங்கிய மனிதனாக, "மனிதாபிமானம் மிக்கவனாகவாவது" (Human standards atleast) பரிணாம வளர்ச்சி பெற்று வாழ வேண்டும். இந்த உட்கருத்தின் அடிப்படையில் எவராவது தற்காலத்தில் முயற்சிகளை மேற்கொள்வாரா? என்பது தெரியவில்லை.

நவீன உலகத்தில் வாழும் இன்றைய சமுதாயத்தின் அனைத்துத் தரப்பு மக்களும் குறைந்தபட்சம் மனிதனுக்குரிய அவனுடைய இயல்பான குணங்களான, சமத்துவம், சகோதரத்துவம், பரந்த மனப்பான்மை, ஒற்றுமையுணர்வு (Equality, Universal Brotherhood and Board mind) ஆகிய நற்பண்புகள் உள்ளடக்கிய அந்தப் பட்டியலிலாவது இடம் பெற வேண்டும்! ஜீவித வாழ்க்கையையே கேள்விக் குரியதாக்கும், வெறுப்பிலிருந்தும், சகிப்புத் தன்மையற்ற, துஷ்ட குணங்களின் ஆதிக்கத்திலிருந்தும் விடுபட வேண்டும்! மனிதன் தன்னையே தன் கால்களின் கீழ் போட்டு நசுக்கும் (Not in its tragic role to crush you under its heels) மனிதாபிமானமற்ற துஷ்டச் செயல்களிலிருந்தும், துயரங்களிலிருந்தும் விடுதலை பெற முயல வேண்டும் என்பதே அமரகவி சித்தேஸ்வரரின் விருப்பமாகும்!

# சோம வட்டம்

## சூட்சும சரீரம்

இந்த அகிலத்தில் வாழும் ஒவ்வொரு மனிதனின் உடலிலும் அவனுடைய ஸ்தூல சரீர அமைப்புக்குள்ளேயே மறைந்து கிடக்கும் மற்றொரு உடலான "சூட்சும சரீரம்" என்னும் இரண்டாவது தேக அமைப்பும் உள்ளது. அப்படி ஒரு தேகம் தனக்குள் ஆழ்ந்துள்ளது என்கின்ற இந்த நிதர்சனமான உண்மையை அவனுடைய அறிவுக்குப் புலப்படாமல் மிகவும் சூட்சுமான முறையில் இயற்கை மறைத்து வைத்துள்ளது. ஸ்தூல சரீரத்தைக் கண்களால் காணும் நாம் அதன் பின்னால் மறைந்து இயங்கும் சூட்சும சரீரத்தைப் புறக் கண்களால் காண முடிவதில்லை. இதனால் அந்த சூட்சும சரீரத்தைப் பற்றிய சிந்தனையும் அவன் மனத்தில் எழுவதில்லை.

இப்படி ஒரு தேகம் நமக்குள் புதைந்து இயங்குகின்றது என்கின்ற உண்மை பற்றி விரிவாகப் பக்கம் பக்கம் எழுதலாம். பல புத்தகங்களில் படித்துத் தெரிந்து கொள்ளலாம், அல்லது பிறர் சொல்லிக் கேட்டுக் கொள்ளலாம். அப்படியும் அதனை அவ்வளவு எளிதில் நம்ப முடியாது. அதற்கு முக்கியக் காரணம் என்னவெனில், "சூட்சும சரீரத்தைப்" பற்றி நாம் சுய அனுபவ பூர்வமாக உணர்ந்து கொண்டால் தான் நம்மால் உறுதியாக நம்ப முடியும். சர்க்கரையின் இனிப்புச் சுவையை எப்படி இருக்கும் என்று மற்றவர்கள் எவ்வளவு விளக்கம் கொடுத்து எடுத்து சொன்னாலும் நம்மால் அறிந்து கொள்ள முடியாது. அதை நாம் சுவைத்துப் பார்த்தால் தான், அதன் இனிப்பின் தன்மையை உணர்ந்து கொள்ள முடியும். அதே போல் தான் மேலே எடுத்துக் கூறிய விஷயமாகும்.

சூட்சும சரீரத்தை நம்முடைய புறக் கண்களால் காண முடியாவிடினும், அப்படி ஒரு வஸ்து நமது தேகத்தில் இயங்குவதை யோக சாதனையின் மூலம் உணர்ந்து கொள்ள முடியும். எனவே நம்முடைய உயிரின் சுபாவத்திலே இயற்கையாகவே அதனுள் மறைந்து கிடக்கும் அந்த சூட்சும சரீரத்தை உணர்ந்து கொள்ள வேண்டுமானால் "சகஜ நிஷ்டை" என்கின்ற யோக சாதனையின் மேல்நிலையில் அப்படி ஒரு சரீரம் மானிட உடலுக்குள்ளேயே அடங்கிக் கிடக்கும் உண்மையைப் பற்றி நாம் பூரணமாகத் தெரிந்து கொள்ள முடியும். அது வரையில் அந்த "சூட்சும தேகம்" நம்முடைய புறக் கண்களுக்குப் புலப்படாது.

ஆத்ம நிலையம்

மனித தேகத்தில் தலை முதல் பாதம் வரை அன்றாடம் உடலைச் சுற்றிச், சுற்றி வலம் வருகின்றது அவனது பிராணன். அதோமுகத்தில் நடை பெறும் ஜீவித கதி அதுவே. பிராணன் என்பது மயிர்க் கால்கள் தோறும் பாயும் செஞ்சுடர் விளக்கு. அதன் ஆற்றல் அனைத்தும் அடங்கியிருப்பது தேகத்தின் உள்ளே அல்ல, தேகத்தின் வெளிப்புறத்தில் அற்புத வெளிச்சமாக மானிடனின் புறக் கண்களுக்குப் புலப்படாத ஒரு சுயம் பிரகாசமிக்க ஒளி அலைகள் வடிவில் மிகவும் நுட்பமாக உள்ளது.

| எண் | மனித தேகத்தில் பிராணனின் செயல் |
|---|---|
| 1 | அற்புத வெளிச்சம் |
| 2 | செஞ்சுடர் விளக்கு |
| 3 | சுயம் பிரகாசம் |
| 4 | திவ்விய தரிசதம் |

மனித உடலின் வெளிப்புறத்தில் பிராணன் அன்றாடம் சுற்றிச் சுற்றி வலம் வருவது என்பதே "தகராகாசம்" எனப்படும். ஆத்ம நிலையம் என்பதும் அதுவே.

மகா காரண சரீரம்

அந்த திவ்விய உடலான "சூட்சும சரீரம்" ஜோதி வடிவத்தில் பிரகாசமாய் ஒளி வட்டமாக நம்முடைய உடலை அன்றாடம் சுற்றி வலம் வந்து கொண்டுள்ளது. அதுவே தெய்வீகப் பேரறிவுச் சுடராய், சுயம் பிரகாசமாய், ஜொலித்துக் கொண்டிருக்கின்றது. அது ஏன் நம் புறக்கண்களுக்கு புலப்படமால் உள்ளது? காரணம், அதன் மேல் மானிடனின் எண்ண அலைகள் நினைவுகளின் சலனங்களால் (கர்ம வினை) அதன் சுயம் பிரகாசத்தை இழந்து, அப்படியே உறைந்து போய்ச் செயல்பட முடியாமல் உள்ளது. சுய உணர்வு அற்று நம்முடைய ஸ்தூல தேகத்தின் ஜட அலைகளின் ஆதிக்கத்தில் அப்படியே முடங்கிப் போய்க் கிடக்கின்றது. மனிதனின் ஆன்மிக உணர்வுக்குரிய "அகம்" அங்கு தான் மிகவும் நுணுக்கமான முறையில் அடங்கியுள்ளது. அணுப் பிரமாண வடிவமான சூட்சும சரீரத்தை இயற்கை பத்திரமான முறையில் நன்கு பாதுகாப்பாக மிகவும் புதிரான முறையில் மூடி வைத்துள்ளது. அந்தப் புதிரான சூட்சும சரீரத்தின் அமைப்புக்குள்ளேயே "காரண சரீரமும்" அதன் ஆழத்தின்

உள்ளே "மகா காரண சரீரமும்" அடுக்கு மேல் அடுக்குகளாக மிகவும் சிறப்பான முறையில் மனித தேகத்திற்குள்ளேயே இரகசியமாய் அலங்கரிக்கப் பட்டுள்ளது.

இயற்கையின் உள்ளே மறைந்து கிடக்கும் பல விஷயங்கள் நாம் அன்றாடம் வழக்கத்தில் பயன்படுத்தும் சாதாரணப் பொருள்களின் மூலமே பூடகமான முறையில் விளக்கிக் கூறப்பட்டுள்ளதுதான் உண்மையில் ஆச்சரியப்படத் தக்க விஷயமாகும். நாம் அனுதினமும் பருகப் பயன்படுத்தும் "பாலில்" நெய்யும், தயிரும் மறைந்து, அடங்கியுள்ள ஒரு சாதாரண விஷயம் நாம் எல்லோரும் அறிந்துள்ள ஓர் உண்மையாகும். ஆனால் இவற்றை நாம் சாதாரணமாகப் பாலில் காண முடியாது. பாலைத் தகுந்த முறையில் பக்குவமாகக் கடையும் போதுதான் அதிலிருந்து மற்ற பொருட்கள் (தயிர், வெண்ணெய், நெய்) யாவும் ஒன்றன் பின் ஒன்றாக வெளிப்படும். அதே போல்தான் நம்முடைய ஸ்தூல தேகத்தின் அமைப்புக்குள்ளே அடங்கிக் கிடக்கும் சூட்சும சரீரம், காரண சரீரம், மகாகாரண சரீரம் ஆகியவையும் ஒன்றன் மேல் ஒன்றாக மறைந்துள்ளன.

மனித தேகத்தில் உள்ள நான்கு அடுக்குகள்:

| | | |
|---|---|---|
| 1. | ஸ்தூல சரீரம் | ஜட தேகம் |
| 2. | சூட்சும சரீரம் | அற்புத வெளிச்சம் |
| 3. | காரண சரீரம் | பிரணவ தேகம் |
| 4. | மகாகாரண சரீரம் | ஞான தேகம் |

ஸ்தூல திருஷ்டியினால் (புறக் கண்களால்) காண இயலாத திவ்விய தரிசிதம் என்கின்ற அந்த அற்புத வெளிச்சம் தான் மேற்கூறிய நான்காவது நிலையிலிருக்கும் "மகாகாரணம்" எனப்படும். "ஞான தேகம்" என்கின்ற அதுவே மகாத்மாக்களின் சர்வ மங்களம் சித்திக்கும் தெய்வீக லோகத்தில் வாசம் புரிய அருள் புரியும் பேரருள் ஸ்தானமாகும்.

## அகஸ்திய மாமுனிகள்

மனித ஜீவிதத்தின் உச்சகட்ட ஆன்மிக யோக சாதனையின் சிகரத்தை அலங்கரித்த ஒரு சில மகான்களே அந்தச் சிறப்பு மிக்க வரிசையில் இடம் பெற்றுள்ளனர். அவர்களே மனித குலத்தைக் காத்து ரட்சித்துக் காலத்தின் ஓட்டத்திற்கு ஏற்றவாறும், யுக தர்மத்தினை அனுசரித்தும், வழி

நடத்திச் சென்று, அருளாளராக செயல் புரிந்து, ஒவ்வொரு மனிதனுக்கும் அவனுடைய ஜீவித வாழ்க்கையின் முன்னேற்றதுக்கும் அருள் புரிகின்றனர்.

அப்படிப்பட்ட ஆன்மிகத்தின் மேன்மை மிக்க ஞானதேக அமைப்பைப் பெற்றவருள் தலை சிறந்த ஒருவரும், சித்த கணங்களின் அதிபதியுமான அகஸ்தியரே அமரகவி சித்தேஸ்வரரின் யோக சாதனையின் நெருக்கடியான சமயங்களில் எல்லாம், தகுந்த உதவிகள் பல புரிந்து, அநுக்கிரகம் புரிந்துள்ளார். அகஸ்தியர் மகாமுனி அமரகவி சித்தேஸ்வரரின் ஆன்மிக மேல்நிலை சாதனையின்போது பக்குவமாகச் செயல்பட உறுதுணையாக நின்று மகாகுண்டலினி சித்தி பெறுவதற்கு, அல்லது பூதாகாசத்திலிருந்து விடுதலை பெற்று அற்புத வெளிச்சமான சூட்சும சரீரத்துடன் அமரகவி சித்தேஸ்வரர் தன்னைப் பூரணமாக இணைத்துக் கொள்ள அருள் புரிந்துள்ளார்.

பிரணவ தேகம்

அமரகவி சித்தேஸ்வரர் அகஸ்தியரின் திருவருள் துணையினால் "மகாகுண்டலினி சித்தியைப்" பெற்று அதன் மூலம் பூதாகாசத்தின் வசத்திலிருந்து நிரந்தரமாக ஒரு முடிவுக்குக் கொண்டு வந்துள்ளார். ஜீவ தளையின் விடுதலையைப் பெற்றுச் சூட்சும சரீரத்துடன் தன்னை முழுவதும் இணைத்துக் கொண்டவுடன், அதனுடைய அடுத்த வரிசையில் இடம் பெற்றுள்ள "பிரணவ தேகம்" என்கின்ற அதிமானுஷ உடல் அமைப்பை இறைவனின் கருணையினால் அருள் செய்யப்பட்டார். ஜடத்தின் நான்காவது நிலையின் விளிம்பின் ஓரத்தில் தற்போது நின்று கொண்டுள்ள அமரகவி சித்தீஸ்வரர், ஏறக்குறைய மயிர்க் கால்கள் தோறும் பாயும் விந்தையான செஞ்சுடர்ப் பிரகாச விளக்கான உயிரின் தற்கால ஜீவித வாழ்க்கையில் இதற்கு மேல் பரிமாண வளர்ச்சி பெற்று மேல் கட்ட உன்னத ஸ்தானத்தை அடைவது என்பது நிச்சயம், அவருடைய கைகளில் இல்லை. ஏனெனில் அதற்கு முக்கியக் காரணமுண்டு.

பரபக்தி

அமரகவி சித்தேஸ்வரர் உலக ரீதியான வாழ்க்கையிலிருக்கும் மற்றவர்களுக்கு ஒரு முன்னுதாரணமாகத் திகழ வேண்டியிருந்தது. மேலும் தன்னைப் போல உள்ள சாதாரண எளிமையான வாழ்க்கை நடத்தும் மற்ற குடும்பஸ்தர்களுக்குச் சிறந்த எடுத்துக் காட்டாகவும் திகழ வேண்டியிருந்தது.

கிரகஸ்த தர்மத்தில் ஈடுபட்டுக் கொண்டே, உத்யோகத்திற்குச் சென்று, மனைவி குழந்தைகளையும் அனுசரித்து, அன்றாடக் குடும்ப பாரங்களையும் சுமந்து கொண்டு, லௌகீக வாழ்க்கையை நடத்த வேண்டியிருந்தது. அதே சமயம் விக்கிரக ஆராதனையில் சிறிதும் பிசகில்லாமல், தொடர்ந்து விடாமல் வழிபாடுகளை நடத்திட, பக்தி மார்க்கத்தை அதி தீவிரமாகக் கடைபிடிக்க வேண்டியிருந்தது. யந்திர, மந்திர, தந்திர சாஸ்திரத்திலும் பிரயோகம் புரிந்து, மூலகணபதியின் திருவருளால் பரபக்தி மார்க்கத்தில் தேர்ச்சி அடையும் பாக்கியத்தை அமரகவி சித்தேஸ்வரரால் சுலபமாக பெற முடிந்தது.

| ஸ்ரீ வித்தையின் நான்கு அங்கங்கள் | | |
|---|---|---|
| *நிலைகள்* | *ஸ்ரீவித்தையின் நான்கு அங்கங்கள்* | *பயன்கள்* |
| முதல் நிலை | மந்திர சாஸ்திரம் | ஜீவ உணர்ச்சியைத் தாண்டிச் சென்று பரபக்தி மார்க்கத்தில் தேவ நினைவில் படிப்படியாக மேலேறி தேர்ச்சி பெறுதல் |
| 2வது நிலை | யந்திர சாஸ்திரம் | |
| 3வது நிலை | தந்திர சாஸ்திரம் | |
| 4வது நிலை | யோக சாஸ்திரம் | |

| | |
|---|---|
| **மந்திர சாஸ்திரம்** | என்பது மூல பீஜ மந்திரங்களை அனுதினமும் பல ஆயிரக் கணக்கான முறையில் உச்சாடனம் செய்து "மந்திர சித்தி" அடைதல். |
| **யந்திர சாஸ்திரம்** | என்பது ஸ்ரீசக்கரம் போன்ற யந்திர ஸ்தாபனங்களை பூஜாமுறையில் உபாசனை புரிவது (தெய்வீக சக்திகளை பஞ்சலோக தகடுகளில் ஆகம சாஸ்திரத்தின் முறைப்படி வரைந்த படங்களில் வழி பட்டு யந்திர உபாசனையில் தேர்ச்சி பெறுதல். |
| **தந்திர சாஸ்திரம்** | என்பது மந்திர உச்சாடானத்தில் நன்கு தேர்ச்சி பெற்று, மந்திரங்களை வாய் மூலம் உச்சரிக்காமல் கைகளின் அசைவினால் பன்மடங்கு துரிதமாக தேவ ஆராதனை புரிவது. |
| **யோக சாஸ்திரம்** | என்பது புலன்கள், எண்ணம், சித்த விருத்தி ஆகிய இவற்றை மன ஒய்வு என்கின்ற கலையின் மூலம் அடக்கி யோக சித்தி பெறுதல். |

யோக நிஷ்டை

அதன் பலனாகவே அனுதினமும் இரவின் "நித்திரை சுகம்" என்கின்ற யோக நித்திரையில் தெய்வீக அனுபவங்களை எல்லாம் உணர்ந்து கொள்ளும் சகஜ நிஷ்டையில் ஈடுபட்டு, இயற்கையின் புதிரான மர்மங்களை எல்லாம் உணர்ந்து கொள்ளும் நிலையில் அருளப்பட்டிருந்த காரணத்தினால் "பிரணவ தேகத்தின்" அமைப்பில் அவரால் தேர்ச்சி பெற முடிந்தது. அதற்கு மேற் கட்ட யோகத்தின் உச்ச நிலையை அமரகவி சித்தேஸ்வரர் மேற் கொள்ள வேண்டுமானால், அதற்கு அவருடைய (கிரகஸ்த) குடும்ப வாழ்க்கை இடமளிக்காது. ஏனெனில் அதற்கு விழிப்பு நிலை என்கின்ற ஜாக்கிரத நிலையில் மனம் பற்றற்ற நிலைக்கு மேல் சென்று, தேக நினைவை முழுமையாகக் கடந்து, பல நாட்கள், பல மாதங்கள், அல்லது ஒரு சில வருடங்கள் என ஜடதேகத்தின் உணர்வேயில்லாமல், ஏறக்குறையத் தான் தனக்குள்ளாகவே சுயம் பிரகாசியாய், பகல் பொழுது முழுவதும் வியாபித்துக் கிடக்கும் "யோக நிஷ்டையின்" அனுபவ முறையைப் பெற வேண்டி இருந்திருக்கும். ஆனால் அமரகவி சித்தேஸ்வரரின் இல்லற வாழ்க்கை முறையில் இது சாத்தியமாகாது போயிருந்திருக்கும்.

சகஸ்ரார சித்தி

ஆனாலும் அமரகவி சித்தேஸ்வரரின் யோக சாதனை தொடக்க காலத்திலிருந்தே சகஜ நிஷ்டையிலே நன்கு முன்னேற்றம் காணத் துவங்கி பின்பு அதுவே பக்குவ நிலையில் சரியான முறையில் பிரகாசமாகிச் சென்று கொண்டே இருந்திருக்கிறது. அதன் உச்ச கட்டத்தில் பூர்த்தியாகும் போது ஆன்மீக ஒளி அலையின் பிரகாசமிக்க அற்புத வெளிச்சமாகிய "தெய்வீக அருள் ஜோதி வட்டம்" அமரகவி சித்தேஸ்வரரை முழுவதும் சூழ்ந்து கொண்டு பகல் பொழுதிலே, பிறர் காணக் கண் கூசும் அளவுக்கு ஆட்கொண்டு விடும்.

அமரகவி சித்தேஸ்வரர் "நிஜானந்த போதம்" என்கின்ற இந்த திவ்விய கிரந்தம் எழுதத் தொடங்கிய காலத்தில் (1976–ல்) அடியெடுத்து துவங்கிய அந்த தெய்வீக நிகழ்ச்சி, தொடர்ந்து சீரான அதன் பாதையில் சிறப்பாக அதன் தெய்வீக இலக்கை நோக்கி முன்னேறிச் சென்றது. அமரகவி சித்தேஸ்வரர் அந்த யோக சாதனையின் அனுபவ முறையே "மனத்தை ஓய்வு" பெறச் செய்து, அதற்கும் அப்பால் "பார்வையை" மனத்தின் பிடியிலிருந்து

தனியே பிரித்து எடுத்தது. அத்தகைய ஒரு அனுபவம் நிகழும் போது பகல் பொழுதிலே கண் திறந்திருந்தாலும், மனத்தில் காட்சி தோன்ற முடியாத, "திரிபுடி" என்று சொல்லப்படும் ஓர் அற்புத நிலைக்குக் கொண்டு சென்றது. அந்நிலையைப் பெறுவதே "*சகஸ்ரார சித்தியில்*" நிலைத்து நிற்கும் உரிமையை அடைதலாகும்.

ஸ்ரீ வித்தையின் 64 கலை

| கலை | அதி தேவதை | பலன் |
|---|---|---|
| 8 கலை | ஸ்ரீதேவி துர்கை | மனோ சாந்தி<br>புலனடக்கம்<br>மன ஒய்வு |
| 16 கலை | ஸ்ரீதேவி மீனாட்சி<br>பீடம்–மதுரை<br>சோடச கலை | "பார்வையை"தாண்டுதல்<br>"மனத்தை ஒய்வு" பெற செய்து, அதற்கும் அப்பால் "பார்வையை" மனத்தின் பிடியிலிருந்து தனியே பிரித்து எடுக்க வேண்டும். |
| 32 கலை | ஸ்ரீதேவி காமாட்சி<br>பீடம்–காஞ்சிபுரம் | சம்பூரண கலை மகாலஷ்மி யோகம் என்பது இதுவே. யோக சமாதி தேக உணர்வு 16 கலை தேவ உணர்வு 16 கலை மொத்தம் 32 கலை |
| 64 கலை | ஸ்ரீதேவி<br>சாரதாம்பாள்<br>பீடம் – சிருங்கேரி | ஜட சமாதி பூரண கலை |

சகஸ்ராரம் என்பது நம்முடைய உடலின் தலைப் பகுதியை அலங்கரிக்கும் பெரு மூளையில் உள்ள சிந்தனையின் பெட்டகமாகும். எண்ணங்களின் வேகத்தினால் உண்டாகும் நினைவு அலைகளின் மேல் மனிதனை இறுக்கமாக ஆப்பு வைத்து கெட்டியாக அடித்தது போல் அடித்து கடினமாக இறுகிப் போய் உள்ள இதனிடையே (பிட்யூட்டரி சுரப்பியும்,) பார்வையின் திருஷ்டியும் ஒழுங்காக இயங்கும் முறை கெட்டு போய், குழப்பத்தில் ஆழ்த்தியுள்ளது. மனிதனின் தாறுமாறான விதியின் போக்குக்குட்பட்ட, ஜீவித வாழ்க்கை முறைக்கு, இந்தத் தலை கீழ் மாற்றத்தின் குழப்பமே மிக முக்கியக் காரணமாக கருதப்படுகின்றது.

### பிட்யூட்டரி சுரப்பி

நம்முடைய தேகத்தில் மிகச் சிறய அளவில் அமைந்துள்ள பிட்யூட்டரி சுரப்பியே நம்முடைய உடலைச் சுற்றி இயங்கும் சுவாச முறையாகவும், நிபந்தனைக்குட்பட்டு நாவில் சுழலும் "பேச்சு" ஆகவும் உள்ளது. அமரகவி சித்தேஸ்வரர் தனக்குள் பேச்சின் மூலம் நழுவிச் செல்லும் ஆற்றல் மிக்க "பிராண சக்தியை" மீட்சி பெறும் யோக முறையின் வழியினைப் பின் பற்றிச் சென்று அமோக வெற்றி பெற்றுள்ளார்.

### ஹட யோகிகள்

அதன் மற்றொரு பாதையான மூச்சின் வழிமுறையைப் பின் பற்றிச் செல்லும் ஹட யோகிகள் மேற் கொள்ளும் வழியானது மிகவும் கடினமான சுவாசப் பயிற்சி முறையை அப்பியசிப்பதாகும். அதன் மூலம் மெதுவாகக் கும்பகம் புரிந்து, மூச்சைக் கடந்து சென்று, பூதாகாசத்தின் நடு மையத்துக்குள்ளே புகுந்துச் செல்லும் ஒரு அபாயகரமான பயிற்சி முறையாகும். "*கரணம் தப்பினால் மரணம்*" என்னும் உயிர் மூச்சுடன் நேரிடையாகவே மோதிக் கொள்ளும் ஒரு பயங்கரமான, நவீன காலத்திற்கு சிறிதும் ஒவ்வாத ஒரு வழி முறையாகும்.

இவ்வாறு மூச்சை வலுக்கட்டாயமாக அடக்கித் தீவிர கும்பகம் புரிவதனால் உண்டாகும் பயன் யாது எனில், புலன்களின் சேஷ்டையில்லாத ஆழ்ந்த உறக்கத்தில் எப்படி நாம் நிம்மதியாக உறங்கி மீண்டும் துயில் எழும் போது புத்துணர்ச்சியுடன் இருப்போமோ அதுபோன்ற ஒரு அனுபவத்தைத் தான் ஹடயோகிகள் பெற முடியும்.

### **சித்த விருத்தி நிரோதம்**

அமரகவி சித்தேஸ்வரர் தேர்ந்தெடுத்த வழிமுறையானது மிகவும் பாதுகாப்பானதும், எல்லோராலும் சுலபமாகக் கடைப் பிடித்துச் செல்லும் வழியாக உள்ளது. "சித்த விருத்தி நிரோதம்" என்கின்ற சாதனையின் வழியாக எண்ணத்தை படிப்படியாக நிறுத்தி, மனத்தை ஓய்வு பெறச் செய்து, அதன் பயனாகக் கள்ளத்தனமாக வெளியுலகில் பாய்ந்தோடிச் சொல்லும் "பார்வையை" தடுத்து நிறுத்துதல் அன்றி வேறுஎதுவுமில்லை. அதனால்

பேச்சில் நழுவிச் செல்லும் மின்னணுவின் ஒலி அலைகளின் ஆற்றலானது தூண்டுதல் பெற்று, பகல் பொழுதிலே அவை அனைத்தும் ஒன்று சேர்ந்து, தானாகவே "பிராண சக்தியாக" மாறி விடுகின்றது.

இங்கு தான் மூச்சில் நங்கூரமிட்டு அழுந்திக் கிடக்கும் இரண்டு என்கின்ற மாத்ருகா மாத்திரையின் அளவுடைய "கேவல கும்பக சித்தி" அமரகவி சித்தேஸ்வரரை மேல் நிலைக்கு தூக்கிச் சென்று உயர்த்தி விட்டது. இந்த வகையில் தான் அவர் "பிட்யூட்டரி சுரப்பியை" வெற்றி கண்டு, அதன் பலனாக சிருஷ்டியின் அனைத்து லீலா வினோதங்களையும், உட்கார்ந்த இடத்தில் இருந்து கொண்டே, சகலத்தையும் அறிந்து கொள்ளும் ஆற்றல் படைத்த, "ஞான திருஷ்டி" என்கின்ற பூர்த்தி நிலையை அடைந்தார்.

சர்வப் பிரபஞ்சத்தையும் தனக்குள்ளே உணர்ந்து கொள்ளும் ஆற்றல் படைத்த மனோ சக்தியின் ஆற்றலான ஆகாய தத்துவத்தை, தன்னாட்சி புரியும் வலிமை பெற்றது நம்முடைய தேகத்திற்குள்ளே தலைப்பகுதியை அலங்கரிக்கும் பெரு மூளையின் ஆழத்தில் அதன் நடு மைய பகுதியிலுள்ள பிட்யூட்டரி சுரப்பியே ஆகும். பிட்யூட்டரியுடன் இணைந்து செயல்படும் அதன் மற்றொரு நெருங்கிய உறவு முறையான பார்வையின் திருஷ்டியையும் அமரகவி சித்தேஸ்வரர் தன்னுள் தடுத்து நிறுத்தி, அதனையும் அடக்கியாளும் உரிமையை சோடச கலையின் அதி தேவதையாக விளங்கும் "ஸ்ரீ தேவி மீனாட்சியின்" கருணையினால் பெற்றிருந்தார் எனில் அது மிகையாகாது. யோக சாதனையில் முதலில் "அம்மையின்" கருணையைப் பெற வேண்டும். பின்னால் "அப்பனின்" கிருபை தானாகவே வந்து சேரும். "அம்மை–அப்பன்" என்பதே இயற்கையில் என்றுமே இணைபிரியாத "சிவ–சக்தி" சொரூபமாகும்.

## ஸ்ரீ தேவி மீனாட்சி

மீனாட்சி என்கின்ற சொல் = மீன்+ஆட்சி என்கின்ற இரு பொருள் படும் ஒரு சொல்லாகும். கடலில் ஒரு சில அபூர்வ வகையான பெண் மீன் இனம் ஒன்று காணப்படுகின்றது. அத்தகைய மீன் இனம் ஆயிரக்கணக்கான முட்டைகளை இடும் சக்தி வாய்ந்தது. தன் முட்டையிலிருந்து குஞ்சுகளைப் பொரிக்க ஒரு வினோதமான முறையைக் கையாள்கின்றது. அந்த மீன் தன்னுடைய பார்வையின் மூலம் முட்டைகளைக் கூர்ந்து நோக்கித் தன் குஞ்சுகளைப் பொரித்து விடும் சக்தி வாய்ந்தது.

ஒரு விளக்கேற்றிய தீபத்தின் மூலம் எப்படிப் பல ஆயிரக்கணக்கான தீபங்களுக்கு விளக்கேற்ற முடியுமோ அது போல் அந்த மீன் இனம் தன் கண்களில் ஒளிரும் "பிராண சக்தியின்" மூலம் குஞ்சுகளை முட்டையிலிருந்து பொரிக்கச் செய்கின்றது. மீன்களைப் போன்ற அழகிய கண்களை உடைய ஸ்ரீ தேவி மீனாட்சியே பார்வையின் திருஷ்டிக்கு அதி தேவதையாவாள். பிராண சக்தி கண்களின் மூலம் வெளியே பாய்ந்து செல்வது மற்றும் அதையே மீண்டும் உள்நோக்கித் திருப்புவது ஆகிய எல்லாம் ஸ்ரீ தேவி மீனாட்சியின் அருளேயாகும்.

ஸ்ரீ தேவி மீனாட்சியின் சித்தி பெற்ற யோகிகள், சித்த புருஷர்கள் தங்கள் கண்களிலிருந்து ஒளி வீசும் ஜோதியினுடைய சக்தியின் மூலம் செத்தவனையும் உயிருடன் மீண்டும் எழுப்பும் வல்லமையைப் பெற்றவர்களாவார்கள். எனவே இறந்தவனையும் மீண்டும் உயிருடன் எழுப்பும் சக்தி கண்களில் ஜொலிக்கும் பிராண சக்தியில் தான் அடங்கியுள்ளது என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும். அவ்வளவு ஏன்? கொடிய வகை விலங்கினங்களான புலி, சிங்கம் போன்ற மிருகங்கள் கூட தங்களுடைய இரையைக் கூர்ந்து நோக்கிப், பார்வையின் மூலமே தன்வயப்படுத்தி அதனை வேட்டையாடிக் கொன்று புசிக்கின்றன.

எப்பேர்ப்பட்ட கொடூர செயல் படைத்த மனிதர்களையும், துஷ்ட குணம் கொண்ட மிருகங்கள் மற்றும் இயற்கையின் சீற்றங்கள் இவை யாவற்றையும், சித்தி பெற்ற மகான்கள் தங்களுடைய கண்களின் "பார்வையின்" வலிமையினால் அடக்கி வைத்து விடுவார்கள். தெய்வீக அருள் பெற்ற சித்தர்கள் மற்றும் யோகிகள் சகல விதமான விஷ ஜந்துக்களையும் "நில்" என்று தங்கள் கண்களின் மூலம் உத்தரவிட்டால் அப்படியே நின்று விடும். மீறினால் எரிந்து சாம்பலாகி விடும். மனிதனின் கண்களுக்கு அப்படிப்பட்ட மகத்தான சக்தியை யோகம் அளிக்கின்றது. மனிதனின் கண்களில் தான் 3/4 பங்கு பிராண சக்தி அடங்கியுள்ளது. எனவே ஸ்ரீ தேவி மீனாட்சியின் கிருபையை யோக சாதனையின் மூலம் பெற நாம் முயல வேண்டும் என்ற கருத்து இதன் மூலம் மிகவும் உறுதியாக நிரூபணமாகின்றது.

சோம சக்கரம்

நம்முடைய ஸ்தூல தேகத்தை வலை போல் பின்னிக் கிடக்கும் "பூதாகாசத்தின்" நிலைக்கு அப்பால் சென்று "மன அடக்கம்" மூலம் அதனைக்

கட்டுப் படுத்தி, மனத்தை ஓய்வு கொள்ளச் செய்ய வேண்டும். அதன் ஆழத்தின் உள்ளே ஆழ்ந்து செல்லும் போது, உடல் மூச்சைப் பின்பற்றித் தொடர்ந்து சென்று கொண்டுள்ள அதன் மர்மத்தையும் கடந்து, மூச்சற்ற நிலையில், மனம் துல்லியமாக ஒருமைப் படுகின்றது. அங்கு தான் "சோம சக்கரம்" என்கின்ற நிலக்குள் நன்கு பரவி அதனுள் வியாபகமாகி நிற்கும் தெய்வீக ஒளியின் அலைகளுக்குள் மனம் ஏகோபித்து நிற்கும். மனிதனின் உயிர் என்பது உண்மையில் அதுதான்! மற்றும் அதனில் எவன் ஒருவன் தொடர்ந்து உறுதியாக முன்னேறிச் சென்று, நன்கு வளமாக்கி, மூச்சினில் "சூரிய கலையைத்" தூண்டி வலிமையடையச் செய்கின்றானோ, அந்த அளவிற்கு "ஜோதி வட்டம்," சுயம் பிரகாசமாய் அவன் முகத்தைச் சுற்றி வட்டமான முழு நிலவைப் போல் அற்புதமாக ஒளி வீசத் துவங்கும்.

சோம வட்டம்

சோம வட்டம் என்கின்ற ஆன்மிக ஜோதியின் பிரகாசமான அந்த ஒளிக் கதிர்களின் சிதறல்களின் திவ்விய நிலையே "தெய்வீகப் பேரறிவின் அற்புதச் சுடராகும்." சோம வட்டத்தின் ஒளிக்கதிரின் சிதறல்கள் அனைத்தும் நாளடைவில் பரவலாகி, ஒளி வெள்ளமாகி, கொத்துக் கொத்தாக மாறிப் பூர்த்தியாகும் போது "ஆத்மானந்தத்தில்" அப்படியே மூழ்கடித்து விடுகின்றது. அதுவே ஒப்பற்ற பிரம்மானந்தத்தில் "அறிவாகாச நிலைக்குக்" கொண்டு செல்லும்.

இந்த யோகத்தினுடைய அபூர்வ நிலையின் வைபவமே "வைகுண்டம்" என இந்து மத தர்ம சாஸ்திரத்தில் தொன்று தொட்டு சொர்க்க லோகத்தின் அனுபவமாக விளக்கிக் கூறப்பட்டுள்ளது. ஞான தேகம் அந்நிலையில் தான் ஓர், இருவர் அபூர்வ சித்தி பெறும் மகாத்மாவின் உரிமையில் கோரப்படும். அதில் தான், அணுப்பிரமான ஆத்மாவின் திவ்விய சரீரம், ஆகாயத்தின் வான் வெளியில் சாஸ்தமாக வாசம் புரியும்.

சொரூப சித்தி

அணுவின் சக்தி மிக்க ஆற்றல்கள் அனைத்தும் நமது ஸ்தூல உடலில் தங்குவது கிடையாது. பின் நமது உடலை முழுவதும் ஆட்கொள்வது எது என்று ஒரு கேள்வி எழும். ஜடத்தின் மூலக்கூறுகள் தான் ஆக்கிரமிப்புச் செய்கின்றன. அதன் காரணமாக மனிதனுக்குச் சாதகமாகவே செயல்பட வேண்டிய "புத்தி"

தடுமாற்றமடைந்து பூர்வீகக் கரும வினைகளின் வாசனைக்கே துணை போகும் "அறிவற்ற ஜட புத்தியாக" செயல்படுகின்றது என்பது தான் உண்மையிலே நாம் துயரம் கொள்ள வேண்டிய விஷயமாகும். எனவே ஸ்தூல உடலின் நிர்ணயம் முழுவதும் மிக நுட்பமான செல்கள் மற்றும் திசுக்களின் அடர்த்தியால் பரவியுள்ளது. ஜடத்தின் மூலக்கூறுகள்தான் உடலின் அசுத்ததிற்கும் (கந்தம்) மற்றும் நோய் பரப்பும் நுண்கிருமிகளுக்கு இடமளிக்கும் விதமாக உள்ளது.

புரோட்டான் அலைகளுக்கு அப்பால் சென்று ஆராய்ந்தால், அணுப்பிரமாணமான சூட்சும சரீரம், ஸ்தூல தேகத்தின் அமைப்பிலே நீடித்திருக்கின்ற மர்மத்தை உணர்ந்து கொள்ளலாம். எண்ணங்களின் சலன அலைகளுக்கு அப்பால் அதன் ஆழத்தின் அடிமட்டத்தில் மிகவும் பாதுகாப்பாகவும், பத்திரமாகவும் உள்ள அந்த ரகசியத்தை "சொரூப சித்தியில்" மட்டுமே அறிந்து கொள்ள முடியும். "சொரூப சித்தியில்" யோகியின் கண்களில் தோன்றும் வெளிப் பார்வை முழுவதும் மறைந்து விடுகின்றது.

பரம அணு

"பரம அணு" என்பது தான் ஸ்ரீ வித்தையில் சூரிய கலை, ஆதித்ய கலை, அகாரம், ஓங்காரம் எனப் பலவித பெயர்களில் அழைக்கப்படுகின்றது. பரவசமூட்டும் பேரானந்தத்தில் குளுமையான பூரண சந்திரனுடைய ஒளிக் கதிர்களின் பிரகாசத்தினால் ஜொலிக்கும் அதன் மேல் "சொரூப சித்தியில்" அவனுக்குள்ளேயே தெய்வீக பேரொளிக் கதிர்களின் சிதறல்கள் அமைத்துக் கொள்ளும். மனத்தின் அதி சூட்சும அலைகளின் மேல் அமரகவி சித்தேஸ்வரர் அதனில் மலர்ச்சி பெற இன்னும் சில ஆண்டுகள் தான் கால அவகாசம் மீதம் இருந்தது. ஸ்ரீவித்தையின் உச்ச கட்டமான "சோம வட்டம்" என்கின்ற அதுவே உயிரின் பிரகாசமாகும்.

புரோட்டான் அலைகளுக்கு அப்பால் சென்று, அதே சமயத்தில் ஸ்தூல உடலில் நீடித்து நிலைத்து நின்று கொண்டும், எண்ண ஓட்டங்களுக்கிடையே பாதுகாப்பாகவும், பத்திரமாகவும் உள்ள அணுவை (அணுப் பிரமாண சூட்சும சரீரத்தை) அவ்வளவு எளிதில் அடையாளம் கண்டு பிடித்து வைக்க இயலாது.

சொரூப சித்தியில் யோகியின் கண்களுக்குப் புலப்படும் வெளித் தோற்றமான ரூபம் அனைத்தும் மறைந்து விடும். சொரூப சித்தியே பேரானந்த ஸ்தானமாகும். சொரூப சித்தியில் எவன் ஒருவன் நீடித்து நிலைத்து நிற்கும்

வல்லமையைப் பெறுகின்றானோ அப்பொழுது தான் அவனுள் "அணு" படிப்படியாக அவன் சுவாசத்தினுள் சீராக அமிழ்ந்து மூழ்கிச் சென்று, அதன் முடிவில் எப்படி எல்லாம் வல்ல இறைவன், சர்வ வல்லமை படைத்த "பூதாகாசத்தை" அடக்கி ஆட்சி புரிகின்றானோ அது போல் ஆதிக்கம் புரிய முடியும்.

சம்பூரணக் கலை

அப்படிப்பட்ட யோக சாதனையை வெற்றியுடன் செய்து முடிக்கும் அவனே, ஒரு "ஜீவன் முக்தன்" எனவும், என்றும் சாஸ்வதமாக வாழும் வல்லமை பெற்ற "சீரஞ்ஜீவீ" எனவும் அழைக்கப்படுவான். யோகி என்பவன் அறிவற்ற ஜட அலைகளின் ஆதிக்கத்திலிருந்து எப்பொழுது விடுதலை பெற்று, அதன் மூலம் எண்ணத்தைத் தாண்டி, மூலப் பிராணனை உயிர் மூச்சுடன் ஒன்று கலக்கச் செய்கின்றானோ அவனுக்குத் தான் "சோடச கலை" என்கின்ற அந்த ஒப்பற்ற கலை, யோகத்தின் வைபவங்களை எல்லாம் அள்ளித் தருகின்றது.

முன் கூறப்பட்ட யோகத்தின் சிறப்பு அம்சங்கள் அனைத்தும் அமரகவி சித்தேஸ்வரருடைய ஆன்மிக சாதனையின் சுய அனுபவத்தினால் பெறப்பட்டவையாகும். அனைத்து தரப்பு மக்களுக்கும் பகிரங்கமாக சிருஷ்டியின் ரகசியங்களை அறிந்து கொள்ள வேண்டும் என்கின்ற நோக்கத்தில்தான் அவைகள் இந்த புத்தகத்தில் மிகவும் விமர்சையாக வலியுறுத்திக் கூறப்பட்டுள்ளது. யோக மார்க்கத்தில் "ஸ்ரீவித்தை" என்கின்ற அந்தக் கலையே, தனக்குள் தேடியலைந்து, தன்னைத் தன் உயிரிலேயே சுய உணர்வின் மூலம் அடையாளம் காண்பது தான் "சம்பூரணக் கலை" எனப்படும்.

சாஸ்வத பதம்

மனிதனின் ஸ்தூல உடலின் வெளிப் புறத்தைச் சூழ்ந்து கொண்டுள்ள பிரகாச மிக்க ஒளி அலைகளைச் சாதாரணமாகப் புறக் கண்களுக்குப் புலப்படாத உயிரைப் பற்றிய ஒரு சிறிய துப்பு சமீபத்தில் விஞ்ஞானக் கருவிகளின் துணையுடன், ஆராய்ச்சி செய்து கண்ட பிடித்துள்ள சோவியத் நாட்டு விஞ்ஞானிகளுக்கு, அது வெறும் ஒரு சாதாரண எச்சரிக்கை தான். ஆத்மனுடைய வெளிப்புறத்தின் ஒளிமயமான தோற்றத்தை அதனுடைய

ஓய்வில்லாத எண்ண ஓட்டத்தின் அலைகளினால் சலனப்பட்டுக் கொண்டிருக்கும் அதன் துயரமான ஒரு சிறு பகுதியின் கீறலைத் தான், இன்றைய விஞ்ஞானம், நவீனப் புகைப்படக் கருவிகளின் துணையுடன் கண்டு பிடித்துள்ளது. இன்னும் இதற்கு மேல் ஆழ்ந்து செல்ல வேண்டிய பல கடினமான நிலைகள் அதிநுட்பமான வகையில் அதில் அடங்கி உள்ளன.

ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய ஜீவித வாழ்க்கையின் புதிரான மர்மங்களைப் பற்றிய பாடங்களை எல்லாம் யோக சாதனையின் வாயிலாகக் கற்று, தனக்குள் சுய பரிசோதனையின் மூலம் அனுபவப் பூர்வமாக உணர்ந்து கொள்ள வேண்டியது அவசியமாகும். இயற்கையினுள் மறைந்துள்ள அதன் தொடர்புகளை எல்லாம் அறிந்து கொண்டு, மற்றும் அதனை எல்லாம் வெளிப்படுத்தி அதன் புதிரான ரகசியங்களை எல்லாம் விவரித்துக் கூறும் யோகத்தின் முக்கியத்துவம் ஆகிய இவ்விரண்டு சித்தாந்தங்களும் இதன் மூலம் தெளிவாக நிரூபணமாகிறது.

எனவே சோம வட்டம் என்பது தனக்குள் செயல்படும் உயிரில் ஆழ்ந்து சென்று, நித்தியமான "*சாஸ்வத பதம் நித்திய சுகம்*" என்கின்ற திவ்விய நிலையை அடைவதையே குறிக்கும்.

# ஓங்காரத்தைச் சுற்றியே இயங்கும் பிரபஞ்சம்

## புனிதமான நாபி கமலம்

நம்முடைய ஸ்தூல தேகத்தின் அடியில், அதன் இறுதிப் பகுதியில் அமைந்துள்ள குதம், குய்யம், மற்றும் வயிறு ஆகிய இம்மூன்றும் முக்கோண வடிவில் இணைந்து செயல்படும் விதமே "நாபி" எனப்படும். மனிதனின் உடலில் மிகவும் புனிதமான நாபியே "மூலாதாரம்" எனப்படும். அதுவே பஞ்ச பூதங்களில் ஒன்றான பிருத்வி பூதத்தின் சொந்த இருப்பிடமாகும்.

நாபியின் இந்த முக்கோண வடிவத்தில் மூலப் பிராணன், மனம், ஸ்தூல உடல் (*The Triad*) ஆகிய இம்மூன்றும் ஒன்றாக இணைந்துள்ளன. மூல கணபதி இம்மூன்றின் அதி தேவதை என அழைக்கப்படும் இவரே, நம்முடைய வெளி மூச்சின் (Ruler of Breathing) அதிபதியும் ஆவார்.

| | | |
|---|---|---|
| | மூலாதார முக்கோணம் | *The Triad* |
| | மூலப் பிராணன் | *Vital* |
| | மனம் | *Mind* |
| | ஸ்தூல உடல் | *Physical* |

## வக்ர துண்டம்

மூச்சானது ஸ்தூல உடலில் உள் மூச்சு, வெளி மூச்சு, உடலில் தங்கும் மூச்சு என மூன்று விதமாக மாறி மாறிச் செயல்பட்டுக் கொண்டே உள்ளது. அதாவது ஒரு முழு நீள மூச்சாக அல்லாமல் துண்டுபட்ட / வெட்டுண்ட சுவாசமாக நம் உடலில் நடை பெற்றுக் கொண்டே உள்ளது. மூச்சை உள்ளே இழுத்துப் பின் அதை வெளியே விட வேண்டும். அது தான் அன்றாட சுவாசத்தின் ஜீவித முறை. அவ்வாறு வெளியே விட முடியா விட்டால் மூச்சுத் திணறல் ஏற்பட்டு, உடல் திக்கு முக்காடி விடும். உயிர் அதனில் தங்காது. எனவே தான் வெளி மூச்சின் இயக்கமும் மகா கணபதியின் செயலேயாகும். வெளி மூச்சு தான் ஐம்புலன்களின் இயக்கத்திற்கே காரணமாகத் திகழும் "ஐவர் நடனம்" எனப்படும். வெளி மூச்சு தான் வக்ர துண்டம் எனப்படும். இதன் மூலமே பசி, தாகம், தூக்கம், மைதுனம் மற்றும் பேச்சு ஆகிய இவை யாவும்

மானிட தேகத்தில் உண்டாகிப் பிராண சக்தியை எரித்துப் பொசுக்கி உடல் முழுவதும் நாசம் செய்கின்றது. நான்கு அங்குல நீளமுடைய பிராணனின் அழிவு இதன் மூலமே.

மன ஒய்வு

"*பிராண க்ஷயம் தேக நாசனம்.*" சாதகன் அதை எப்படித் தவிர்க்க முடியும் என்றால், ஆசை காட்டி மோசம் செய்யும் நினைவுகளை நீக்க வேண்டும். அதன்பின், புலன்களின் சலனத்தை முழுமையாகத் தடை செய்து, அதன் மூலம் ஒய்வில்லாத எண்ணங்களின் ஓட்டத்தையும் படிப்படியாக குறைத்துக் கொண்டே, மனத்தை ஒரு நிலைபடுத்தித் தனக்குள்ளே "மன ஒய்வு" பெறச்செய்யும் பயிற்சியை நன்கு பழகிக்கொள்ள வேண்டும்.

| எண்ணம், நினைவு இரண்டும் வேறு வேறு தான் | |
|---|---|
| எண்ணம் என்பது | நினைவு அல்ல. ஆசை, நியமனம் கோட்பாடு நினைவில் |
| நினைவு என்பது | (மனிதனின்) கரும வினை நுகர்வு |

ஆசைகள் உள்ள வரை மனத்தில் எண்ணங்கள் ஓய்வில்லாமல் தோன்றிக் கொண்டே இருக்கும்.

"நினைவு" என்பது பிரம்மாண்டம் அனைத்தும் பரவியுள்ளது. "தேக நினைவை" நீக்கி "தேவ நினைவைப் பெறுதல்" என்பதே யோகியின் உயர்ந்த இலட்சியமும், யோகத்தின் பூர்த்திக் கட்டமுமாகும். "நினைவின் அமைதி" காண்பது தான் யோகத்தின் உச்சக் கட்டமாகும். "சாந்தி காணுதல்" என்பது அதுவே.

| | | |
|---|---|---|
| மனம் | புலன்கள் பக்கமாகத் திரும்பும்போது | சந்திர கலை |
| மனம் | உயிரின் பக்கமாகத் திரும்பும் போது | சூரிய கலை |
| உடலில் | புலன்கள் செயல்படும் இடம் | புருவநடு மையம் |
| மனத்தின் இருப்பிடம் புருவ நடுமையத்தில் உள்ளது | | |

சக்தி பீடம்

மனம் ஒய்வு பெறச் செய்யும் கலையின் மூலம் திடசித்தம் பெற்று, அதன் மூலம் பிராணனைக் குதம், குய்யம், வயிறு ஆகிய இம்மூன்று கீழ்ப் பகுதியில்

'அதோமுகமாகப்' பாய்வதற்கு பதிலாக, தலைப் பக்கமாக மேல் நோக்கித் திருப்பி விட வேண்டும். அவ்வாறு "ஊர்த்துவ கதியில்" மேல் நோக்கித் திரும்பும் பிராணன் "அந்தர் ஆத்மா" ஸ்தானத்தை அடைகின்றது. உயிரில் அடங்கியிருக்கும் பிராண சக்தி தான் எல்லாவற்றிற்கும் மூலம். உயிரில் இந்தப் பிராண சக்தியே மானிடனின் "ஜீவ சக்தி" என அழைக்கப்படுகின்றது. பிராண சக்தியிலிருந்து தான் மூலப்பிராணன், மனம், ஸ்தூல உடல் (*The Triad*) ஆகிய இம்மூன்றும் தனித்தனியாகப் பிரிந்து வேறு வேறாக செயல்படுகின்றன. இம்மூன்றின் அடித்தளத்தின் அமைப்பில் திருமூலத்தில் உண்டாகும் உயிரின் தோற்றம் தான் "சக்தி பீடம்" என அழைக்கப்படுகின்றது. இந்த இரண்டும் – பிராண சக்தியும், உயிரும் ஒன்று மற்றொன்றுடன் பிணைக்கப்பட்டு இயக்கப்படும் இதுவே எப்பொழுதுமே அவைகளுக்குள் தனிப்பட்ட முறையில் பிரிந்து இயங்குவதில்லை. (The 2 are interlocked and never exclusive in themselves) பிராண சக்தி மற்றும் உயிர் ஆகிய இவ்விரண்டையும் தனித்தனியாக பிரிப்பது தான் யோகத்தின் ஒப்பற்ற கலையாகும்.

பிருத்வி தத்துவம்

இவை அனைத்தும் மானிடனின் ஜீவ தேகம் உருவாக்குவதற்குக் காரணமாகத் திகழும் கர்ப்ப பிண்டத்தில், சிருஷ்டியில் மிகவும் விநோதமான முறையில் அமைந்துள்ளன. கர்ப்ப பிண்டத்தில் திட வஸ்துவாக இருக்க வேண்டிய பிருத்வி அதற்குப் பதிலாக திரவ வஸ்துவான அப்புவின் ரூபத்தில் உருமாறிச் செயல்படுகின்றது. (*Prithvi is Appu instead)* நம்முடைய ஸ்தூல உடலை உறுதியான ஜட வஸ்து என்கிறோம். ஆனால் அதுவே தாய் கர்ப்பத்தில், பிண்டத்தில் திரவ வடிவத்திலிருந்து வளர்ச்சி பெற்று அதனை விட்டு அகன்ற பின் வெளி சுவாசத்தின் மூலம் தான் திடமான உடல் அமைப்பைப் பெறுகின்றது.

மண்பாண்டங்களை உருவாக்கும் குயவன் எப்படி முதலில் கடினமாக உள்ள களிமண்ணை தண்ணீர் ஊற்றி நன்கு பிசைந்து, அதனை கூழ் போல் ஆக்கி, பின் தன் விருப்பப்படி வளைந்து கொடுக்கும் திரவ நிலைக்கு கொண்டு வந்து பலவிதமான மண் பாத்திரங்களை வெவ்வேறு வடிவங்களில் உருவாக்குகின்றானோ அதே போல் இயற்கை சிருஷ்டியில், தண்ணீரின் தன்மையிலிருந்து, (Liquidity – அப்பு) தாய் கர்ப்பத்தில் ஸ்தூல உடலை பல

விதமான வடிவங்களில் உருவாக்கி பின் அதுவே கருவறையை விட்டு அகன்ற பின், பூமியின் வெளிக் காற்று மண்டலத்தின் உதவியுடன் நடைபெறும் ஜீவனின் சுவாச ஓட்டத்தின் மூலம் கெட்டிப்படுத்தி, ஒரு திடமான, வலிமையான தேகத்தை சகல ஜீவராசிகளுக்கும் உண்டாக்குகின்றது.

இந்த முறையே இப்பிரபஞ்சத்தில் காணப்படும் அனைத்து உயிரினங்களின் சிருஷ்டித் தத்துவ முறையாகும். இதற்கு மேல் மனிதனின் அறிவியல் விஞ்ஞானம் உள்ளே நுழைந்து செல்ல முடியாது. அல்லது சிருஷ்டிக்கக் கூடிய திறமை படைத்த இந்த முறை தான் எல்லா காலத்திலும் பொதுவாக அமைந்துள்ள இயற்கையின் விதி முறையாகும். (Universal Life around all cosmos) இதை யாராலும் மாற்றவோ அல்லது வேறு விதமாகத் திருத்தியோ அமைக்க முடியாது. அது தான் பிரம்ம தத்துவம் அல்லது பேரறிவு படைத்த இறைவனின் ஜீவித ஆட்சி முறையின் (Kingdom of God) சாஸ்வத அமைப்பு எனப்படும். மூலாதாரம் என்பது இரண்டு வகையில் செயல்படும் வழி முறையைக் கொண்டது. உடலின் கீழ் மூலமான அதோமுக நாபியிலும் அதே போல் அதற்கு மேல் மூலமான கழுத்துப் பகுதியில் "கண்ட ஸ்தானத்தில்" அமைந்துள்ள 'ரந்திரம்' என்கின்ற தேவகதியின் ஆளுகைக்குட்பட்ட ஊர்த்துவ கதியிலும் இரண்டு விதமாகச் செயல்படுகின்ற வல்லமை உடையது.

மூல கணபதி

தாய் கர்ப்பத்தை விட்டு சிசு பிறப்பில் அகன்ற பின் அந்தச் சமயத்தில் தான் நாம் ஸ்தூல தேகத்தின் வடிவத்தில் நிரந்தரமாக அதனுள் பிருத்வி தத்துவத்தில், பூதாகாசத்தில் ஸ்தாபிதம் செய்யப்படுகின்றோம். அதனுடைய ஆபத்தான திருப்பங்கள் அனைத்தும் சுவாசத்தில் பல்வேறு நிலைகளில் ஸ்தூல உடலில் உருமாற்றம் அடைந்து அவை எல்லாம் உயிரில் எடுத்துச் செல்லப்படுகின்ற ஜீவனின் துயரமான சுவாச முறையும், இவை அனைத்தின் மீட்கும் வகை தான் யோக சாதனையின் ஒழுங்கு முறையில் நெறி முறைப் படுத்தப்பட்டுள்ளது.

தாய் கர்ப்பத்தில் உள்ளே இருந்த வரை சுவாசத்தின் பாதிப்பு நமக்கில்லை. அதனால் சிசு தேவ பிரக்ஞையின் நிலையில் லயித்து மேலும் ஸ்தூல உடலில் (பூதாகாசத்தில்) இன்னும் ஸ்தாபிக்கப் பட முடியாத நிலையில்

அப்புவின் (நீரின் தன்மையிலிருந்தால் சிதாகாசத்தில் ஆனந்தமயத்தில் மூழ்கிப் பின்வரும் ஜீவித அவலங்களையும், துன்பங்களையும்பற்றி அக்கறையின்றி ஆழ்ந்திருந்தது. ஆகவே தான் குழந்தை பிறந்த போது பூப் போன்ற மிருதுவான உடலைப் பெற்றுப் பின் அதுவே சுவாச ஓட்டத்தின் மூலமே வளர்ச்சி பெறும் போது கடினமான தேகமாக மாறி இறுகிப் போய் விடுகின்றது.

குழந்தை பிறந்தவுடன் அதன் தேவ கதியின் நினைவை நீக்கி, எல்லாவற்றையும் தலைகீழாக்கி, பூத நினைவுடன் கூடிய ஸ்தூல உடலுக்கு மாற்றியமைக்கும் கணபதியே இந்தத் திடீர் திருப்பத்தின் காரணம் அல்லது பஞ்சீகரண அமைப்பு முறையை சகல ஜீவன்களுக்கும் அளித்து அருள்புரிபவராவர். இயற்கைக்கு அப்பாலிருக்கும் அதன் வலிமையான சக்தி அனைத்தும் மூல கணபதியின் கருணையின் மூலம் தான் சிருஷ்டியில் நடை பெற்றுக் கொண்டுள்ளது. (All forces beyond is His claim with Nature) ஜீவனின் உலக ரீதியான புலன்களின் வாழ்க்கைப் போக்குக்குரிய இந்தச் செயலே வக்ர துண்டம் எனவும் அதுவே மீண்டும் தன் பழைய நிலைக்குத் திரும்பும் போது (யோக சாதனையின் வாயிலாக) மூல கணபதி எனவும் அழைக்கப்படுகின்றார்.

| மூச்சின் அதிதேவதை கணபதி | |
|---|---|
| வக்ர துண்டம் | உலக ரீதியான புலன்களின் வாழ்க்கை |
| மூல கணபதி | யோக நித்திரையை அருள்பவர் |

மங்கல நாண் (அ) சூத்திரக் கயிறு

ஆகையால் தான் மூல கணபதி பூலோகத்தைச் சுற்றியுள்ள காற்று மண்டலத்தின் அதிபதியான கடவுள் (Overlord of Physical Air) மற்றும் அந்தக் காற்றின் ஓட்டத்தினால் தான் பூலோகத்தில் உள்ள அனைத்து உயிர் இனங்களும், "ஜீவிதம்" பெற்று உயிர் வாழ்ந்து கொண்டுள்ளன. மனிதன் உயிர் வாழக் காரணமாக இருக்கும் பிராணன் என்பது இங்கு உயிர் அல்ல. பிராணன் வேறு, உயிர் வேறு தான். ஆனால் அதனுடைய மங்கல நாண் (Sacred Thread) அல்லது சித்தர்களின் வழக்க முறையில் சூத்திரக் கயிறு என அழைக்கப்படுகின்றது.

ஆகவே இந்தப் பூ உலகினை வலை போல் சுற்றியுள்ள காற்று மண்டலத்தின் வெளியே மறைந்துள்ள ஒளிக் கதிரின் ஆற்றலான ஆதித்ய கலை (Solar Rays concealed in Air) மற்றும் அதே போல் தான் நம்முடைய ஸ்தூல உடலில் நாக்கின் மேலே பேச்சின் ஒலி அலையாக மிதந்து கொண்டிருக்கும் சூரிய கலையின் சக்தியால் சொல்லாக வெளிப்படும் அதுவே தாய் கர்ப்பத்தை விட்டு வெளியே அகன்ற பின்னும் சர்வ லோக சேவையில் காவல் காக்கும் காவலாளியாகவும் பொறுப்பேற்றுள்ளது. (மூலப் பிராணன், மனம் மற்றும் உடல் – இப்பொழுது இம்மூன்றும் சேர்ந்த திரியம்சமே அதனுடைய சந்திர கலையினால் (*Lunar whip*) அடித்துத் தூண்டப்பட்டு சூரிய கலையின் முக்கியத் தலைப்பகுதி வெளியே காற்று மண்டலத்திலும் மற்றும் அதனுடைய வால் பகுதியானது ஜீவனுடைய ஸ்தூல உடலின் சரீர அமைப்புக்குள்ளேயும் இடம் மாறி விரோதமாகச் செயல்பட்டு இயங்கிக் கொண்டுள்ளது. மனித சரீரத்தின் இந்த விசித்திரப் போக்கே "*தும்பை விட்டு வாலைப் பிடித்தல்*" என்கின்ற இந்த பழங்கால வாக்கியமே நம்முடைய நடைமுறை வழக்கத்திலுள்ள ஒரு பழமொழியாகும்.

ஆதித்ய கலையின் தலையை வெளியே விட்டு வாலை மட்டும் உள்ளே பிடித்துக் கொண்டுள்ள மானிடன், இந்த இரண்டும் செக்கு மாடு ஒரே இடத்தை வலம் வருவது போல மேலும் கீழுமாக ஏறியிறங்கிப் (*The 2 veer round in its up and down cycles*) புருவ நடு மையம் மற்றும் "கண்ட ஸ்தானம்" (கழுத்துப் பகுதி) இவ்விரண்டினிடையே சுற்றி வலம் வந்து கொண்டே, உயிரின் முக்கியமான மூலப்பிராணன் வடிவத்திலுள்ள மானிடனின் சொல்லில் ஒளிந்து மறைந்து பின் தோன்றும் கண்கட்டி ஆட்டத்தை விளையாடிக் கொண்டுள்ளது. (*The Vital plays hide and seek with life*)

### நாதோபாசனை சித்தி

மானிடனின் சொல்லில் அல்லது மூலப் பிராணனின் மீது ஆக்கிரமித்துப் படிந்திருக்கும் மனம், நாக்கில் ஒன்று கலந்து பேச்சின் ஒலியாக வெளியேறுகின்றது. (மனத்தின் செயல் வடிவம் எண்ணங்கள் அதுவே பேச்சின் ஒலியில் ஒன்று கலக்கும் போது அர்த்தமுள்ள சொல்லாக வெளிப்படுகின்றது.) மனம், எண்ணம், சொல், ஆகிய இவையனைத்தும் மூலப்பிராணனில் ஒன்று

மற்றொன்றுடன் கலந்து மாசுபடும் நிலைமையை யோக சாதனையில் சீர்படுத்தி, அதன் மூலம் மூலப் பிராணனைத் தூய்மைப் படுத்தி, அதன் பழைய நிலைமைக்குக் கொண்டு செல்ல வேண்டும். சிசு தாய் கர்ப்பத்தின் உள்ளேயிருந்த போது எப்படி தேவ நினைவில் லயித்துக் கிடந்ததோ, அது போல் புதுப்பித்துக் கொண்டு வரும் முறையே "நாதோபாசனை சித்தி" எனப்படும். மூலப்பிராணனில் கலந்து மாசுபடும் இதனை ரத்து செய்வதே 2 மாத்திரை என்கின்ற அளவுடைய கேவல கும்பகத்தின் ஆற்றலைப் பெறுதலாகும். இந்தச் சாதனையை எந்த ஒரு மனிதன் தன் ஜீவித வாழ்க்கையில் சித்தி பெற்று வெற்றி பெறுகின்றானோ, அவன்தான் யோகத்தின் உள்ளே நுழைந்து செல்ல அனுமதி அளிக்கப்படுகின்றான்.

அது வரையில் அவனுக்கு யோகத்தைப் பற்றிப் பேசுவதற்கும் கூட அருகதை கிடையாது. அனுமதியற்றவனுக்கு எந்த யோக்கியதையும் கிடையாது. இதற்கு அப்பால் கடந்து செல்வது (இரண்டு மாத்திரை அளவுள்ள கும்பக ஆற்றலை) மனிதனின் உரிமையில் இல்லை என்பதை இதன் மூலம் தெளிவுபடுத்தப் படுகின்றது. அப்படி ஒரு வேளை அவனுடைய முயற்சி எத்துணை கடுமையாக இருந்தாலும், இந்த ஜன்மத்தில் அடையும் பலன் இதுவே. இதற்கு மேல் அவனால் அடியெடுத்துச் செல்லவே முடியாது.

தத்துவம் 31

ஆனால் அமரகவி சித்தேஸ்வரரின் நிலைமை முற்றிலும் வேறு பட்டதாகும். அவர் பிறப்பிலேயே ஓர் அதிமானுஷராகத் தோன்றினார். அமரகவி சித்தேஸ்வரர் மனிதப் பிறவி எடுக்கும் போதே ஒரு பிறவி சித்தராக இருந்த காரணத்தினால்தான் அவருடைய யோக சாதனையின் தொடக்க காலத்திலேயே அவரால் மகா புருஷ யோக கலையின் அனைத்து வழிகளின் மேல் நிலைக்கு செல்லும் பிரத்யேக அனுமதியை இறைவன் அவருக்கு அளித்திருந்தார் என்பதை நாமனைவரும் நினைவில் கொள்ள வேண்டிய விஷயமாகும். எனவே அமரகவி சித்தேஸ்வரர் யோக நித்திரை அல்லது மனத்தின் ஒய்வு (Mental Repose) என்கின்ற ஒரு ஒப்பற்ற சாதனையின் தவத்தின் மூலம், யோகத்தின் மேல்நிலை வைபவங்களை எல்லாம் எந்த விதமான சிரமமும் இல்லாமல், சுலபமான முறையில் அவரால் தேடிச் செல்ல முடிந்தது.

## நிமிர்ந்த மூச்சு (Erect Breathing)

ஷட்சக்கர சித்தி பெறுவது என்பது மேற்கண்டவாறு கூறப்பட்ட இரண்டு மாத்திரையில் அதாவது தத்துவம் 31 வரை மனிதன் மனிதனாகவேயிருந்து சுய முயற்சியில் கடக்க முடியும். மனித உடலின் கழுத்துப் பகுதியில் அமைந்துள்ள மேல் மூலம் என்கின்ற "கண்ட ஸ்தானமே" யோக சாதனையில் அதன் கீழ் மூலமாக விளங்கும் நாபியை வெற்றி கொண்டபின், அதுவே "ஸ்ரீ கண்டம்" என்றழைக்கப்படுகின்றது. அந்த யோகத்தின் பெருமை மிக்க வைபவம்தான் தற்போது அமரகவி சித்தேஸ்வரரின் நிரந்தரமான இருப்பிடமாகும். தற்பெருமையில்லாதவனுக்கே கிட்டும். அந்த ஒப்பற்ற தெய்வீகச் சேவையிலிருந்து தான் அமரகவி சித்தேஸ்வரர் இனி மேல் ஸ்ரீ கண்ட ஸ்தானத்தில் நிரந்தரமாக வசித்துக் கொண்டு, மேலும் பல துரிய யோக சாதனைகளைத் தபோ நிஷ்டையில் துவக்க உள்ளார்.

| | | |
|---|---|---|
| தேகத்தின் மேல் மூலம் | கண்டம் கழுத்து பகுதி | ஊர்த்துவமுகம் |
| தேகத்தின் கீழ் மூலம் | மூலாதாரம் | அதோமுகம் |

இறைவனின் மெய் அன்பர்கள் வாழுமிடமான அங்கிருந்து தான் நிமிர்ந்த மூச்சைப் பெற்று அல்லது ஊர்த்துவ தாண்டவம் என்கின்ற தன்நிலை மாறா நிலையில், பற்றில்லா உள்ளம் வந்த பின் தோன்றும், பூரண நிலையில் அடி எடுத்துச் செல்லும் தெய்வ அநுக்ரகத்தை அவர் பெற்றுள்ளார். அமரகவி சித்தேஸ்வரர் தன்னுடைய 60வது வயதில் மூலப் பிராணனின் பாதையில் அடி எடுத்து வைத்துச் சென்றுள்ளார். இதற்கு மேலுள்ள 'மகா புருஷ யோகத்தின்' ஒப்பற்ற நிலையின் பல படிகளை அவர் தன்னுள் தரித்துக் கொள்ள வேண்டுமானால், கடினமான தவம் செய்து, வெளிக்காற்று மண்டலத்தில் கலந்திருக்கும் 'சூரிய கலையை' (அகார சித்தி) மேலே கூறியது போல் அதன் முக்கியமான தலைப் பகுதியைத் தனக்குள் பிடித்து கொண்டு, அதன் வால் பகுதியாக விளங்கும் சொல்லில் இணைத்து வெற்றி பெறும் "மூலாதார சித்தியை" அவர் பெற வேண்டும்.

## யோகக் கனல்

மூலாதார சித்தி என்பது இங்கு கீழ் மூலமான நாபிச் சக்கரத்தை வெற்றி கொள்வதையே குறிக்கும். அதுவே பக்குவமான முறையில் அதன் மேல்

மூலமான ஸ்ரீகண்ட சித்தியில் நிலை பெறும் போது தான் யோகத்தின் ஒப்பற்ற நிலையான பிரணவ நாதம் உதயமாகும். அங்கு அதனுடைய பாதையில் தான் சூரிய கலையின் "யோகக் கனல்" (Solar Heat) அல்லது மூல குண்டலினியின் தேஜோமய சக்தியை சித்த புருஷர்கள் இறைவன் கருணையினால் பெறுகின்றார்கள். மூச்சை முழுவதும் கட்டுப்படுத்தி நிறுத்தி, அதற்கு அப்பால் தனக்குள் வெகு தூரம் ஆழ்ந்து செல்லும் போது தான், அதனைத் தபோ நிஷ்டையில் உரிமை கோர முடியும். அமரகவி சித்தேஸ்வரர் அந்த யோக கலையில் அர்த்தாம்ச சித்தியை அடைந்து இந்த தெய்வீக புத்தகத்தில் அதன் ரகசியங்களை தெளிவுர எழுத வேண்டும் என்கின்ற உயர்ந்த நோக்கத்தில் அடிப்படையிலே இயற்றியுள்ளார். இதுவரை யாராலும் சரியான முறையில் விளக்கிக் கூற முடியாத யோகத்தின் வைபவங்களை எல்லாம் தெளிவாக விளக்கி எழுத வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்திற்காகவே இறைவன் அமரகவியை மேன்மேலும் ஊக்கப்படுத்தி, அந்த ஒப்பற்ற அதீத நிலையை அவருள் அனுபவிப்பதற்காகவே அநுக்கிரகிக்கப் பட்டுள்ளார். எனவே அமரகவி "சிந்துாரன்" அநுக்கிரத்துடன் இயற்றிய "நிஜானந்த போதம்" என்கின்ற புத்தகம் "கைத்தல நிறை கனியாகும்."

இங்கு நிலை நாட்டப்படும் மற்றொரு முக்கிய சித்தாந்தம் யாது எனில் ஆன்மிகத்தில் விரிந்து பரந்துள்ள அதன் ஆதிக்கத்தில் அதனைத் தெரிந்து கொள்வதே பேரறிவின் சகல விதமான சக்தியைப் பெறுவதற்குச் சமமாகும் (Knowledge is Power in Spiritual realms) நீ எதுவாக மாற வேண்டும் என முயற்சி செய்கின்றாயோ, அதைப் பற்றித் தான், நீ தெரிந்து கொள்ள (To know is to Become) ஆவலாய் உள்ளாய் என்பது.

பரகாயப் பிரவேசம்

ஒரு மனிதனுக்கு அவன் வாழ்க்கையில் அடைய வேண்டிய உச்சகட்ட நிலை என்பது யாதுஎனில், தனக்குள்ளே தன்னுடைய ஸ்தூல உடலில் அத்து மீறி உள்ளே நுழைந்து ஜட தேகத்தின் வலிமை மிக்க பூதாகாசத்தின் அலைகளை எல்லாம் தானே சுயமாகவே தாண்டிச் சென்று, ஆகாய தத்துவத்தில் தன்னாட்சி புரியும் சித்தியைப் பெற வேண்டும். சிருஷ்டி தத்துவத்தில் ஜீவன் மறுபிறப்பில் எப்படி அவன் ஒரு உடலின் கூட்டை விட்டு

மற்றொரு உடலின் கூட்டுக்குள், கூடு விட்டுக் கூடு பாய்ந்து உருமாறிச் செல்கின்றனோ, அதே மாதிரியான சாகச நிகழ்ச்சியை தெய்வீக அனுபூதி பெற்ற மகான்கள், தங்களுடைய பூலோக வாழ்க்கையில் வாழ்ந்து கொண்டிருக்கும் போதே பூரண நினைவுடன், சுய பரிசோதனையின் மூலம் பரீட்சித்து அறிந்து கொள்கின்றனர்.

சென்ற சில நூற்றாண்டுகளுக்கு முன் நம்மிடைய வாழ்ந்த அதிமானுஷர்களான திருமூலர், ஆதிசங்கரர் போன்ற திவ்விய புருஷர்கள், அவர்கள் எடுத்த மனிதப் பிறவியில் வாழ்ந்து கொண்டிருக்கும்போதே இயற்கையை அடக்கியாளும் பரகாயப் பிரவேசம் என்கின்ற கூடு விட்டுக் கூடு பாயும் அற்புத சித்தியைப் பெற்றிருந்தார்கள். அதுவே ஆகாயத் தத்துவத்ததை தன்னுள் அடக்கி தன்னாட்சி புரிதலாகும்.

அதுவே சௌந்தர்ய லஹரியில் ஸ்ரீமத் பகவத்பாதாள் வலியுறுத்திக் கூறும் ஆத்மனின் நான்கு நிலைகளான 'நாபி, இருத், கண்ட, ரசனா' என்கின்ற உயிரின் நான்கு நிலைகளில் இறுதியாக உள்ள 'ரசனா' என்கின்ற திவ்விய நிலையில் புரியும் யோகத்தின் சாகசமே "பரகாயப் பிரவேசம்" எனப்படும்.

நாபி

நம்முடைய தேகத்தின் இறுதியில் அமைந்துள்ள குதம், குய்யம், வயிறு ஆகிய இம்மூன்றும் முக்கோண வடிவில் இணைந்து இருப்பதே "நாபி." அதுவே மூலாதாரம் எனப்படும். ஸ்தூல தேக ஜீவித வாழ்க்கையின் இயக்கத்திற்குக் காரணமாயிருக்கும் மூலப் பிராணன், மனம், உடல் ஆகிய மூன்று விதமான காரியங்களையும் ஒன்று சேர்த்து அலுவல் புரிவது நாபியே ஆகும். அதுவே "அக்னி குண்டம்" என அழைக்கப்படுகின்றது. நாபிக்குக் கீழ் நோக்கிச் செல்லும் சுவாசமே, ஜீவனின் வருத்தம் தோய்ந்த, கரும தேகத்திற்கே சொந்தமான அதோமுக சுவாசம் எனப்படும். நாபியின் அதிதேவதை "மூல கணபதி" ஆவார். அதுவே பிருத்வி பூதம் எனவும், சக்தி பீடம் எனவும் அழைக்கப்படுகின்றது. தேகத்தின் கீழ் மூலமான நாபியை வெற்றி கொள்வது தான் "ஷட்சக்ர சித்தி" எனப்படும். தத்துவம் 31 அடைவது என்பது இதுவே. மனித முயற்சியில் யோக சாதனையில் அடையும் உச்சக் கட்ட சித்தி இதுவே. இதற்கு மேல் உள்ள நிலையில் மனித முயற்சியில் செல்வது என்பது இயலாத காரியமாகும்.

| மூலதாரம் நாபி இரண்டுக்கும் தொடர்பு உண்டு | | |
|---|---|---|
| 1. குதம்<br>2. குய்யம்<br>3. வயிறு | முக்கோண வடிவத்தில் இணைந்த செயல்படும் இடம் நாபி | அதுவே மூலாதாரம் |
| நாபியின் முக்கோண வடிவத்தில்<br>1. மூலப் பிராணன்<br>2. மனம்<br>3. ஸ்தூலத்தின் ஜட தேக அலைகள் | | மூலாதாரம்.நாபி இரண்டுக்கும் தொடர்பு உண்டு பிருத்வி அம்சம் |

இருத்

உயிருக்கு விரோதமாகச் செயல்படும் அதன் எதிரிடையான நிலையிலிருந்து விலக்குப் பெற்று அதற்குச் சாதகமான இயக்கத்தை அதனுடன் அமைத்துக் கொள்ளுதல். அந்தத் திறமையின் வலிமையால் நினைத்தபொழுது அதிலிருந்து விலகிச் செல்லும் ஆற்றலைப் பெறுவது தான், "மனத்தை அடக்கியாளும் வலிமை" அல்லது "சீரஞ்ஜீவி" என்கின்ற நிலையை அடைதல் என்பதும் இதுவே.

ஆகாயத் தத்துவத்தைத் தன்னாட்சி புரிதல் என்பது கூடு விட்டுக் கூடு பாயும் சக்தியைப் பெறுதலாகும். யோகிகள் அந்தச் சக்தியை அவர்கள் எடுக்கும் மனிதப் பிறவியிலேயே பிரயோகம் புரிதலே "பரகாயப் பிரவேசம்" எனப்படும். அல்லது அடுத்த பிறவியில் ஓர் உடலை விட்டு மற்றொரு உடலுக்குத் தன் சுய விருப்பப் படியே உருமாறிச் சென்று, தன் தேகத்தைத் தன்னுடைய சுய விருப்பத்தின்படித் தானே சுய நிர்ணயம் செய்து கொள்ளும் அதிகாரத்தின் மூலம், இயற்கையை அடக்கி ஆளும் உரிமை பெறுகின்றனர்.

கண்டம்

மானிடனின் கழுத்துப் பகுதியை அலங்கரிக்கும் இடமே கண்ட ஸ்தானமாகும். இதுவே மூலாதாரத்தின் மேல் மூலமான 'ரந்திர ஸ்தானம்' எனப்படும். தேவகதியுடன் ஜீவனை இணைத்துக் கொள்ளும் ரகசியக் கதவின் பாதை இங்கு தான் அமைந்துள்ளது. ஜீவ பிரம்ம ஐக்கியத்தை அளிக்கும் "விசுத்தி சக்கரம்" எனப்படுவதும் இதுவே. சுவாசம் மேல் நோக்கிச் செல்லும்

முறையே ஊர்த்துவமுகம் எனப்படும். "மூலாதார சித்தி" என்பது சித்த புருஷர்கள், மகான்கள் மட்டுமே தபோ நிஷ்டையில் அடையக் கூடிய ஒரு ஒப்பற்ற சித்தியாகும். ஆகாயத் தத்துவத்தைத் தன்னாட்சி புரிதலே கண்ட சித்தி / மரணத்தை அளிக்கும் சடலத்தை வெற்றி கண்டு இயற்கையை அடக்கியாளும் சித்தி பெறுதலாகும்.

ரசனை

ரசனா என்பது அறிவுக் களஞ்சியம் அல்லது சுயம் பிரகாச நிலையாகும். (Knowledge is Power in Spiritual Realms)

பிரம்ம சமாதி

பூமியில் பிறக்கின்ற ஒவ்வொரு மனிதனும் நிச்சயமாக ஒரு நாள் இறந்து விடுவான். ஆனால் மரணத்துக்குப் பின் தொடர்ந்து வரும் அடுத்த பிறவியில் அவன் எந்த மாதிரியான வடிவத்தை அல்லது உருவத்தை அடைவான் என்பது யாருக்குமே தெரியாத உண்மையாகும். அவ்வளவு ஏன், அது அவனுக்கே கூட தெரியாத ஒரு பிரம்ம ரகசியமாகும். ஆனால் மகான்களின் வாழ்க்கை என்பது அப்படியல்ல. அவர்கள் இந்த நேரம், இந்த தேதி, இந்த இடம் என முன்கூட்டியே அறிவித்து, பூரண சுய நினைவுடன் ஜீவசமாதி நிலையை அடைவார்கள். மகான்கள் ராகவேந்திரர், பட்டினத்தடிகள், தியாக பிரம்மம், வடலூர் வள்ளலார், தாயுமான சுவாமிகள், நெரூர் சதாசிவ பிரம்மம் போன்ற தெய்வீக மகா புருஷர்களின் வரிசையில் இடம் பெற்றுள்ள அமரகவி சித்தேஸ்வரரும், சித்த புருஷர்கள் கடைபிடித்துச் சென்ற அதே வழி முறையை தன்னுடைய ஜீவித வாழ்க்கையில் பின்பற்றிச் சென்றுள்ளார்கள். இறைவனின் கிருபையால் அகண்டாகார விருத்தியான பிரம்ம சமாதியில் முக்தி அடைந்து, மனித குலத்தின் நன்மைக்காகவே தங்களை முழுவதும் அர்ப்பணித்துக் கொண்டுள்ளார்கள்.

கண்ட சித்தி

நாமனைவரும் ஜீவித உயிர் வாழ்க்கை என்கின்ற ஒரு எல்லைக்குட்பட்ட வரைமுறைக்குள் அடக்கி வைக்கப் பட்டிருந்தாலும், நம்முடைய மனத்தில் உதிக்கும் எண்ணங்கள் யாவும், நிர்ணயமில்லாத எல்லலையற்றதாகப் பரந்து விரிந்து செல்லும் அளவுக்கு வலிமையைப் பெற்றுள்ளது, (We are finite as Life and infinite as Thought) என்பது ஓர்

ஆச்சரியமடையத்தக்க ஒரு விஷயமாகும். Finite and Infinite ஆகிய இந்த இரண்டையும் ஒன்று சேர்த்து இணைப்பது என்பது "கண்ட சித்தி" என்கின்ற உயர் நிலையை யோகத்தின் உச்சியில் எட்டப்படும் போதுதான் அளிக்கப்படுகின்றது. அதற்கு சாதகன் மேற் கொள்ள வேண்டிய மூன்று முக்கிய வழி முறைகளைப் பற்றி அமரகவி சித்தேஸ்வரர் பின்வருமாறு விளக்கியுள்ளார்கள்.

1. **தேகத்தில் மாயும் வாயுவை உடலில் சேர்:**

   முதலில் ஜீவ சக்தியான பிராணனை ஒழுங்குபடுத்தி உடலில் அநாவசியமாக அது விரயமாகிச் செல்ல விடாமல் தடுத்து, அதன் முழுப் பங்கு ஆற்றலை (ஓய்வில்லாத எண்ணங்களின் சலனத்தினால் அலைபாயும் மனத்தினை) "சித்த விருத்தியுடன்" சேர்த்து வைக்க வேண்டும். (Conscript of Prana with Chitta Vrithi) இதன் வழிமுறை பதஞ்சலி யோகம் விளக்கும் வழி

2. **சும்மாயிரு பேச்சற:**

   நாவில் சுழன்று சுழன்று வெளியே கிளம்பும் பேச்சின் ஒலி அலைகளை தடுத்து உயிருடன் ஒன்று கலந்து, அதனைத் தாங்கிக் (சுமந்து) கொள்ள வேண்டும் அல்லது "வைகரி சித்தியின்" மூலம் பேச்சை உயிரில் இணைத்து வெற்றி கொள்ள வேண்டும். இரண்டாவது வழிமுறையை அருணகிரிநாதருக்கு முருகப் பெருமான் எடுத்துக் கூறியது.

3. **தேக உணர்வை தாண்டு:**

   ஜீவனுடைய மேனியின் தோல் பகுதியில், எண்ணிக்கையில் அடங்காத இலட்சக் கணக்கில் அமைந்துள்ள மயிர்க் கால்களின் துவாரங்களின் வாயிலாக வெளியேறிச் செல்லும் பிராண சக்தியை, இயற்கையின் வலிமையான பிடியிலிருந்து (பூதாகாசத்திலிருந்து) ரத்து செய்து அதனை "மூலாக்னியுடன்" இணைத்துப் பொரிக்க செய்ய வேண்டும். (Recinded with nature and hatched into Mulagini) இந்த மூன்று வழி முறைகளில் வெற்றி அடைந்தால் தான் "கண்ட சித்தி" என்கின்ற யோகத்தின் ஒப்பற்ற நிலையைப் பெற முடியும். முன்றாவது வழியை ஔவையார் தனது ஔவைக்குரலில் விளக்கியது.

எவ்விதம் எனில் "மயிர்க்கால் வழியெல்லாம் மாய்கின்ற வாயுவை தேகத்தில் பூண்" என்பதாகும்.

### சப்த தாது பிரிவினை

அமரகவி சித்தேஸ்வரர் "கண்ட சித்தியின்" மூலம் தன் உயிரின் உள்ளே ஆழ்ந்து சென்று அதனுடைய பரந்த எல்லை தாண்டிய விரிவான பேரறிவு நிலையை, பூரண சுய உணர்வுடன் தொட்ட போது, இது நாள் வரை தன்னுடைய தேகத்தில் சப்த தாதுக்களின் பிரகடனத்தினால் துன்பப்பட்டு வந்த அதோகதி நிலைமையிலிருந்து மீட்சி பெற்றுள்ளார். அதே சமயத்தில் "பூதாகாசம்" அதனுடைய கவனத்தை பூத உடலின் மேல் அதன் வலிமையான இரும்புப் பிடியைச் செலுத்தித் தன் வசம் முழுவதும் கட்டுப்படுத்தி வைத்திருந்தாலும், அதனைச் சிறிதும் சேதப்படுத்தாமல் தானாகவே பூத உடலின் ஈர்ப்புச் சக்தி தன் வலிமையை சுலபமாக விட்டுக் கொடுத்து, பத்திரமாக விலகிச் செல்ல அனுமதியளித்து, "சப்த தாது பிரிவினை" ரத்து செய்யும் அளவிற்கு உதவி புரிகின்றது. உடலில் சப்த தாதுக்களின் பிரிவே "கொடுமை" எனப்படும். சப்த தாதுக்களின் பிரிவினையினால் தான் சூட்சும சரீரத்திற்கு ஸ்தூல தேகத்தின் சம்பந்தம் (தொடர்பு) ஒரு முடிவில்லாமல் நீடித்துக் கொண்டே செல்கின்றது. எனவே சப்த தாதுக்களின் பிரிவினையை யோக சாதனையின் வலிமையினால் துண்டித்துக் கொள்ள வேண்டியது மிகவும் முக்கியமான விஷயமாகும்.

### அதி தீவிர ஆத்ம விசாரனை

இவ்வாறு இயற்கையுடன் ஸ்தூல உடல் நேருக்கு நேர் மோதிக் கொள்வதினால் உண்டாகும் மாற்றமானது, எல்லையற்ற பரந்த ஆன்மிக வாழ்க்கையின் நிலைக்கு அல்லது பரமாத்மாவின் பேரறிவு நிலைக்கு முன்னேறிச் செல்ல உதவி புரிகின்றது. எங்கும் நிறைந்த பரம் பொருளே இயல்பாகவே அதன் சுபாவத்தில் இயற்கையின் பின்னால் சூட்சுமமாக மறைந்து இயங்குவது போல் (God is inherent with Nature and so too with Life) அதே மாதிரியாக உயிரிலும் அதன் முழு சக்தியையும், அதன் ஆழத்திலேயே புதைத்து வைத்துக் கொண்டு, அதனுள்ளேயே மறைந்து கிடக்கின்றது. எப்பொழுது நம்முடைய மனத்தில் உதிக்கும் (புலன்களின் சலனமில்லாத) எண்ணங்களுக்குப் பேரறிவின் உள்ளுணர்வு ஊட்டப்பட்டு, (Inspired

Thought) ஊக்கப்படுத்தப் படுகின்றதோ அப்பொழுது அதுவே நம்மை தெய்வீக உணர்வுக்குரிய பரபக்தி மார்க்கத்திற்கு அழைத்துச் செல்கின்றது. ஆகவே "கண்ட சித்தி" என்பது எண்ணத்தை (புலன்களின் வயப்படாத மனம்) ஊக்கப்படுத்தி இயற்கை (பிரக்ருதி) பிரம்ம சிருஷ்டியில் அதன் ஒருபுறம் அதனுடைய எல்லைக்குட்பட்ட வரன் முறைகளுக்குள் (Finite Laws of Nature) எப்படி எல்லாம் அதன் அதிசயமான லீலா வினோதங்களை ஆச்சரியமும், பிரமிப்பும் அடையத்தக்க வகையில் நடத்திக் கொண்டிருக்கும் 'அகண்டாகார விருத்தியின்' விஷயங்களை எல்லாம் பக்குவமாகப் புரிந்து கொள்கின்ற 'மனோ சக்தியை' அளித்து, அந்நிலையிலே அமரகவி சித்தேஸ்வரர் நிலைத்து நிற்கக்கூடிய பேராற்றலை அளித்துள்ளது. அவர் தன்னுடைய நுன்னறிவின் ஆற்றலை மேன்மேலும், அதிதீவிர ஆத்ம விசாரணையில், நன்கு பரவலாகிக் கொண்டு அந்த ஒப்பற்ற நிலைக்குள் ஊடுருவி சென்று மகத்தான சாதனை புரிந்துள்ளார். அமரகவி சித்தேஸ்வரர் அடைந்த சித்தியின் பெயர் "ஆத்ம லிங்கம்" எனப்படும்.

அருள் ஜோதி வட்டம்

இயற்கை அதன் மறுபுறம் சர்வ பிரபஞ்சமும் பரவி கிடக்கும், அதன் எல்லை தாண்டிய விரிவில், சகல விதமான உயிரினங்களின் வரிசையில், நீக்கமற நிறைந்து கிடக்கும் அதன் அற்புதக் காட்சியை இன்னமும் அமரகவி சித்தேஸ்வரரர் தன் வருங்கால யோக சாதனையில், கிரமப்படி மேலேறி செல்லும் பரிணாம வளர்ச்சிப் பெற்று காண வேண்டியுள்ளது. அது ஒரு வேளை பல யுகங்கள், பல மன்வந்திரங்கள் கூட ஆகலாம். அந்த தெய்வீக அனுபவத்தை அமரகவி சித்தேஸ்வரர் தன் சுய உணர்வுடன் அனுபவிப்பதற்காகவே அவருடைய ஆயுளை இறைவன் "ஒரு கல்ப கோடி காலம்" வரை வாழும் திவ்விய வரத்தை அருளியுள்ளார்கள்.

அதன் பூர்வாங்கத் தொடக்கக் கட்டமாக அவர் பூலோக ஜீவித வாழ்க்கையை வாழ்ந்து கொண்டுள்ள பொழுதே, உயிரின் வெளி மூச்சின் ஓட்டம் முற்றிலும் தடைப்பட்டு பூரண கிரகணம் ஆனபின்பு (முழுவதும் மறைந்த பின்னே – *Total Eclipse*) அதன் மூலம் புருவ நடு மைய ஆக்ஞா சக்கரத்தின் உள் ஆக்கிரமிப்பு மூலம், (*Inner Recess*) அதன் ஆழத்தின் அடித்தளத்திலே நிலையாக, உறுதியாகக் கிடத்தி வைத்தார். அங்கு தான் சித்தத்தின் தெய்வீகப் பிரகாச அருள் ஜோதி வட்டம் (*The Eternal Flames of Chitta*)

அல்லது "அங்குஷ்ட பிரமாண தீபத்தின்" பேரருள் ஆக்கம் உயிரில் புதுப்பிக்கப்படுகின்றது.

## மனிதனும் தெய்வமாகலாம்

பிரக்ருதித் தத்துவத்தின் (இயற்கையின்) மீது மேலேறி அதன் உச்சத்தில் சென்று பார்க்கும் போது, எங்கு எல்லைக்குட்பட்டதும் மற்றும் எல்லையில்லாததும் ஆகிய இவ்விரண்டும் (சிருஷ்டியின் அதி சூட்சும பிரம்ம ரகசியம்) உயிரில் தனித் தனியாகப் பிரித்து அடையாளம் காணப்படுகின்றதோ அதுவே உயிரின் உன்னதச் சிகரமாகும். அதனுடைய ஆற்றலினால், மனிதன் அங்கு தானே சுயமாகவே தெய்வ வடிவமாகவே மாறி சர்வ பிரபஞ்சத்திலும் அங்கு, இங்கு என்றில்லாமல் எங்கும் நீக்கமற வியாபித்திருக்கும் இறைவனை போலவே அவன் சகல தெய்வீக சம்பத்துகளும், அஷ்ட ஐஸ்வரியங்களும் அடங்கிய சாஸ்வதத் தன்மையைத் தனக்குள் ஸ்தாபிதம் செய்து கொள்கின்றான்.

# இந்து மதத்தில் மோட்சம்

## வாழ்க்கையின் அடிப்படை விஷயம்

எந்த ஒரு போதனையையோ அல்லது மதக் கொள்கையையோ தீவிரமாகப் பின்பற்றி அதன் வழியாக மனித குலத்துக்குச் சேவை செய்து அவனுடைய அன்றாட இடர்கள், துயரங்கள் பிரச்சனைகளுக்கு எல்லாம் தீர்வு காண்பது என்பது முடியாத காரியமாகும். ஏன் எனில் இப்படிப்பட்ட சித்தாந்தங்களை எல்லாம் உருவாக்கிய மாமேதைகளான பேரறிஞர்கள் தங்களின் புத்தி சாமர்த்தியத்தினால் (Intellectual Treat) காலத்துக்கு ஏற்ற கருத்துக்களை உண்டாக்கி, மக்களிடையே பரவலாக பரப்பி அதனைக் கடைப்பிடிக்கச் சொல்வதன் மூலம் அவர்களால் ஒருபோதும் மனித சமுதாயம் அனைத்தையும் சீர்படுத்தி மேன்மை படுத்த முடியாது.

வேறு சில சான்றோர்கள் ஒன்றுக்கும் பயனற்ற, சமுதாயத்திற்கு உதவாத, உப்பு சப்பில்லாத வேதாந்தக் கருத்துக்களை எல்லாம் மக்களிடம் பிரசங்கமாகவும், புத்தகங்களாகவும் வெளியிட்டு தத்துவங்களைத் தீர்மானமாக உறுதியாக எடுத்துக் கூறாமல், ஒரு வேளை அப்படியிருக்கலாம் அல்லது இப்படியிருக்கலாம் எனச் சந்தேகப் புத்தியுடன் நிச்சயமில்லாத, தெளிவில்லாத கருத்துக்களை வலியுறுத்திக் கூறி, நம்மை மேலும் மேலும் குழப்பத்தில் ஆழ்த்தி விடுவார்கள். (In idle talks on mere assumptions and presumptions.)

சுருக்கமாகக் கூற வேண்டுமானால், மண்ணுலகில் ஜீவித உடலில் இயங்கும் "சூட்சும உயிர்" எப்படி எல்லாம் சீரான முறையில் அதனுள் நடை பெறுகின்றது என்கின்ற இந்த முக்கியமான விஷயத்தைப் பற்றி ஆதாரத்துடன் நிரூபித்து உறுதியாகக் கூற வேண்டும். இது தான் ஒவ்வொரு மனிதனும் மிகவும் அவசியம் அறிந்து கொள்ள வேண்டிய அடிப்படையான விஷயமாகும். (What is life on Earth?)

## தேவையற்ற வேதாந்த சர்ச்சைகள்

மனித வாழ்வுக்குரிய அதன் பண்புகள் இவற்றைத் தான் மிகவும் வலியுறுத்தி கூற வேண்டுமேயன்றி (*The Human Values should be stressed*

*with Life*) அதைத் தவிர்த்து, வெறும் கொள்கை ரீதியான அனாவசிய தர்க்கத்தில் ஈடுபட்டு, த்வைதம் பெரியதா அல்லது அத்வைதம் சிறந்ததா? சைவமா, வைணவமா? சிவன் பெரியவரா, விஷ்ணு பெரியவரா? இந்த மதம் உயர்ந்ததா அல்லது அந்த மதம் தாழ்ந்ததா? இப்படி விவஸ்தையில்லாமல் வீணாகத் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டு, தாங்கள் சார்ந்திருக்கும் மதக் கொள்கைகளுக்கு ஆதரவு தேடிக் கொண்டு செல்வது என்பது அவர்களுடைய மனித ஜீவிதத்தின் பொன்னான நேரத்தை அவர்களே பாழ்படுத்திக் கொள்வதாகும். இவை யாவும் வேதாந்தத் தத்துவ விசாரத்தின் மூலம் சர்வ கலா சாலையில் பயிலும் மாணவன், எந்தப் பக்கத்தில் நியாயம் உள்ளது என தீவிர விசாரனையில் தங்களுக்குள் மேற் கொள்ள வேண்டிய அணுகு முறையின் பயிற்சி முறையே தவிர, இதில் மனிதனின் உயிர் வாழ்க்கைக் குரிய எந்த சிந்தனையும், ஒரு மருந்தளவுக்குக் கூட கிடையாது என்பதை நாம் உணர்ந்து கொள்ள வேண்டும்.

கடந்த சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் வேத காலத்தில் சிறப்பாக விளங்கிய ஆன்மிகப் பண்பாடுகள் யாவும் தொலைந்து போய், பிற்காலத்தில் இப்படிப்பட்ட வீண் சர்ச்சைகள், அனாவசிய விவாதங்கள், மனக்கசப்புகள், ஒருவரை ஒருவர் வெறுத்துக் கொள்ளுதல், பிறர் மீது மனிதத் தன்மையே இல்லாத அளவுக்கு துவேஷம், சகிப்புத் தன்மையின்மை, போன்ற நாச காரியங்கள் நம்மிடையே அசுர கதியில் வளர்ந்து போய், இந்த மண்ணுலகில் மனிதன் எந்த குறிக்கோள் அல்லது லட்சியத்தின் நோக்கத்துக்காக உயிர் வாழ்கின்றான் என்ற கேள்விக்கு விடை தெரியாமல் யந்திர கதியில் இயங்கி கொண்டுள்ளனர்.

**பிண்ட லிங்கம்**

மனிதன் தான் 'தனக்குள்' என்னவாக உள்ளான்? என்பதை முதலில் புரிந்து கொள்ள முயற்சி செய்யவேண்டுமே தவிர, தொடக்கத்திலேயே தன் சிந்தனைக்கு மீறிய மிகப் பெரிய ஆன்மிக விஷயங்களாக உள்ள கடவுளைப் பற்றிய "பிரபஞ்ச ஆராய்ச்சியில்" இறங்கக் கூடாது. (We need to know ourselves rather than God) இறைவனை உணர்ந்து கொள்வது என்பது ஒவ்வொரு உயிர் தோறும் ஆடும் விந்தையை, "எல்லையில்லாமல் எங்கும், எதிலும், நீக்கமற நிறைந்திருக்கும் அகண்டாகாரத்தை அறிந்து கொள்வது என்பதற்கு ஒப்பாகும்.

இறைவன் சர்வப் பிரபஞ்சம் முழுவதும் வியாபகமாய் உள்ள பிரம்மாண்டமான விஷயத்தைை அவ்வளவு சுலபத்தில் அனைவராலும் உணர்ந்து கொள்ள முடியாத ஒரு சிக்கலான விஷயமாகும். ஆனால் அதே சமயம் ஒரு குறுகிய எல்லையின் வரைமுறைக்குள் (Finite scale of existence) கால, நேரம் இவற்றிக்கு உட்பட்ட தன்னுடைய ஸ்தூல தேகத்தில் புதைந்து கிடக்கும் தெய்வீக சக்தியின் ரகசியங்களை, சர்வ பிரபஞ்சத்தின் அதன் எல்லை தாண்டிய மகத்தான அளவுக்கு ஒப்பிட்டு பார்க்கும் போது, மானிடனின் தேகத்தில் அடங்கியிருக்கும் அதன் ஆற்றல்களை எல்லாம் ஓரளவு சுலபமாக அறிந்து கொள்ளலாம் என்கின்ற உண்மை நமக்குப் புலனாகின்றது. வேத வாக்கின்படி "அண்டத்தில் உள்ள அனைத்து பிரம்மாண்டமான விஷயங்கள் யாவும் சிறிய அளவில் பிண்டத்தில் (மானிட தேகத்தில்) அடங்கியுள்ளது" என்கின்றது. எனவே, மானிடனின் தேகமே "பிண்ட லிங்கம்" என அழைக்கப்படுகின்றது. இதையே திருமூலரும் அண்டத்திலுள்ளது பிண்டத்திலுமுள்ளது என்கின்றார்.

## இயற்கையைச் சார்ந்திருக்கும் மனிதன்

இயற்கையில் பல கோடிக்கணக்கான சிருஷ்டியின் வினோதங்களுக்கிடையே தோன்றி வாழ்ந்து கொண்டிருக்கும் மனிதன், 'தான்' யார்? எப்படி எல்லாம் அவன் இயற்கையில் சார்ந்து, அதனுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளான் என்று அறிய வேண்டும். மனிதன் தன்னுடைய அன்றாட வாழ்வில், எப்படி எல்லாம் இயற்கையின் உதவியுடன் சார்ந்து இருக்கின்றோம் என்கின்ற படிப்பினையை முதலில் புரிந்து கொள்ள முயல வேண்டும். *(What are you in the midst of cosmos?)*

நாம் எல்லோரும் பூ மண்டலத்தை ஒரு வலை போல் பிண்ணிக் கொண்டிருக்கும் "வெளிக் காற்றின்" உதவியுடன் ஒவ்வொரு வினாடி நேரமும், மூச்சின் தயவுடன் உயிர் வாழ்ந்து கொண்டிருக்க வேண்டிய கட்டாயத்தில் உள்ளோம். (We are, every moment, at the mercy of Breathing) மேலும் "சுவாசம்" எப்படி எல்லாம் உயிரில் மிகவும் நுணுக்கமான முறையில் இயங்கி, ஸ்தூல உடலைச் செயல்பட வைக்கும் என்ற தத்துவமுறை பற்றி இன்னமும் நாம் சரியாக புரிந்து கொள்ளவில்லை. அதனைப் பற்றிய சிந்தனையும் நமக்கு சிறிதும் கிடையாது. இதைப் பற்றி எப்பொழுது நாம் தீவீரமாக சிந்திக்க

முற்படுகின்றோமோ அப்பொழுது தான் நாம் நம்முள் உறைந்து கிடக்கும் உயிரின் மேல் தன் கவனத்தை செலுத்தி, அதனைப் பற்றி நன்கு உணரத் தொடங்குவோம்.

### ஜட தேக புத்தி

இப்பூவுலகில் ஜீவனின் வாழ்க்கைக்கு ஆதாரமாய்த் திகழ்வது "உயிர்." அந்த உயிரில் அடங்கியிருப்பது பேராற்றல் மிக்க "ஆத்மாவின் சக்தி." ஆனால் ஆத்மாவோ அந்த உண்மையைச் சிறிதும் உணர்ந்து கொள்ளாமல், எவ்வளவு தான் எடுத்துச் சொன்னாலும், ஜீவித ரகசியத்தைப் புரிந்து கொள்ள எந்த முயற்சியும் செய்யாமல், "ஆணவம்" என்கின்ற "அறியாமை மலத்தில்," ஜட தேக புத்தியில் மூழ்கி, ஜீவ வாழ்க்கையில் செய்வதறியாது சிக்குண்டு கிடக்கின்றது. "எல்லாம் தனக்குத் தெரியும்," என்ற போலி இறுமாப்பில் கட்டுண்டு, சிக்கலான வாழ்க்கையின் போராட்டங்களுக்கு இடையே எதிர் நீச்சல் போட்டுக் கொண்டுள்ளது.

### பார்வையின் குறுக்கிடு

மனிதனின் கண்களில் குடிகொண்டிருக்கும் "அகங்காரம்" அவன் வெளிப் பார்வையிலிருந்து தோன்றும் "ரூபத்தின்" மூலம், ஜட வஸ்துக்களின் மேல் பாய்ந்து செல்கின்றது. "புத்தி" அதன் மேல் "ஆசை" கொள்ளச் செய்து அவன் மனத்தை தடுமாற்றமடையச் செய்து, அதற்கு மேல் அவனுடைய அறிவை செலுத்த விடாமல், ஏமாற்றி விடுகின்றது. இப்படித்தான் மனிதன் நிஜத்தை தனக்குள் உணர்ந்து கொள்ள முடியாமலும், ஒருவித மயக்கத்தினிடையே "பார்வையின்" வெளியுலக ரூபத்தைக் கண்டு சஞ்சலமடைந்து, "புத்திக் கூர்மையின்" தன்மையை சரிவர பயன் படுத்திக் கொள்ளாமலே, தனக்குள்ளேயே தொலைந்து போய் உள்ளான். *(Intellect betrays you there and none to recognise beyond)*

### அந்தர்முக திருஷ்டி

புலன்களின் சலனத்தினால் அலைபாயும் மனத்தின் குறிக்கோளே, கண்களின் மூலம் வெளியுலக புறக் காட்சியைக் கண்டு ரசித்துக் கொண்டு, அதிலே லயித்து கிடப்பதேயாகும். மனிதன் எப்பொழுது தன்னை சுயமாகக் கட்டுப்படுத்திக் கொண்டு இயற்கையின் வெளியுலகக் காட்சியிலிருந்து

தன்னைத் தானே சுய தணிக்கை செய்து கொள்ள முயலுகின்றானோ, அது தான் யோகத்தின் மிக முக்கியமான திருப்பு முனையாகும். மனிதனின் பார்வைக்கு "உள்நோக்கிப் பாயும்" ஒரு மகத்தான சக்தியும் அடங்கியுள்ளது. யோக சாதனையின் முயற்சியில் பெறப்படும் அதுவே சுய நினைவுடன் கூடிய "அந்தர்முக திருஷ்டி" என அழைக்கப்படுகின்றது. இதில் விசித்திரம் என்னவென்றால் அத்தகைய அனுபவத்தையே ஒவ்வொரு மனிதனும் தன் அன்றாட வாழ்க்கையில், அனுதினமும் அவனை அறியாமலே அந்நிலைக்கு பிரக்ருதி இழுத்துச் செல்கின்றது. அதுவே மன கிளர்ச்சி மிக்க பிரதிபலிப்புக்கள் யாவும் உறக்கத்தில் அவனுடைய சுய நினைவு இல்லாமலே "கனவு நிலையில்" அனுபவிக்கும் பொய்யான தோற்றத்தையே நிஜம் போல சித்தரித்துக் காட்டுகின்றது.

| கனவு நிலையில் மனிதனின் மாறுப்பட்ட நிலை | |
|---|---|
| அந்தர்முக திருஷ்டி | "சுய நினைவு" மூலம் யோக சாதனையில் பெறும் அனுபவம். |
| கனவு நிலை | சுய நினைவில்லாமலே உறக்கத்தில் தோன்றும் மனக்கிளர்ச்சியின் பிரதிபலிப்பு–தாமச நிலை. |

அந்தர்முக திருஷ்டியில் மேன் மேலும் தனக்குள்ளே ஆழ்ந்து, தன் உயிரில் மூழ்கிச் செல்லும் போது தான், தன் சொரூபமாகிய "ஆத்மாவை" உணர்ந்து கொள்ள முடியும். "யோகம்" என்பது சாதகன் பிரக்ருதியுடன் நேரிடையாகத் தொடர்பு கொண்டு தன் ஆத்ம சக்தியின் துணையுடன் உறுதியாக அதில் நிலைத்து நிற்கும் ஒப்பற்ற நிலையை அளிக்கக் கூடியதாகும். ஆத்ம சக்தியே சுயம் பிரகாசமாகும். அழிவற்றதும், என்றும் நித்தியமாகவும், சாஸ்வதமாகவும் உள்ள அந்த ஒன்றே சிருஷ்டியில் காணப்படும் அனைத்து உயிர்களிலும் ஊடுருவி சர்வ வியாபகமாயுள்ளது.

உயிரைப் பற்றிய புதிரான மர்மம்

அமரகவி சித்தேஸ்வரர் ஒளிவு மறைவின்றி, பகிரங்கமாகவே தன்னை வெளிப்படுத்திய "உயிரைப்" பற்றிய புதிரான மர்மங்கள் அனைத்தையும் உறுதியாகவும் விளக்கமாகவும் எடுத்துக் கூறுகின்றார். அமரகவி சித்தேஸ்வரர் தன் வாழ் நாளில் தனக்கென்று ஒரு குருவை நாடிச் சென்றதில்லை. அவர் பயின்ற யோகக் கலைகள் யாவும் சுயமாக தானே பரிசோதனை செய்து, சுய

அனுபவ முறையில் சித்தி பெற்ற வித்தையாகும். அமரகவியின் முயற்சி அனைத்தும் "மன ஒய்வு" கொள்ளச் செய்து "திட சித்தம்" மூலம் ஆத்மனில் நிலைத்து நின்று, தன் "ஆத்மனின் சொரூபமே" அவருக்கு பாதுகாப்பளித்து காவல் காக்கும் தேவதையாக பக்கத் துணை என நின்று உதவிகள் பல புரிந்துள்ளது. (I have no Guru and all my Repose is with Self, as the guarding Angel)

அமரகவியின் நம்பிக்கை அனைத்தும் அடக்கமான, எளிமையான, பக்தி மார்க்கத்தைப் பின் பற்றியும், தன் அன்புமிக்க தெய்வத்திடம் பூரணமான சரணாகதியும் ஆகும். அவர் தன் வாழ்நாள் முழுவதும் தெய்வீக நினைவிலேயே சதா சர்வ காலமும் நிலைத்து நின்றார். அமரகவி தன் குடும்ப வாழ்க்கையில் பல்வேறு பிரச்சனைகள், சிக்கல்கள் நிறைந்த சூழ் நிலைகளில் தத்தளித்துக் கொண்டிருந்தாலும், மற்ற சாதாரண மக்களைப் போலவே அதன் சவால்களை எல்லாம் துணிச்சலுடன் எதிர் கொள்ள வேண்டியிருந்தது. ஒரு சில சமயம் அவரை அறியாமலே பிழைகள் புரிந்திருந்தாலும், "பரபக்தி மார்க்கத்தில்" தெய்வத்தின் மீதும் அமரகவி அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருந்த காரணத்தினாலும், விடா முயற்சியினாலும், தொடர்ந்து யோக சாதனையில் தடையில்லாமல், முன்னேறி செல்ல முடிந்தது.

### சித்து விளையாட்டுக்கள்

அதி தீவிர மந்திர, தந்திர, சாஸ்த்திரங்களின் சிரத்தையான பூஜா பலன்களினால் பல விசேஷமான சித்திகள் கைவரப் பெற்றார். ஒருவரின் முகத்தைப் பார்த்த மாத்திரத்திலே பின்னால் நடக்கப் போகும் நிகழ்ச்சிகளை கூறுவது, குறி சொல்லுதல், ஜாதக ரீதியாக நல்லது, கெட்டது ஆகிய பலா பலன்களை துல்லியமாக எடுத்துக் கூறுவது என இப்படிப்பட்ட பலவிதமான சித்து விளையாட்டுகள் அவரை அறியாமலே தூண்டிக் கொண்டிருந்தது. மேலும் எந்தவித பொருளாதார ரீதியான பிரதிபலன் பாராமல் பலன் கூறியதால், அவருடைய நண்பர்களின் வட்டாரத்தில் ஒரு நல்ல மதிப்பைப் பெற்றார். இதனால் அமரகவியின் உதவியை நாடி பல பேர்கள் அவரைத் தேடி வந்து, பெரும் பயன் அடைந்தார்கள். ஆன்மிக சாதனையில் இவ்வாறு முன்னேறிச் செல்லும் போது இம்மாதிரியான சித்து விளையாட்டுக்கள் அவர்களையும் அறியாமல் தூண்டிக் கொண்டேயிருக்கும். இதனைச் சிறிதும்

பொருட்படுத்தாமல் முன்னேறிச் செல்ல வேண்டும் என்பது தான் எச்சரிக்கையாகும். ஒருவேளை இதற்கு அடிமையாகி விட்டால், இதன் மூலம் ஆன்மிக சக்தியின் பலத்தை இழந்து விடுவார்கள். அத்தோடு கீழே இறங்கியவன் இறங்கியவன் தான். மீண்டும் மறுமலர்ச்சி பெறுவது என்பது துர்லபம்.

அமரகவியினுடைய ஆன்மிக பயணத்தின் தொடக்கக் காலத்தில், இத்தகைய சித்து விளையாட்டுக்களின் விபரித போக்கினால் அவர் அதற்கு தகுந்த விலையையும் அளிக்க வேண்டியிருந்து. கருணா மூர்த்தியான "*மூல கணபதி*" அந்த இக்கட்டான சூழ் நிலையிலிருந்து அமரகவியை சித்து விளையாட்டுக்களிலிருந்து தடுத்து நிறுத்தி, ஆன்மிகத்தின் சரியான பாதையில் அழைத்துச் சென்றதால், "அற்புதங்களை நிகழ்த்தும்" மாயையிலிருந்து அவரால் சுலபமாக தப்பி மேலே செல்ல முடிந்தது.

மானிட சரித்திரத்தின் புதிய அத்தியாயம்

அமரகவி தன்னுடைய சிறு வயது பிராயத்திலும் மற்ற குழந்தைகளைப் போல் லௌகீக வாழ்க்கையில் ஈடுபாடு கொள்ளாமல், வழக்கமான இறை வழிபாட்டிலும், ஆராதனையிலும், தன் கவனத்தைச் செலுத்தி, தெய்வீக சிந்தையில் அன்றாடம் நாட்டம் கொண்டிருந்தார். ஆனால் அமரகவி இன்று உள்ள யோகத்தின் உயர் நிலையின் பக்குவத்தைப் பெற்றது போல் அல்லாமல், தன்னுடைய வாலிப வயதில் "தன்னுடைய உள்ளுணர்வின்" அழைப்பினை எந்த நேரமும் எதிர்நோக்கியே காத்திருந்து, அதற்கு ஆயத்தமான நிலையில், தயாராக இருந்து கொண்டிருந்தார். (I am prompted over its Inner Call but not to its depth today)

அதன் காரணமாகவே அமரகவிக்கு தேவ வருணனையாக அனுதினமும் "யோக நித்திரையில்" தோன்றிக் கொண்டே இருந்த தேவ லோகத்தின் அனுபவங்கள், பின்பு வந்த சுலபமான நிகழ்ச்சியைப் போல் அவ்வளவு எளிதாக இல்லாமல், தொடக்கக் காலத்தில் "தேவ வாக்கானது" கண் இமைக்கும் நேரத்தில் ஒரு மின்னல் தாக்குவது போல் தன் உடலில் தோன்றி, ஒரு தெய்வீகப் பேரலையின் அதிர்ச்சியை உருவாக்கிச் சென்று கொண்டிருந்தது. அந்தத் "தெய்வீக வாக்கு" என்ன கூறியது என்பதை அமரகவி உணரும் முன்னரே, நொடி நேரத்தில் தன்னுள் தோன்றி மறைந்து

ஒருவித கண்ணாமூச்சி ஆட்டம் ஆடிக் கொண்டிருந்தது. (This touch and seek of Heaven I could visulise today but in its hiding spirits then) பிரம்ம சிருஷ்டியின் ரகசியங்களை உணர்வு பூர்வமாக அமரகவி சித்தேஸ்வரர் அறிந்து கொண்டாலும், எழுத்து வடிவில் அதனை எழுத முடியாமல் மிகுந்த சிரமத்திற்கு உள்ளானார். இறைவனின் திருவாக்கான "*பிரம்ம உபதேசம்*" மின்னலின் வேகத்தைப் போல் பாய்ந்து செல்லும் ஒளியின் வேகத்தில் அவ்வளவு விரைவாக இருந்த காரணத்தினால், எளிதில் அதனைப் பிடிக்க முடியவில்லை. ஆம். உண்மையிலே அது ஒரு சிரமமான கட்டம் தான். அந்தத் தெய்வீகப் பேராற்றலின் ஆச்சரியமான அனுபவமானது, இதுவரையில் மானிட சரித்திரத்திலேயே எவரும் உணர்ந்திராத அல்லது கேள்வியே பட்டிருக்க முடியாத ஒரு தெய்வீக நிகழ்ச்சியாகும்.

மேலும், அமரகவி சித்தேஸ்வரர் "நிஜானந்த போதம்" என்கின்ற திவ்விய கிரந்தத்தை இறைவனின் அநுக்கிரக சித்தத்தில், "பிரம்ம நிஷ்டையின்" உச்ச கட்டத்தில் நின்று கொண்டு எழுதத் தொடங்கிய போது, வேத உபநிஷத் காலத்தில் பண்டைய கால மகரிஷிகளுக்கு எப்படி நேரிடையாகவே "தெய்வீகக் குரலின் திருவாக்காக" (பிரம்ம உபதேசமாக) எடுத்துக் கூறப்பட்டதோ, அதே போல் இந்தக் கலியுகத்தில் தத்துவ விமர்சனங்கள் யாவும் பிரம்ம உபதேசம் மூலம் நேரிடையாக இவருக்கு எடுத்துச் சொல்லப்பட்டது.

## தெய்வீக போதனையில் தேர்ச்சி

அத்துடன் மட்டுமல்லாமல் ஒவ்வொரு நாள் இரவிலும் அமரகவியினுடைய யோக நித்திரையின் போது "தெய்வீக சொப்பன தரிசனங்கள்" இடைவிடாமல் தோன்றி, இயற்கையின் புதிரான பல அதிசயங்களின் உண்மைகளை எல்லாம் வெளிப்படுத்தியது. (I was led over Spiritual Dream almost every day) அவை யாவும் "ஆத்ம போதனைகளாகப்" பின்வரும் ஆன்மிக அனுபவங்கள் அனைத்தையும் முன்னதாவே சூசகமான முறையில் அமரகவிக்கு எடுத்துச் சொல்லப்பட்டது. சாதாரண மானிடர்களுக்குத் தோன்றும் கனவுகள்போல் அல்லாமல், அமரகவிக்கு அருட் சக்தியினால் அனுதினமும் "யோக நித்திரையில்" தோன்றிய "ஆன்மிகக்

கனவுகள்'' யாவும் உணர்த்தியது யாதெனில், சித்தத்தின் தெய்வீக அலைகள், புலன்களின் வசப்படாத மனத்தின் மேல் சென்று லயமாகி "ஆத்மனில்" நன்றாகத் தேர்ச்சி பெற, பயிற்சியை அளித்து ஊக்கப்படுத்தியது. அந்த உன்னதமான வழியின் மூலம்தான் "யோகிக்கு தெய்வீக போதனைகள்" யாவும் புனிதமாக்கப்பட்ட அகங்காரத்தில் (மனிதனின் ஆணவ சக்தியினுடைய போக்கின் மேல்) தேர்ச்சி பெற்று பக்குவப்படும் வரையில், சிறப்பான முறையில் நன்கு கற்று கொடுக்கப்படுகின்றது. (The Sage is tutored there until he is matured with the Ego)

அந்த வகையில் தான் பிற்காலத்தில் அமரகவியிடம் "ஆன்மிக உணர்வு" புதிய உத்வேகம் பெற்று விடிவெள்ளியாய் பிரகாசித்து, அதன் மூலம் அவர் பெற்ற ஆன்மிக சுய அனுபவங்களின் பாடங்களை எல்லாம் மற்றவர்களுடன் சரிசமமாக பகிர்ந்து கொள்ள ஆயத்தமான நிலையில் ஆயிற்று. தெய்வீக சக்தி படைத்த "ஆத்மனின் உணர்வு" அமரகவியுடன் தொடர்ந்து அடிக்கடி விடாமல் பூலோகத்தில் தன் முழு நம்பிக்கைக்கு பாத்திரமான உற்ற தோழனுடன், அன்பு மிக்க நட்புணர்வுடன் நெருங்கிப் பழகுவது போல், அமரகவியிடம் இணைந்து பழகிப் பேரன்புடன் செயல்பட்டது. (The Innate moves with me quite often as trusted comrade on eath) அந்த "ஆத்ம சக்தி" ஆற்றலின் வலிமையில் தான் அமரகவி, இதுவரை யாருமே எடுத்துச் சொல்ல முடியாத "உயிரைப் பற்றிய ரகசியங்களை" வெளிப்படையாக எல்லாம் பகிரங்கமாக அறிந்து கொள்ளத் தக்க வகையில், சிறப்பாக எடுத்துக் கூற முடிந்தது.

விவேகத்தின் அறிவுச் சுடர்

இக்கருத்தை நாம் நன்கு புரிந்து கொண்டு, அதே சமயம் லௌகீக வாழ்க்கையின் நடைமுறையிலிருந்து மெள்ள, மெள்ள விலகிச் செல்ல முயற்சிகளை மேற் கொள்ள வேண்டும். மானிடனின் "பேச்சின் ஆற்றலில்" தான் ஆன்மிகத்தின் இத்துணை திறமையும் "ஒளிந்து" கொண்டுள்ளது என்பது மிகவும் வியப்பான ஒரு விஷயமாகும். மானிடனின் பேச்சின் மர்மத்தைச் சுற்றியே "விவேகத்தின் அறிவுச் சுடர் படர்ந்துள்ளது." (All of it rest with Speech and around its wisdom) மனித வாழ்வின் இவ்வளவு முக்கியத்துவம்

வாய்ந்த இந்த விஷயத்தைப் பற்றி நாம் தெளிவாக அறிந்து கொள்ள முடியாமல், இயற்கை திரைப் போட்டு மூடி வைத்துள்ளது. ஜீவ கதியின் இந்த நிலைமையே அவனுடைய துன்பம் தேய்ந்த விதியின் வீபரீதப் போக்காகும். மானிடனின் உயிரைப் பற்றிய மர்மம் நிறைந்த புதிரான இந்தக் கொள்கையில் அறிமுகமாவது என்பது கூட, அவனுக்கு முற்றிலும் ஒரு புதுமையான அனுபவமாகும். (You are a stranger to that theorem of Life) புத்தகங்கள் மூலமாகப் படித்தோ அல்லது பிறர் சொல்லக் கேட்டு, இப்படிப்பட்ட விஷயங்களை விளங்கிக் கொள்வது என்பது முடியாத காரியமாகும். ஏன் எனில் அது முற்றிலும் பிறருடைய விவேகத்திலிருந்து பெறப்பட்ட செயற்கை அறிவே அன்றி அது அவனுடைய சொந்த அறிவின் மூலம் பெறப்பட்ட ஞானமல்ல. (It is somebody's wisdom outwith you own)

மனிதன் தானே சுயமாக "தன்னுடைய உள்ளுணர்வின்" மூலம் உணர்ந்து கொள்வதுதான் எப்பொழுதுமே சிறந்ததாகக் கருதப்படும். அதுவே ஒரு சில சமயத்தில் இடறி கீழே விழும் பாதையாக இருந்தாலும் கூட பரவாயில்லை. (You should dress up yourself even in its slippery path there) எனவே ஆன்மிகப் பயணத்தில் அடியெடுத்து முன்னேறிச் செல்ல விரும்பும் பக்த கோடிகள் முதலில் தன்னை நன்கு தயார்ப் படுத்திக் கொண்டு, அமரகவி சித்தேஸ்வரரின் "தெய்வீக வாக்கினைத்" துணைக்கு அழைத்துக் கொள்ள வேண்டும். இன்றைய மோசமான யுகத்தின் நெருக்கடியான கட்டத்தில் நாமனைவரும் சிக்கிக் கொண்டிருந்தாலும், எல்லையில்லாத சர்வவியாபியான "ஆத்மனின் சக்தியில்" நாமனைவரும் சமமானவர்கள் என்பதை நினைவில் கொள்ள வேண்டும். அமரகவி சித்தேஸ்வரரின் ஆத்மா மானிடனுக்கு ஒரு நல்ல தூண்டு கோலாக அமைந்து, உதவிகள் பல புரியும் என்பதை திடமாக நம்பி, யோக சாதனையில் துணிந்து இறங்கலாம். (Take comfort in yourself and my gospel is there)

தேவ லோகத்தின் புனிதமான தெய்வீகத் தந்தையிடம் பூலோகத்தில் வாழும் அவர் மைந்தனாக உள்ள மானிடர் அனைவரும் தந்தையின் நம்பிக்கைக்கு உரியவனாகவும், அவர் அன்புக்கும் கருணைக்கும் தகுதியுள்ளவனாகவும் நடந்து கொண்டு, நல்ல மனித நேய பண்புகளோடும் வாழ்ந்து காட்ட வேண்டும்.

மானிடனைச் சுற்றியிருக்கும் மூன்று தடைகள்

1. கரும வாசனைகள்: இந்தப் பூலோகத்திற்கு மானிடனாக பிறவி பெற்று வாழ கீழ் இறங்கி வரும் போது இதனுடன் இணைந்துள்ள உயிர் வாழியான சூட்சும சரீரத்தின் மேல் பூர்வ ஜன்ம நினைவுகளான "கரும வாசனைகள்" அதன் மேல் சூழ்ந்து கொண்டுள்ளது.

2. உணர்ச்சி மயம்: பூலோகத்தில் மானிடனின் இயக்கம் அனைத்தையும் தன் கட்டுப்பாட்டில் வைத்துச் செயல்படும் "பூதாகாசம்" ஆத்மனைச் சுற்றி அதன் அதிர்வுகளை உண்டாக்கி ஜீவனை உணர்ச்சி வெள்ளத்தில் மூழ்கடித்து, அதன் சாபக் கேட்டில் நிரந்தரமாக தள்ளி விடுகின்றது.

3. திரோதானம்: இதில் மூன்றாவதாக உள்ள இயற்கையின் திரை மறைப்பு சக்தியாக (திரோதானம்) உள்ள புலன்கள் கள்ளத்தனமாக நழுவிச் சென்று உயிரின் மீது தாக்குதல் புரிகின்றது. யோகம் என்பது, உலக ரீதியான வாழ்க்கைக்கே அடிப்படையாக விளங்கும் பகல் பொழுதான விழிப்பு நிலை அல்லது ஜாக்கிரதத்தில் சவாலாக உள்ள இந்த மூன்று தடைகளிலிருந்து தாண்டி அப்பால் செல்லுதல் ஆகும்.

இந்த மூன்று தடைகளைத் தாண்டிச் சென்றால் தான் "ஆன்மிக உணர்வு" மனிதனில், தான் தன்னையே உணர்ந்து கொள்ளும் தெய்வீகப் பேரறிவின் "ஞான திருஷ்டியாக" விழித்தெழுகின்றது. (The spiritual awakens there as "Cosmic Insight" to know Thyself)

இந்து மதத்தில் "மோட்சம்"

நம்முடைய இந்து மதத்தில் "மோட்சம்" என்பது பற்றி மிகவும் சரியான முறையில் தெளிவாக விளக்கிச் சொல்லாதது ஒரு பெரும் குறையாகும். ஒவ்வொரு மனிதனும் ஜீவித வாழ்க்கையில் தன்னைப் பற்றி தகுந்த விதமாக அடையாளம் காண மோட்சத்தைப் பற்றி தெரிந்துகொள்ள வேண்டியது அவசியமாகும். உயிர் என்பது எண்ணத்துடனே இணைபிரியாமல் நிலையாக உள்ளதால் அதுவே அழிவில்லாததும், என்றும் நிலைத்து நிற்கக் கூடியதும் ஆகும். (Life is perennial with Thought and thus immortal) நாமனைவரும்

ஒரு எல்லையின் வரைமுறைக்குட்பட்ட தேகத்தில் (Finite self) ஜீவித்திருந்தாலும், அதனுடைய மறுபுறம் எல்லை தாண்டிய அதன் அடிச் சுவடான "பிரம்ம விருத்தியில்" அல்லது ஆன்மிகத்தின் நங்கூரத்தில் வலிமையான சங்கிலியால் பிணைத்து வைக்கப் பட்டுள்ளோம்.

நம்முடைய தேகமானது ஸ்தூலம், சூட்சமம் ஆகிய இவ்விரண்டையும் ஒரே உடலில் தாற்காலிகமாகத் தாங்கி நிற்கக் கூடிய ஆற்றல் படைத்ததாக இருந்தாலும், அது எப்பொழுதும் உயிரினால் அல்லது எண்ணத்தினுடைய நினைவாற்றலின் தன்மையினால் அடக்கி வைக்கப்பட்டுள்ளது. மனிதனின் முதல் குற்றம் என்பது "அகங்காரம்" அல்லது "நான்" என்கின்ற உணர்ச்சிக்கு அடிமைப்பட்டு அதிலே மூழ்கிக் கிடக்கின்றோம். அதற்கு அடுத்தப்படியாக சடலத்துடன் சுய அடையாளம் காணும்படியான "தேகாபிமானம்" மிக்க சுய நலமிகளாக உள்ளோம். பிரம்ம முக்திக்கு தேகாபிமானமே முக்கிய சத்ரு. இதுவே நம்முடைய "விடுதலை" அல்லது "மோட்சத்தை" எய்துவதற்கு பெரும் தடையாக நின்று கொண்டுள்ளது.

சொர்ண தேகம்

"மோட்சம்" என்பது உயிரின் ஜட தேக ஆதிக்கத்தினுடைய போக்கிலிருந்து நிரந்தர விடுதலையை பெற்று, சர்வ சுதந்திரமாய், தான் தனக்குள்ளே பூரண "சுய நினைவுடன்" நிலைத்து நிற்றலேயாகும். ஒவ்வொரு பிறப்பிலும், இறப்பிலும் ஜீவன் தன்னுடைய மேல் பகுதியான ஜீவ உடலை ஒரு சட்டை மாற்றுவது போல் அடிக்கடிக் களைந்து கொண்டே வெவ்வேறு உடல்களுக்குள் தாய் கர்பத்தில் உருமாறிச் சென்றாலும், நம்முடைய ஸ்தூல தேகத்தினுள் அழியாமல் உள்ள அந்த வஸ்துவே, இயற்கையினால் எப்பொழுதும் செலவழிந்து போக முடியாதபடி அதன் ஆற்றல் அனைத்தும் பத்திரமாக, பாதுகாப்பாக உள்ளது.

சாதகன் பேச்சின் ஆற்றலுடன் (வைகரி சித்தி) இணைந்து செல்லும் போதுதான் ஸ்தூலம், சூட்சுமம் ஆகிய இவ்விரண்டு துன்பங்களையும் தவிர்த்துச் செல்ல முடியும். இந்த இரண்டுக்குமுள்ள இடைவெளியைத்தான் நாம் இயற்கையுடன் ஒத்து சென்று, அக்கறையாக வளர்த்து, தேகத்தைத் தூய்மையாக்கி, சடலத்தின் போக்கிலிருந்து நிரந்தரமாக நீக்கி ஸ்தூல உடலை "சொர்ண தேகமாக" மாற்றிக் கொள்ள வேண்டும். "பிரம்ம விருத்தி" அல்லது

"தெய்வீகப் பேரறிவில்" மீண்டும் இணைந்து கொண்டு அதனில் ஆட்சி அமைத்துக் கொள்ளும்படி செய்ய வேண்டும். எப்பொழுது சாதகன் அதில் நிரந்தரமாக நிலைத்து நிற்கின்றானோ அது தான் மோட்சம் என்பது.

அந்த சமயத்தில் தான் மானிடனின் மேல்புற உடலானது அப்படியே உறைந்து போய் அதன் உள்ளே சூட்சுமமாய் இயங்கிக் கொண்டிருக்கும் "உயிர் வாழியுடன்" இரண்டறக் கலந்து ஒன்றுபட்டு அவனுக்குள்ளேயே ஐக்கியமாகி விடுகின்றது. அந்த ஒப்பற்ற நிலையை தொடும்போதுதான், சாதகன் தன் விருப்பப்படி எப்பொழுது நினைக்கின்றானோ அப்பொழுது உருமாறிச் செல்லக் கூடிய சித்தியை பெறும் போது அங்கு தான், "கர்ப்பம்" சாதகனின் யோசனைக்கெல்லாம் கட்டுப்பட்டு அவனுடைய விருப்பப்படி நடந்து கொள்கின்றது. அந்தப் புனிதமான உயிரே ஒரே சீராக இல்லாமல் (தொடர்ந்து வரும் பிறவிச் சுழலில் அகப்பட்டுக் கொள்ளாமல்) தன் சுய விருப்பப்படி சொர்க்கத்தில் அல்லது ஆன்மிக அலைகளின் பேரானந்தத்தில் வேண்டிய கால அளவிற்கு ஒய்வு பெற்றுக் கொண்டு, நித்திய சுகபோகத்தில் லயித்துள்ளது.

போரனந்த ஸ்தானம்

"கைலாசம்" அல்லது "வைகுண்டம்" என்கின்ற அந்த இயற்கையின் தெளிவான நிலையே தேவையான இடைவெளியின் கால அளவுக்குத் தகுந்தவாறு உயிர் எடுத்துக் கொள்ளும் ஒய்வு ஆகும். மீண்டும் இறைவனின் சேவைக்காக, பூவுலகில் எப்பொழுது தோன்ற வேண்டும் என திருஉள்ளம் கொள்கின்றார்களோ அப்பொழுது தோன்றி தெய்வீகத்தை மீண்டும் ஸ்தாபனம் புரிவார்கள்.

மகான்களின் மறுபிறவி என்பது மனிதனாக மீண்டும் உடனடியாக எடுத்து வர வேண்டிய அவசியமில்லை. எப்பொழுது எந்தக் காலத்தில் தோன்ற வேண்டுமோ அல்லது எந்த மாதிரியான மனித வாழ்க்கை அமைத்துக் கொள்ள விருப்பப்படுகின்றார்களோ அந்த மாதிரியாக தாமே சுய நிர்ணயம் செய்து கொண்டு மீண்டும் பூமியில் தேவ புருஷர்களாக அவதரிக்கின்றார்கள்.

"கண்ட சித்தியில்" இருபது மாத்திரை அளவுடைய கேவல கும்பக சித்தி உயிரில் பூர்த்தி கட்டம் அடையும் போது தான், அதன் தனிப்பட்ட

விசேஷ உரிமையில், பிரம்மானந்தத்தின் அலைகளில் மூழ்கி பேரானந்த ஸ்தானத்தை பெற முடியும். அப்படிப்பட்ட போற்றத் தகுந்த உன்னத ஸ்தானத்தின் வரிசை அலங்கரிப்பவருள் "அகஸ்தியரும்" ஒருவர் ஆவார். "பேரானந்தம்" என்பது எண்ணமே உயிராகப் பேச்சின் சூழ் நிலையில் சுழன்று கொண்டேயிருப்பது. விழிப்பு நிலையான "ஜாக்கிரத்தில்" இயற்கையினூடே வாழ்ந்து கொண்டிருந்தாலும், அதன் குறுக்கீடுகளையும் பொருட்படுத்தாமல், பேரானந்தத்தில் மூழ்கி அதனில் எல்லையில்லா மகிழ்ச்சியை அனுபவித்துக் கொண்டே கிடத்தலாகும்.

# விண்வெளிப் பயணமும், யோகத்தின் வான்வெளியில் தன்னாட்சி புரியும் வலிமையும்

பூமியின் தனிச் சிறப்பு:

வான்வெளி என்பது என்றுமே கட்டுக்கு அடங்க முடியாத, எல்லை நிர்ணயமற்றதாய் – எங்கும் சர்வ வியாபகமாய் உள்ள பிரபஞ்ச வெளி ஆகும். நம்முடைய சூரியக் குடும்பம் அதில் ஓர் சிறு அங்கமாகும். சூரியனைச் சுற்றி நவ கோள்கள் உள்ளன. நாம் வாழ்கின்ற புவி மண்டலமாகிய பூமி மட்டும் தான் நீரால் நான்கு பக்கமும் சூழப்பட்டுள்ளது. எனவே பூமியில் மட்டும் தான் உயிரினங்கள் ஸ்தூல உடல் பெற்று உயிர் வாழ்க்கையை வாழ்கின்றன. (Consciousness down to Life in Matter.) இதுவே மற்ற கிரகங்களுக்கு இல்லாத பூமியின் தனிச் சிறப்பு ஆகும்.

விஞ்ஞான சாதனைகள்:

தற்கால விஞ்ஞான யுகத்தில் வான்வெளியில் மானிடர்கள் பல நவீனப் புரட்சிகளைச் செய்துள்ளனர். ஏன், ஆகாயத்தையே அடக்கி ஆளப்போவதாகப் புதிய உத்வேகம் பெற்றுள்ளனர். இதற்கெல்லாம் காரணம் மனித அறிவின் ஆற்றல் விஞ்ஞானத்தின் தீவிர ஆய்வுகளின் மூலம் பல போராட்டங்களைத் தலைமுறை தலைமுறையாக நடத்தி வெகு வேகமாக முன்னேறி வளர்ந்து செல்கின்றது. பல விஞ்ஞான மேதைகளின் அற்புதமான சிந்தனையின் ஆற்றல், இயற்கையின் வினோதமான பல அதிசய சக்திகளுக்கும், இதுநாள் வரை விடை காண இயலாத பல புதிர்களுக்கும், சிக்கல்கள் நிறைந்த கேள்விகளுக்கும் தகுந்த பதில் கண்டறிந்துள்ளது, பல விஞ்ஞான சாதனைகள்! நாளுக்கு நாள், புதிய புதிய, கண்டுபிடிப்புக்கள்! நவீன ஆராய்ச்சிகள்! இவற்றின் மூலம் மனித ஆவல் பன்மடங்கு தூண்டப் பட்டு வருகிறது.

விண்வெளி வீரர்கள்

அதன் பூர்வாங்கக் கட்டமாக இருபதாம் நூற்றாண்டில் மனிதன் வான்வெளியில் தனது ஆதிக்கத்தைச் செலுத்தி அதில் "தன்னாட்சி புரியவும்," "விண்வெளியைத்" (Space) தன் சுய கட்டுப்பாட்டில் கொண்டு

வரவும் என்ன என்ன வழிமுறைகள் உள்ளனவோ, அவை அனைத்தையும் கையாளத் தொடங்கி விட்டான். இம்முயற்சிகள் யாவும் சாத்தியம் அற்றவை! இதன் பலனாக விஞ்ஞானம் மற்றும் தொழில் நுட்பங்களில் தான் புதிய புரட்சிகள் செய்ய முடியுமே தவிர ஒரு போதும் பூமியும் (ஸ்தூலம்) ஆகாயமும் ஒன்றுடன் ஒன்று ஒத்துச் செல்ல முடியாது. பூமியும், வானும், பிரிந்து செயல்படுவது என்பது இயற்கையின் மாற்ற இயலாத விதியாகும். நெருப்பு என்பது சுடும் தன்மை வாய்ந்தது என்பது விதி. விஞ்ஞானத்தினால் நெருப்பை குளுமையாக்க முயன்றால் என்ன விளைவுகள் உண்டாகுமோ அப்படித்தான் விண்வெளியின் நிலைகளும் ஆகும். எந்தக் கால கட்டத்திலும் பூமியில் அடக்க முடியாத ஆகாயத்தை, விண்வெளியில் தேடியலைவது வீண் செயலே! மனித அறிவின் விஞ்ஞான ஆற்றல் மூலம் அதனை அடக்கியாள முடியும் என்கின்ற தவறான கண்ணோட்டத்தில் விண்வெளி வீரர்கள், பல விண்வெளி ஆராய்ச்சிகளையும், சாதனைகளையும் மேற் கொண்டு உள்ளனர்.

பயனுள்ள படிப்பு:

இயற்கையால், விண்வெளியும், பூமியும் இரண்டாகப் பிரித்து வைக்கப்பட்டு உள்ளன. ஆனால் அந்த இரண்டையும் மனிதன் தன் ஸ்தூல உடலிலேயே பெற்றுக் கொள்ள முடியும். அதற்கான சில வழிமுறைகள் யோகத்தில் நம் முன்னோர்களால் வெகு விமர்சையாகவும் மிகவும் பூடகமான முறையிலும் விளக்கிக் கூறப்பட்டுள்ளது. இயற்கையுடன் ஒத்துச் செல்லக் கூடிய ஆற்றல் படைத்த மனத்தின் மூலம் உண்டாகும் எண்ண அலைகளின் சூட்சுமத் திறன் படைத்த அறிவின் வலிமையால் தேகத்தில் ஏற்றத் தாழ்வுகளைக் களைந்து 'ஏகாக்ர சித்தம்' அல்லது 'ஏகோபித்த மனம்' என்கின்ற மனத்தின் 'மேல் கட்ட' நிலையை அடைந்து விடுகின்றது. பிரபஞ்சத்தின் வரை படமாக, சர்வ வியாபகமாகத் திகழும் ஆகாயத்தை "தன்வயப்படுத்தி" இயற்கையையே எதிர்த்துப் புரட்சி செய்யும் திறன் படைத்த 'ஒருமைப்பட்ட மனத்தின்' (Dynamic Mind) வலிமையின் மூலம் அதி சூட்சும ஆராய்ச்சிகளை மேற்கொள்வது என்பது உண்மையிலேயே பயனுள்ள ஒரு படிப்பாகும்.

"உள்ளுணர்வின்" ஆற்றல்:

எண்ணத்தின் சலனத்தினால் இயங்குவது மனம். நாம் விடும் மூச்சுக் காற்று தான் சலனத்தின் மூல காரணமாகும்.

மனமே சித்த சலனத்தைப் பல்வேறு கோணங்களில் உருவாக்கி நிலைகொள்ளாமல் அலைபாய்ந்து கொண்டே நாற்புறமும் சிதறி ஓடச் செய்கின்றது. எனவே மனம் ஒரு கட்டுக்கடங்காத ஒரு முரட்டுக் குதிரை போன்றது. தன்போக்கிலேயே புலன்களைக் கருவியாக்கி அதன் மேல் அலைந்து திரியும் இயல்புடையது. பழங்காலத்து ஓவியர்கள் மனத்தின் சஞ்சல புத்தியுடைய இயல்பைத் தான், "இரண்டு சிறகுகளை விரித்து வானத்தில் பறந்து செல்லும் வான்குதிரை"யைப்போல சித்தரித்து உள்ளார்கள். ஒருபுறத்தில் இயற்கை மனத்தை ஒரு நிலைகொள்ள விடாமல் புலன்களின் மூலம் பாடாய்ப்படுத்தி எப்பொழுதும் மனிதனை "சித்த விருத்தியின்" கட்டுப்பாட்டில் சிறைப்பிடித்து, அவனுடைய சுய நினைவு மீண்டும் அவனுள் தோன்ற முடியாதபடி ஜீவித விளையாட்டை ஆடி வருகிறது. மறுபுறம் மற்றொரு சாதகமான அம்சத்தை அளித்துள்ளது. அதுவே எண்ணத்தில் உண்டாகும் புத்திக் கூர்மையின் "உள்ளுணர்வின்" ஆற்றலைத் தன்பால் கவர்ந்து ஈர்த்துக் கொள்ளும் வலிமை பெற்றதாகிறது.

மனதை "ஒரு நிலைப்படுத்தும்" முயற்சிகளை மனிதன் மேற்கொள்ளும் போது அதன் பலம் தொடக்கத்தில் பலவீனமாகத் தோன்றுகிறது. ஆனால் சாதனையின் வளர்ச்சியில் சுவாசத்தையே நகர முடியாமல் ஸ்தம்பிக்கச் செய்யும் அளவிற்கு மனதிற்கு மகத்தான சக்தி உள்ளது. அத்தகைய நிகழ்ச்சி நடைபெறும் போது, மனிதன் தன் சுய நிலையை இழந்து 'நான்' என்கின்ற ஆணவ நிலையில் லயித்து விடுகின்றான். இது இயற்கை அளிக்கும் ஒரு திரை மறைப்பு! அல்லது முட்டுக்கட்டை! 'எண்ணம்' மற்றும் 'பேச்சு' இந்த இரண்டிற்கும் இடையேயான ஒரு வெற்றிடத்தை (vacuum betwixt Thought and Speech) யோகத்தில், தெய்வீக அருள் சக்தியின் மூலமாகத்தான் தாண்டி மேல் நிலைக்குச் செல்ல முடியும்.

'பூதாகாசம்' (Ether):

பூமியின் புவிஈர்ப்புச் சக்தியானது "ஸ்ரீ வித்தையில்" 'பூதாகாசம்' என்கின்ற பெயரில் அழைக்கப்படுகின்றது. நம்முடைய தேகத்தில் பஞ்ச பிராணன்களாகவும், பஞ்சாக்னியாகவும், முக்குணங்கள், (வாதம், பித்தம், கபம் ஆகிய மும்மூர்த்திகளின் ஆட்டமாகவும்) உள்ளது. மனம், எண்ணம், மூச்சு, பேச்சு, ஆகிய இவையாவும் 'நாபியை' நடுமையமாக வைத்து அதன் ஆகர்ஷண சக்தியினால் செயல்படுகிறது. இதனால் புலன்களின் இரும்புப்

பிடியிலிருந்து மீள முடியாத படி இயற்கை மனிதனை நிரந்தரமாகக் கட்டுப்படுத்தியுள்ளது. இதனை எல்லாம் அவன் யோக சாதனையின் மூலமாகத் தான் வெற்றி கொள்ள முடியும். அதற்கு உரிய வழிமுறை பல்வேறு மதங்கள் அந்தந்த நாட்டின் கலாச்சாரம், பழக்க வழக்கம் மற்றும் சீதோஷ்ண நிலைக்குத் தக்கவாறு மக்களுக்கு அளிக்கப்பட்டுள்ளது.

தற்காலத்தில் விண்வெளி அறிவியலில் தேர்ச்சி பெற்றுள்ள சில சர்வ தேச நாடுகள் விண்வெளி வீரர்களைக் கடுமையான பயிற்சியின் மூலம் தயார்ப் படுத்தி விண்வெளியில் பல விஞ்ஞான பூர்வமான ஆராய்ச்சிகளை மேற்கொள்ளவும், இயற்கையின் புதிர் நிறைந்த பல விஷயங்களைக் கண்டுபிடிக்கவும் அனுப்பி வைத்துள்ளன. விண்வெளிப் பயணத்தின் மூலம் விண்வெளி வீரர்கள், பூமியின் ஈர்ப்பு விசையை ("பூதாகாசம்") அறிவியல் கருவிகளின் துணை கொண்டு வெகு எளிதில் தாண்டி விடுகின்றனர்.

சனிக் கிரகத்தின் ஆட்சி:

வானத்தில் பூமியின் ஈர்ப்பு விசை ("பூதா காசம்") முற்றிலும் நீங்கிய நிலையில் புலன்கள் அனைத்தும் ஒன்றின் மேல் ஒன்று கூடி மனம் ஒருமைப்படுகின்ற நிலையைப் பெறுகின்றனர். அதுவே 'தூக்கம்' மற்றும் 'பேரறிவு மனம்' ஆகிய இவ்விரண்டிற்கும் இடைப்பட்ட நிலையாகும். வான்வெளியில் சூரியனின் வட்டப்பாதையின் வெகு தொலைவில் மந்தகதியில் நிதானமாகச் சுழலும் "சனிக் கிரகம்" (Planet Saturn) தான் புலன்களை அடக்கி, மனம் ஓய்வு பெறும் தூக்கத்தினை அளிக்கும் கிரகமாகச் செயல்படுகின்றது. எனவே பூமியின் ஈர்ப்பு விசையைத்தாண்டிச் சென்றால் அங்கே, தூக்கம் தான் ஆட்கொள்கின்றது என்பது இதன் மூலம் நிரூபணமாகின்றது.

ஆகாயத்திலிருந்து மீளும் போராட்டம்:

விண்வெளி வீரர்கள் தங்களின் பயணத்தை முடித்து விட்டு மீண்டும் பூமிக்குத் திரும்பும் போது பூமியின் உயிரோட்டமுள்ள அற்புதக்காட்சிகள் அவர்களுக்குப் புத்துணர்ச்சியையும் மன அமைதியையும் அளிக்கின்றது. பூமியிலிருந்து வான்வெளியில் மேல் செல்லச்செல்லக் காற்று மண்டலம் சுருங்கிக்கொண்டே செல்கின்றது. ஆகாயத்தில் குறிப்பிட்ட உயரத்திற்கு அப்பால் ஆக்சிஜன் எனப்படும் "பிராண வாயு" அங்கு கிடையாது. 'வாயு'

தான் சூட்சுமமாக வானம் முழுவதும், பிரபஞ்சம் வரை எங்கும் நீக்கமற பரவியுள்ளது. வாயு என்பது சூட்சுமம். அதன் ஸ்தூல வடிவம் தான் 'காற்று.' காற்றை நம்மால் காண முடியாவிட்டாலும் உணர முடியும். வாயுவைக் காணவோ, உணரவோ இயலாததால் இதனையே சூட்சுமம் என அழைக்கிறோம். எனவே வானத்தில் உள்ள வாயு இப்புவியில் காணப்படும் அனைத்து ஜீவராசிகளுக்கும் இரவில் நித்திரையைத் தூண்டித் 'தூக்கத்தை' அளிக்கின்றது.

பூமியின் ஈர்ப்புச் சக்தியை எதிர்த்து ஆகாயத்தின் சுற்று வட்டப்பாதையில் செல்லும் விண்வெளிக் கப்பல் வாயுவில் உறக்கத்தை உண்டாக்கிப் புலன்களை செயலற்றுச் போகச் செய்யும் இக்கட்டான சூழ்நிலையையும் கடந்து செல்ல வேண்டியது அவசியமாகிறது! எனவே, மனிதன் விண்வெளிக் கப்பலின் (Space Ship) உள்ளே அமர்ந்து விஞ்ஞான ஆராய்ச்சிகள் மேற்கொண்டாலும், அங்கும் அவன் இயற்கையின் நியதியிலிருந்து என்றுமே மாறுபட்டவன் அல்லன்.

இதன் மூலம் இயற்கை அளிக்கும் தீர்ப்பு என்ன? மனிதன் விண்ணில் இருந்தாலும், மண்ணில் இருந்தாலும், ஆகாயத்தின் பிடியிலிருந்து மீளும் போராட்டத்தை "ஜாக்கிரதம், சுவப்னம், சுஷுப்தி" என மாறி, மாறி, விடாமல் மனிதனிடம் சுழலும் "விழிப்பு நிலை, கனவு நிலை, உறக்க நிலை" ஆகிய இம்மூன்று நிலைகளையும் ஏதாவது சாதனையின் துணையின் மூலம், புலன்களை முடக்கிப்போட்டு மனத்தைச் செயல்படாமல் தடுக்கும் தூக்கத்தினை நீக்கி, "ஜாக்கிரத நிலையிலேயே" (விழிப்பு) வெற்றி கொள்ள வேண்டும் என்பதே அந்தத் தீர்ப்பு! தொன்று தொட்டுப் பண்டைய காலத்தில் பாரத தேசத்தில் வாழ்ந்த அறிவிற் சிறந்த பெரியோர்கள் இந்த சாதனையின் கலையைத் தான் 'யோகம்' என பெயரிட்டு அழைத்தார்கள்.

**சனி கிரகத்தின் ஆற்றல்:**

பூமி ஒருபுறம், சூரியனின் சுற்றுப் பாதையில் தன் அச்சில் சுழன்று கொண்டே சூரியனையும் சுற்றி வருகிறது. அதன் மற்றொரு சுற்றுப் பாதையில் ஆகாயத்தின் மூலம் இயற்கையை மனிதனுக்கு அறிமுகப்படுத்துகின்றது. பூமி, ஆகாயம், இயற்கை ஆகிய இவை யாவும் வேறு வேறாகத் தோன்றினாலும், பூமியின் இந்த இரண்டு சுற்றுப்பாதையும் ஒன்று தான். இங்கு தான் 'பஹிர்'

எனப்படும் கண்களின் வெளிப்பார்வையின் தோற்றத்தின் வழியாகக் காட்சிகளை யெல்லாம் அபகரித்து ஆட்கொள்ளப்படும் மனத்தின் மூலம் ஆகாயத்தில்தான், சகல உயிரினங்களும் அடங்குகின்றன. இயற்கையானது அனைத்து ஜீவன்களின் வாழ்க்கையைப் பார்வையின் (Perception) வெளித் தோற்றத்தின் மூலம் ஸ்தூலத்தில் அடக்கி வைத்துள்ளது. சகல ஜீவராசிகளின் ஜீவித வாழ்க்கையானது அன்றாடம் சுவாசித்தலின் (மூச்சு விடுதல் – Respiration) மூலம் உயிர், உடலில் இணைத்து வைக்கப்பட்டுள்ளது. சனிக் கிரகம் தான் நடு வானத்தில் (mid-air) நிகழும் நிகழ்ச்சிகளுக்கு காரணமாய்த் தாங்கி நிற்கின்றது. "விண்வெளியில் தன்னாட்சி" (Autonomy of Space) செய்ய சனிக் கிரகத்தின் ஆற்றலைத் தாண்டிச் செல்வது என்பது மிகவும் கடினமான சாதனையாகும்.

விண் வெளியில் உணரும் இதே மாதிரியான அனுபவத்தை பூமியில் வாழும் எல்லா உயிரினங்களும், தானே வலியச் சென்று பொறியினுள் சிக்கும் எலியின் நிலையைப் போலவே தூக்கத்தில் வலுக்கட்டாயமாகச் சிக்கிக் கொள்கின்றன. ஆகாயத்தின் சக்தி அங்கு தான் மனிதர்களிடம் அளிக்கப்படுகின்றது. அப்படியில்லாவிடில் உண்ணும் உணவு கவளம், கவளமாக உடலின் உள்ளே, வயிற்றுப் பகுதிக்கு செல்வது எப்படி சாத்தியமாகும்? நாம் பேசும் "பேச்சின்" நிலையும் அப்படியே.

சர்வ ஆற்றல் படைத்த "ஞான திருஷ்டி":

பண்டைய வேத காலத்தில் பாரத தேசத்தில் வாழ்ந்த வான சாஸ்திர அறிஞர்களும், தபோ சிரேஷ்டர்களும் வான் வெளியின் ரகசியத்தைத் தங்களின் உன்னதக் கண்டுபிடிப்புகளின் மூலம், தற்கால காலத்திற்கும் பொருந்துகின்ற வகையில் வெளிப்படுத்தியுள்ளனர். நவீன யுகத்தில் அறிவியல் கருவிகளின் துணை கொண்டு வான சாஸ்திரங்களில் கண்டு பிடிக்கப்பட்ட உண்மைகள் அனைத்தையும் பழங்காலத்தில் வாழ்ந்த நம் முன்னோர்கள் எந்த ஒரு புறக் கருவியின் உதவியுமின்றி மனத்தின் அதி சூட்சும விசாரணையின் மூலமாக வெகுதூரம் ஆராய்ந்து சொல்லியுள்ளார்கள். இயற்கையின் ரகசியங்கள் அனைத்தையும் தவத்தின் வலிமையினால் உணரும் சர்வ ஆற்றல் படைத்த அது தான் "ஞான திருஷ்டி" என்று சொல்லப்படுகிறது.

மனித உடல் கூட்டில் மிக மேன்மையாக விளங்கும் "விசுத்தி" (Throat Center) உணவு உட்கொண்டு விழுங்கும் "தொண்டைப் பகுதியில்" தான், உண்மையில் "ஆகாசம்," எண்ணத்தின் பரப்பளவில் விரிந்துள்ளது. எனவே அது தான் விசுத்தி எனப்படும். மனித வாழ்வில் மறைந்து கிடக்கும் அனைத்துப் புதிர்களுக்கும் விடை காண இயற்கை அறை கூவல் விடுக்கின்றது. இங்கு தான் ஜீவித வாழ்க்கையின் மிக முக்கியக் கட்டமாகத் திகழும் "எண்ணம்" மற்றும் "பேச்சு" (Thought and Speech) இவ்விரண்டுக்குமிடையேயான அதி சூட்சுமப் பங்கு அடங்கியுள்ளது. அதாவது எண்ணம் அடங்கினாலும் பேச்சின் ஒலியானது, மனத்தின் அடித்தளத்தில் மிக நுண்ணிய சப்த அலைகளாக ஓடிக்கொண்டே உள்ளது.

அகண்டாகார ஞானம்:

"அகண்டாகார ஞானம்" அடைவதற்கு சாதகன் இதன் வளங்களை எல்லாம் நன்கு புரிந்து கொண்டு வெகு சூட்சுமமாய் ஆராய்ந்து அறிந்து கொள்ள வேண்டும். அமரகவி சித்தேஸ்வரர் எழுதிய கிரந்தமானது இக்கருத்தைத் தான் மிக முக்கியமாக வலியுறுத்திக் கூறுகின்றது. அமரகவி சித்தேஸ்வரரின் அகண்டாகார ஞான விருத்தி ஆராய்ச்சி சாதனையின் தொடக்க காலத்தில் சிறிய அளவிலேயே இருந்தது. பாரத தேசத்தில் வாழ்ந்த ரிஷிகள் வெகு தூரம் ஆராய்ந்து சென்றுள்ளனர்.

மூச்சுக் காற்றின் பிணைப்பு:

தேவ லோகத்திற்கும், பூலோகத்தின் உயிர் வாழ்க்கைக்கும் இடையே மூச்சுக் காற்றானது "சுவாசித்தலின்" மூலம் பிணைக்கப்பட்டுள்ளது. உலகனைத்தும் காணப்படும் ஜீவராசிகள் ஸ்தூல தேகத்தில் ஒரே மாதிரியான அளவு கோலின் அடிப்படையில் செயல்படுகின்றன. இயற்கையின் மூலமாய் அதன் பிடியில் சிக்குண்டு கிடக்கும் ஜீவனின் மனம் இதிலிருந்து (சுவாசத்தில்) ஒய்வு கொள்ள வேண்டுமானால், புலன்கள் செல்லும் வழியிலே சென்று, அவை காணும் காட்சிகளையெல்லாம் நன்றாக மூடிவிட வேண்டும். அவ்வாறு அவன் புலன்களைச் செயல்பட விடாமல் தடுத்து முடக்கிப் போடும் சாதனையில் எப்பொழுது வெற்றி காண்கின்றானோ, அப்பொழுது தான் அவன் மரண தேவதை அரசாட்சியின் கீழ்க் கட்டுண்டு வாழும் நிலைமையை மீறி, வானுலகக் கதவுகளைத் திறந்து பார்க்கும் அற்புத ஆற்றலைப் பெறுகின்றான்! அல்லது

ஆகாயத்தைப் பற்றி தெளிவாக அறிந்து கொள்ளும் ஒரு வாய்ப்பினைப் பெறுகின்றான்.

மனத்தின் மூலம் வெளி நோக்கிப் பாயும் தன்மையுடைய "பார்வையின்" (Perception) உதவி கொண்டு, காற்று, பூமியில் வாழும் மானிட உடலின் அசைவு முழுவதையும் தன் வசம் இழுத்து, ஆகாயத்தில் அலைந்து திரியும் படிக் கட்டாயப்படுத்தியுள்ளது. இந்த ஒவ்வாமை அல்லது வித்தியாசம் தான், ஆகாயத்தைப் பற்றி அறிந்து கொள்ளும் வாய்ப்பினை மனிதன் பெற ஊக்குவிக்கின்றது.

பூ ஸ்பரிசம்:

பல நிலைகளில் பரிணாம வளர்ச்சி பெற்ற யோகத்தின் இந்த விவேகத்தை பாரதம் தொன்று தொட்டு அறிந்திருந்தது. வெளிப் பார்வையின் சலனத்திலேயே ஆகாயத்தில் சுற்றித் திரியும் ஜீவனின் மனம், அதில் மின்னல் போல் தோன்றும் பலவிதமான எண்ணங்களையும், சாதனையின் மூலம் சாதகன் தன்னுள் தடுத்து நிறுத்தி வைக்க வேண்டும். இவ்வாறு தேகாபிமானத்தை அல்லது அதன் "பூ ஸ்பரிசத்தின்" உள்ளேயே தற்காலிகமாக நிறுத்தி வைப்பதே "உடல்" எனப்படும்.

ஜீவனின் தேக நினைவு எப்பொழுதும் பூலோகத்தின் லௌகீக வாழ்க்கையிலே அடக்கி ஆளப்படுகின்றது. இதைத் தவிர அவனுடைய எண்ணம் வேறு எதைப்பற்றியும் சிந்திக்கவும், யோசனை செய்வதற்கும், இடம் தருவதில்லை. அந்நிலையில் உயிர், ஜீவனின் உள்ளேயே அடங்கி, ஓய்வு கொண்டு அதன் மீட்புச் சக்தி உடலினின்று ஜீவனுக்கு எந்தவித ஆன்மீக பயனும் விளைவிக்காமல் அழிந்து விடுகின்றது.

பூமியும், ஆகாயமும் ஒத்துப் போகும் நிலை:

யோகத்தின் விதிமுறைப்படி உயிரை உடலுக்கு வெளியே தள்ளி வைக்க வேண்டும்! அதாவது உடலின் தேகப் பிரக்ஞை என்கின்ற நினைவிலிருந்து, விலக்கி வைக்க வேண்டும். அங்கு தான் பூமியும் ஆகாயமும் தேகத்தின் உயிர் வாழ்க்கை என்கின்ற நிகழ்ச்சிகளுக்கிடையே ஒன்றுடன் மற்றொன்று இணக்கமான முறையில், விரோதமில்லாமல் பங்கு எடுத்துக் கொள்கின்றது. உண்மையில் இந்த தேவலோகச் சந்திப்பில் தான் நாசியின் 8 அங்குல சுவாசம் என்கின்ற "இரட்டை சுவாசத்தைப்" (Double Breathing)

பெறும் தகுதி உருவாகின்றது. எனவே பூமியும், ஆகாயமும் ஒத்துப் போகும் அந்நிலையை அடைந்தாலொழிய, எட்டு அங்குல நீளமுடைய சுவாசம் சாதகனுக்குக் கைகூடுவது என்பது சாத்தியமாகாது.

அந்தர் முகம் (Cosmic Insight):

சாதாரணமாக மானிடனின் மூச்சுக் காற்றான சுவாசம் பதினாறு அங்குல நீளமுடையது. அதனையே வெட்டுண்ட சுவாசம் அல்லது **துண்டுபட்ட சுவாசம்** (Intermittant Breathing) அல்லது **கர்ம தேக மூச்சு** என்றழைப்பார்கள். அதுவே யோக சாதனையில் எட்டு அங்குல நீளமுடைய **இரட்டை சுவாசத்தில்** (Double Breathing – Kevala kumbhakam) சாதகன் நிலைபெறும் போது, புலன்களின் வழியாகச் சுற்றி திரியும் இயல்புடைய மனம், ஒரு அதி சூட்சும நிலைக்கு உயர்ந்து விடுகின்றது. மனித குல சரித்திரத்தில் இந்த மாபெரும் சாதனை தரம் குறையாத அளவிற்கு அடையாளம் காண்பிக்கப்படுகின்றது. "அந்தர் முகம்" (Cosmic Insight) அல்லது தேவ லோக வாழ்விற்குரிய "ஞானத்தின் அறிவுச் சுடரை" ("அகக்கண்") அளிக்கவல்ல அதி அற்புத சக்திகள் யாவும் புலன்களிலேயே உதயமாகின்றது. மனித குல அரசாட்சியில் "உயிர்" அதன் எல்லைக்குள்தான் அடைக்கப்பட்டுள்ளது. அது எப்பொழுதும் அதன் வரம்பு முறைகளை மீறுவதேயில்லை. "உயிர்," அதன் சலனத்திலிருந்து சாந்தி பெற்று அமைதியுடையும் போது, "ஆகாயம்" தான் அதன் இருப்பிடம் அல்லது தாய் வீடாகும்.

சப்த தாதுக்கள்:

இயற்கையானது விண்வெளியில் எந்த ஒரு ரகசியத்தையும் அதன் உச்சியில் புதைத்து வைக்கவில்லை. ஆனால் அவையெல்லாம் அடுக்குகளுக்கு மேல் ஆழ்ந்த அடுக்குகளாக (Layer after Layer) மனிதனின் உணர்வுக்குள்ளேயே ஒய்வு பெற்றுள்ளன. அவை ஏழு நிலைகளை கொண்ட "திரு மூச்சு" (Seven Dimensions of Cosmic Air) ஆக உள்ளது. இதனையே "ஸ்ரீ வத்ஸம்" என அழைக்கின்றார்கள். அவையே பூலோகத்தில் வலம் வரும் அனைத்து ஸ்தூல தேகத்தின் "சப்த தாதுவாக" வருணிக்கப்பட்டுள்ளது. பண்டைய காலத்தில் வாழ்ந்த யோகிகள் இயற்கையின் இந்த குறிப்புகளையெல்லாம் கவனத்தில் எடுத்துக்

கொண்டார்கள். மண்ணுலகத்தின் அனைத்துப் படைப்புகளும் மூச்சுக் காற்றின் மூலம் சப்த தாதுக்களை உடலில் பிரகடனப்படுத்தி ஜட சரீரத்தின் அமைப்பை ஏற்றுக் கொண்டுள்ளது.

**பூதாகாச அலைகள் (Etheric Waves):**

விண்வெளி ஓடப்பயணத்தின் மூலம் இயற்கையின் சக்தி வாய்ந்த அற்புதங்களை எல்லாம் வெளிப்படுத்த முடியும். அது தவிர, அங்கு ஜடத்தின் மீது எரி சக்தியின் ஆற்றல்கள், ஆபத்தான நிலையில் சந்தித்துக் கொள்கின்றன. "சக்தி" என்பது "ஆற்றல்," ஆனால் அதுவே உயிராகாது. அது பூமியின் புவி ஈர்ப்புச் சக்தியின் ஏற்றத் தாழ்வுகள் மற்றும் ஆகாயம் இவையிரண்டுக்குமிடையே இயக்கம் (Motion) ஆகும். அணு ஆற்றல் சிதைந்து பிளவுபடுவதனால் உண்டாகும் காற்றில் கலந்துள்ள மூலக்கூறுகளான "ஆக்ஸிஜன்" மற்றும் "நைடிரஜன்" (Nitrogen) ஆகியவை அடங்கியது தான் "பூதாகாச அலைகள்" எனப்படும். இவ்வாறு பிரபஞ்ச சக்தியின் இரண்டு திடப்பொருள்களிலிருந்து உடைந்த சிறு துகள்கள் தான் சிருஷ்டியிலுள்ள அனைத்து உயிரினங்கள் பூமியில் உயிர் வாழ்வதற்கு ஏற்ற பல பிராணி தாவரங்கள் தோன்றுவதற்கான இரசாயன மாற்றங்களை (Biological changes) உண்டாக்கியதற்குக் காரணமாகும்.

**ஸ்தூல உடல்–உயிர் பரிணாம வளர்ச்சி:**

இத்துணை உணர்ச்சி மிக்க இயற்கை (Sensitive Nature) மற்றும் அதன் மற்றொரு அம்சமான உயிர் வாழியின் ரகசியங்களை எந்த விஞ்ஞானியின் அறிவியல் கண்டுபிடிப்புகளாலும் ஒரு போதும் உரிமை கொண்டாட முடியாது என்பது மறுக்க முடியாத ஒரு உண்மையாகும். அப்படியே ஒரு வேளை விஞ்ஞான பூர்வமான ஆராய்ச்சிகள் மேற் கொண்டாலும் "உயிர் பற்றிய" (Life Force) ஒரு சில தற்காலிக பயன்களைப் பற்றித் தான் தெரிந்து கொள்ள முடியுமே தவிர, அவனால் ஒரு போதும் மானிடனின் ஸ்தூல உடல் – உயிர் வளர்ச்சியை (பரிணாம வளர்ச்சியை எவ்வாறு பூமியில் அடைந்தான் என்கின்ற சுவாரசியமான கேள்விக்கு விடை காண இயலாது. "விஞ்ஞான பூர்வமான ஆராய்ச்சி இயற்கையின் Bio-dataவைத் தான் வெளி படுத்துமே தவிர, மேன் மேலும் அதி தீவிரமாய் ஆராய்ந்து கொண்டே சென்றால், அவை யாவும், பயங்கரமான ஆபத்து நிறைந்த மனித குல நாசத்தையே உண்டாக்கும்

அளவிற்கு செல்லும்" என்பதனை அமரகவி சித்தேஸ்வரர் எச்சரிக்கை விடுகின்றனர்.

சர்வ தேச நாடுகளுக்கு அச்சுறுத்தல்:

அறிவியல் ஆராய்ச்சிகளை மேற்கொள்ள விஞ்ஞானிகளைத் தூண்டி அவர்களைப் பொருளாதார ரீதியில் ஊக்குவிக்கும் பன்னாட்டு அரசுகள் முடிவில், அதனால் பெறும் பலா பலன்கள் யாவும், நாடுகளுக்குக்கிடையேயான ராணுவ யுத்த தளவாடங்கள் போட்டா போட்டியை வளர்த்து, (Armaments Race) மனித குலத்துக்கே நாசம் விளைக்கும், அணு மற்றும் பயங்கர ஆயுதங்களுடைய நாடுகள், (Super Weapons) என்கின்ற பெருமையைத்தான் பிரகடனப்படுத்தி கொண்டு, மற்ற சர்வ தேச நாடுகளுக்கு அச்சுறுத்தல் ஏற்படுத்த முடியுமே தவிர, மனிதன் பரிணாம வளர்ச்சியின் மேம்பாடு பெற எந்த முயற்சிகளையும், மேற் கொள்வதற்கு எந்த விதமான ஆதரவும் அளிப்பதில்லை.

இயற்கையை மனிதன், அறிவியல் துணை கொண்டு, ஓர் அளவிற்குத் தான் ஆராய்ச்சி செய்ய வேண்டும். அளவுக்கு அதிகமாக அதி தீவிரமாய் அதன் உள் ஆராய்ச்சிகளை மேற்கொண்டால் அதன் விளைவுகள், முடிவில், மனித குலத்திற்குப் பெரும் கேடுகளை விளைவிக்கும், ஆபத்துக்களைத்தான் உண்டாகும்.

தவம் புரியும் ஞானி – விஞ்ஞானி:

உண்மையில் விஞ்ஞானியும், தவம் புரியும் ஞானியும் ஒன்று தான். விஞ்ஞானி இயற்கையின் திடப் பொருள்களை நவீனத் தொழில் நுட்பக் கருவிகளின் துணை கொண்டு புற ஆராய்ச்சிகளால் தன்னைத் தீவிரமாய் ஈடுபடுத்திக் கொள்கின்றான். ஞானியோ இதற்கு நேர் விரோதமாய் எந்தப் புறக்கருவிகளின் துணையும் இன்றித் தன் மனத்தின், அதி சூட்சும நிலையின் சூழ்நிலைக்குச் (Supra Mental states of Higher Intelligence) சென்று "தபோ சக்தியின்" துணை கொண்டு "ஆத்ம விசாரணை" செய்கின்றான். எனவே விஞ்ஞானியும், தவம் புரியும் ஞானியும் ஒன்று தான். ஆனால் கொள்கை ரீதியில் தான் வேறுபாடுகள் நிறைந்துள்ளன. விஞ்ஞானிக்கு இயற்கை, தன் ஒரு பகுதியான திடப்பொருள்களின் வேற்றுமையின் பல்வேறு பிரிவுகளால் இரகசியத்தை விரிவு படுத்திக் கொண்டே, ஒரு முடிவில்லாமல் நீடித்துச் செல்லச் செய்கின்றது. எனவே விஞ்ஞானி இயற்கையை வெல்லவில்லை,

அதனை வேடிக்கைப் பார்க்கின்றான். ஆனால், ஞானிகளுக்கோ, இயற்கை தன்னை முழுவதும் அர்ப்பணித்து அடிபணிந்து செல்கின்றது. ஞானி அதன் மூலம் இறைவனுக்கு நிகரான சிருஷ்டி புரியும் ஆற்றலையும் தன் விருப்பம் போல் பெற்று, பிரபஞ்சத்தின் அரசாட்சியில் பரிபாலனம் புரியும் இறைவனுடன் சமபங்கு எடுத்துக் கொள்ளும் அற்புத ஆற்றலைப் பெறுகின்றான்.

**சித்தத்தை அடக்கியாளத் தன்வசமாகும் இயற்கை:**

எனவே, விஞ்ஞானத்தின் கண்டு பிடிப்புகளின் பயன்கள் யாவும் ஒரு புறம் மனிதன் சௌகரியமான லௌகீக வாழ்க்கைக்கு உதவியாக இருந்தாலும், அதன் மறுபுறம் தீவிரவாதிகள், பயங்கரவாதிகள், பிரிவினைவாதிகள், மதவாதிகள் சகிப்புத் தன்மையற்றவர்கள் ஆகிய இவர்களுக்கும், விஞ்ஞானத்தின் பயன்கள் பெரும் ஊக்குவிப்பாக அமைந்து, மனித குலத்துக்கே ஊறு விளைவிக்கும் அளவுக்கு, பயங்கரமாக அமைந்து விடும் என்பதனையும் கருத்தில் கொள்ள வேண்டும். விஞ்ஞானக் கண்டு பிடிப்புகளுக்கு முன், சென்ற சில நூறு ஆண்டுகள் வரை, இத்தகைய தொல்லைகள் யாவும் இருந்ததில்லை என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும். மனிதனின் ஆர்வம் தற்சமயம் ஆன்மீகப் பாதையிலிருந்து விலகித் திசை திரும்பிச் சென்றுள்ளது.

விஞ்ஞான அறிவியலின் நவீன கண்டு பிடிப்புகள் எல்லாம் ஆதார பூர்வமாக விளக்கித், தன்னுடைய கண்டுபிடிப்புகளை வெளிப்படையாக பகிரங்கமாக நிரூபித்து அறிவிக்க வேண்டிய நிர்ப்பந்தம் விஞ்ஞானிகளுக்கு உண்டு. எனவே விஞ்ஞானியின் கண்டு பிடிப்புகளின் ரகசியங்களை மற்ற அனைவரும் வெளிப்படையாகத் தெரிந்து கொள்ளக் கூடிய வாய்ப்புகள் மிக அதிகம்.

பிரபஞ்சத்தின் அண்ட வெளியில் உணர்வு பூர்வமான இயற்கை (Sensitive Nature) தன்னை ஒரு கட்டுக் கோப்புகள் நிறைந்த சட்ட நெறி முறைகளில் நியதி தவறாமல் தன்னை அடக்கி வைத்துக்கொண்டுள்ளது. மனிதன் என்றைக்கும் தன்னுடைய விண்வெளிப் பயணங்களின் மூலம் தானே அங்கு சென்று நிரந்தரமாகத் தங்க முடியாது. யோகத்தில் வான் வெளியில் சுய ஆதிக்கம் செலுத்தும் அத்தனைத் தன்மைகளும் அவனுள்ளேயே அடங்கியுள்ளது. அவை யனைத்தும் இயற்கையிடையே செல்லும்

திடப்பொருள்களின் ஜட அலைகளின் ஆதிக்கம் தங்கியிருந்தாலும் மனத்தின் மூலம் அதனை சூட்சுமத்தில் அடக்கிச் செல்ல வேண்டிய அழைப்பின் அறை கூவல் அங்கு அடங்கியுள்ளது என்பதை சாதகன் அறிந்து கொள்ள வேண்டும். "சித்தத்தை அடக்கியாள இயற்கை தன்வசம் அறிவில்," என்கின்ற சுவாமி அமரகவியின் பாடல் இக்கருத்தையே முக்கியமாக வலியுறுத்துகின்றது.

கனவு நிலையில் சுய நினைவு:

அன்றாடம் மூச்சு விடுதலின் மூலம் நடைபெறும் சுவாசம் மானிடனை ஒரு புறம் மூச்சை மீறிச் செல்ல முடியாமல் தடுத்து நிறுத்தியிருந்தாலும், மறுபுறம் சுவாசத்தைக் கட்டுப்படுத்தி, சாதனையில் அதனையும் மித மிஞ்சி, மீறி தாண்டிச் சென்றால் தான், இயற்கையையும், அதன் ஆழத்தில் புதைந்து கிடக்கும் ரகசியங்களையும், வெற்றி காண முடியும். இந்தத் தெய்வீக கிரந்தம் சகலருக்கும் அங்கு தான் அழைப்பு விடுக்கின்றது. இவை அனைத்தும் ஸ்தூல தேகத்தின் இயக்கத்திலேயே, (Body system) அன்றாடம் நாமனைவரும் தூக்கத்தில் அனுபவிக்கும் "கனவு நிலை" நடைபெறும் இடத்திலேயே, அடங்கியிருப்பது ஒரு அதிசயமான நிகழ்ச்சியாகும். யோக சாதனையில் கனவு நிலையை, பூரணப் பிரக்ஞையுடன் அல்லது சுய நினைவுடன் அடைவதே "யோக நித்திரை" என்று அழைக்கப்படுகின்றது.

தேவ குரு பிரகஸ்பதி – வியாழன் கிரகம்:

பகல் பொழுதான "விழிப்பு நிலையில்" சுவாசித்தல் மூலம் செயல்படுகின்ற புலன்களனைத்தும் அதன் பிடியிலிருந்து மீண்டும் பின் வாங்கி, அதி சூஷ்மத்தில், தூக்கத்தின் நடு மையாகத் திகழும், சுகமான அனுபவங்கள் அளிக்க வல்ல "கனவு நிலையில்" ஒய்வு பெறுகின்றது. விவேகத்தினை அளிக்க வல்ல "ஞானத்தின் இருப்பிடம்" அங்கு தான் மையம் கொண்டுள்ளது. யோகத்தின் மிகவும் உன்னதமான இந்நிலையில் தான் இவ்விரண்டு நிலைகளும் அதாவது விழிப்பு நிலை, மற்றும் தூக்க நிலை ஆகியவை உயிருடன் ஒன்றாக ஐக்கியமாகி, இணைந்து செயல்படுகின்றன. வான் வெளியில் சஞ்சாரம் புரியும் மற்றெல்லா கிரகங்களையும் விட அளவில் மிகப் பெரியதான வியாழன் கிரகம் எனப்படும் அதன் அதிபதியான "தேவ குரு பிரகஸ்பதி" தான் "கனவுலக அற்புதங்களை எல்லாம்" (Land of Super Wisdom) மனித உயிர் வாழ்க்கையில் அடக்கி ஆள்கின்ற கிரகம்

என்பதனை அறிவிக்கின்றது. மற்றும் தூக்கத்தை (நினைவின் தற்காலிக மறதியை) என்றைக்குமே அளிப்பது சனிக் கிரகம் தான்.

பிரணவ நாதத்தின் ஒலியான "சங்க நாதம்":

பிரபஞ்சத்தின் சர்வத்தையும் உணரும் ஆற்றலைத் தன்னுள்ளே இறுக்கமாக மூடி மறைத்து வைத்துள்ள "பேச்சு" (Speech) அதன் மற்றொரு வாயிலான மனத்தின் (Mental Power) மூலம் அதன் ரகசியங்களை அறிவித்துக் கொள்ள நிரந்தர ஆர்வமுடையதாய் உள்ளது. அங்கே தான் இயற்கையின் அதி சூஷ்ம ஆற்றல் படைத்த சக்திகள் தேக வாழ்க்கையின் இடையில் ஒருங்கிணைந்து ஒற்றுமைப் படுகின்றது. எங்கு "ஆகாயம்," தானே ஒரு முடிவுக்கு வந்து விடுகின்றதோ, அங்கு தான் "பூமி" தன்னுடைய கூட்டல் சக்தியை அதனுடன் சேர்த்து இன்னும் அதிகமாக்கிக் கொள்கின்றது. யோகத்தில் பூமியும், ஆகாயமும் இரண்டும் ஒன்று சேர்ந்து, ஒன்று மற்றொன்றுக்கு விரோதமில்லாமல், எங்கே ஒன்று கூடுகின்றதோ, அங்கு தான் "பிரணவ நாதத்தின்" ஒலியான, "சங்க நாதம்" யோகத்தின் வெற்றியாக அத்தாட்சியிட்டு முழங்குகின்றது. இந்த கிரந்தம் எழுதத் தொடங்கிய ஆரம்ப நாட்களில் அமரகவி சித்தேஸ்வரருக்கு அந்த அற்புத நிகழ்ச்சி இறைவனின் பேரருளால் அனுக்கிரக்கப்பட்டது.

தோலின் ஏழு அடுக்குகள்

மனித உடலைப் போர்வையாகச் சூழ்ந்திருக்கும் "தோல்" அதன் சூட்சுமத்தில் ஏழு அடுக்குகளைக் (Seven Layers of the Skin) கொண்டதாக உள்ளது.

அதில் மேல்மட்டத்திலுள்ள தோலின் "முதல் நான்கு அடுக்குகள்" (The First Four Layers - Transient) தாய் கர்ப்பத்தின் மூலம் தோன்றி மறையும் தற்காலிக ஜீவித அமைப்பாக இருக்கின்றது. உடல் இயக்கத்தில் அது "மனோ விருத்தியாகவும்," அதன் உள் மட்டத்திலுள்ள "உள் மூன்று அடுக்குகள்" (The Inner Three Layers) பேரறிவின் பால் இயங்கும் மனமாகவும் இருக்கின்றன. அதன் ஸ்வீகரிப்பே மெய்ஞ்ஞான உணர்வுக்குரிய "ஞான தேகம்" மற்றும் "பிரணவ தேகத்திற்குரிய" சாஸ்வதத் தன்மையுடையதாக உள்ளது. தோல் பகுதி தான் ஜீவனின் மேனி ஆகும். அங்கு தான் ஜீவனின் "உணர்வு" (Awareness) குடிகொண்டுள்ளது.

அதுவே "பூத உணர்வு," தேக நினைவு, ஜட சரீரம் என அழைக்கப்படுகின்றது. ஜீவனுக்கே சொந்தமான ஆணவ மலம், அகங்காரம் ஆகியவையும் அங்கு தான் குடி கொண்டுள்ளன. இவ்வளவு சிறப்பு அம்சங்கள் யாவும் கொண்டதனால் பஞ்ச இந்திரியங்களில் தோல் மட்டுமே "மெய்" எனச் சிறப்புடன் அழைக்கப்படுகின்றது.

யோக சாதனையில் தோலின் மேல்மட்டமாகத் திகழும் இந்நான்கு அடுக்குகளைத் தாண்டிச் சென்றால், அதாவது இந்நான்கும் சரியச் சரிய, ஆத்மீக உணர்ச்சி எழும். அதன் ஆழத்தில் உள்ள சாஸ்வத நிலையை (Eternity of Existence) உணரலாம். அங்கு தான் ஜீவனின் மேனி "திரு மேனியாகி," தேவ கதியின் அற்புத நிலையை எல்லாம் பெறுகின்றது. யோகத்தின் உச்சியில் திருமேனி பெறும் போதுதான் "ஜீவன், ஒப்பற்ற சிவனாகும் ஈசுவர தத்துவத்தை" அடையும் பேறு பெறுகிறான்.

யோக சாதனையற்ற உடலின் போர்வையான தோலின் ஏழு அடுக்குகளால் (Seven Parchments - உணர்வு ஏழு படிகள்) பிராண நாசனம் ஏற்பட்டு உயிருக்கு நஷ்டத்தை ஏற்படுத்திக் கொண்டு உள்ளது. மனம் பொதுவாகத் தன் முன்னிலையில் சந்திக்குமிடமாகிய தோலின் ஏழு வகையான அடுக்குகளில் "உயிரை" எப்பொழுதும் பிடித்து வைத்துள்ளது. தோலின் இந்த ஏழு வகையான அடுக்குகளின் (உணர்வின் ஏழு படிகள்) கதவுகளை மானிடன் தொடும் போது, உணர்வு பூர்வமான, இயற்கையின் ஏணிப்படிகளில், மேலேறி முன்னேறிக் கொண்டே சென்று, தன்னைத் தானே புதுப்பித்துக் கொள்கின்றான்.

**வைகுண்ட லோகம் – உணர்வின் ஏழு படிகள்:**

இந்து மதத்தின் சிறப்பு அம்சமே, மிகப் பெரிய தத்துவ ரகசியத்தை ஒரு கதையின் வாயிலாகச் சாதாரணப் பாமர மக்களுக்கும் அதன் கருத்துக்கள் சென்றடையும்படிச் சுவைபட எடுத்துக்கூறுவதில் தான் அதன் பெருமை ஈடு இணையற்றதாக உள்ளது. அதே அடிப்படையில் தான் உணர்வின் ஏழு படிகளைப்பற்றிய தத்துவ உண்மையை நம் முன்னோர்கள், மிகவும் சுவாரசியமான முறையில் புராணக் கதைகளில் விளக்கிக் கூறியுள்ளார்கள். மகா விஷ்ணுவின் வாசஸ்தலமாகிய வைகுண்ட லோகத்தின் வாயில் கதவுகளைப்பற்றி வருணிக்கும் போது, அங்கு ஏழு கதவுகள் மற்றும் ஏழு நிலைகள் உடையதாகவும், பரமாத்மாவை தரிசனம் செய்யச் செல்லும்

மகான்கள், வைகுண்ட லோகத்தின் ஏழு வாயில் கதவுகளையும் ஒன்றன் பின் ஒன்றாகத் தாண்டிச்சென்று, முடிவில் இறைவனை தரிசிக்கும் பேறு பெறுகின்றார்கள், என்று கதையின் மூலம் சிறப்பாக எடுத்துக் கூறியுள்ளனர்.

இக்கதையின் பின்னணியில் உள்ள ஆழ்ந்த கருத்தையே, சுவாமி அமரகவி சித்தீஸ்வரர் விளக்குகிறார். நம்முடைய தேகத்தின் மேனியில் உள்ள ஏழு அடுக்குகளை, ஏழு வாயில்கள் என்று குறிப்பிடுக்கின்றார். மனிதனின் உணர்வு ஏழு படிகளைக் கொண்டது. அதில் முதல் நான்கு உணர்வின் படிகள் "மனோ விருத்தியின்" வசமாக உள்ளது. யோக சாதனையில் இதனைத் தாண்டிச்செல்லும் பொழுது, சீறி எழும் "குண்டலினி சக்தியின்" மூலம் தேர்ச்சி பெற்று, சாஸ்வத நிலையிலுள்ள உள் மூன்று உணர்வின் படிகளையும், ஒவ்வொன்றாகத் தாண்டிச்சென்று, முடிவில் "பரிபூர்ண அறிவாக உள்ள இறைவனை" உணர்ந்து கொள்ளலாம் என விளக்கிக் கூறியுள்ளார். மனிதனுக்குள்ளேயே அடங்கியிருக்கும் உணர்வின் ஏழு படிகளைத் தாண்டிச் சென்றால், "சித்தத்தின் சொரூபமாயிருக்கும் தெய்வத்தை" அறிந்து கொள்ளலாம். அதுவே "மெய் ஞானம்" மற்றும் தத்துவ ஞான போதமாகும். அதுவே சர்வ பிரபஞ்சத்திற்கும் ஆத்மப் பிரகாசமாகத் திகழும் ஆதியும், அந்தமும், (முதலும், முடிவும்) குடி கொண்டுள்ள திவ்விய மங்கள நிலை ஆகும்.

அறிவின் வெளிச்சம்:

இந்த வழி முறைகளின் அடிப்படையில் தான் பண்டைய வேத, உபநிஷத் காலங்களில் வாழ்ந்த அதிமானுஷர்கள் யோகத்தின், பல படிகளில் மேலேறிச் சென்றுள்ளார்கள். கால கதியில் சுழன்று கொண்டேயிருக்கும் இயற்கை எப்பொழுதும் தீர்ந்து போய் விடுவதில்லை. மனிதன் பரிணாம வளர்ச்சியின் அடிப்படையில் வளர்ந்து செல்லச் செல்ல அதற்குத் தகுந்தாற்போல் ஒவ்வொரு யுகமாகிய காலகட்டத்திற்கும் ஏற்றவாறு தன்னை புதுப்புதுப் புதுமையான வழிகளில் மாற்றிக் கொள்கின்றது. அதே போன்று தான் இந்த நவீன கால கட்டமாகிய கலியுகத்தில் இந்த கிரந்தம் அதன் புதிய வரம்புகளை யோகத்தில் ஆராய்ந்து கூறுகிறது. தற்கால உலக சமுதாயத்தில் சீரழிந்து கொண்டே சென்று கொண்டிருக்கும் மனித வாழ்க்கையானது வெகு சீக்கிரத்தில் தன் சுய நிலையை மீண்டும் அறிவின் வெளிச்சத்தின் மூலம் வருங்காலத்தில் நிச்சயம் மாற்றிக் கொள்ளும்.

## புதிய யுகத்தின் விடி வெள்ளி:

தனக்குள்ளேயே தோன்றும் உத்வேகத்தை வைத்துக் கொண்டு தான் மனிதன் தன்னைத் தானே சுய ஆராய்ச்சி (ஆத்ம பரிசோதனை) செய்து அறிந்துகொள்ள வேண்டும். அப்படிப்பட்ட உணர்ச்சி பெற்ற அதன் வேகத்திலேயே மனிதன் முன்னேறிச் செல்லும் போது தான் புதிய யுகத்திற்கான விடி வெள்ளி அவனுள் உதயமாகின்றது. கலியுகம் தன்னுடைய ஒளியைப் பரப்பி அதனுடைய அடுத்த காலமாகிய யுகங்களிலேயே சிறந்த யுகமாகக் கருதப்படும் "கிருத யுகத்தை" நோக்கி முன்னேறிச் செல்கின்ற தருணத்தை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டுள்ளது. மனிதன் அங்கு அவனுக்குள்ளேயே "தெய்வீக நிலையை" தொடுகின்றான். யோகத்தின் முழுப் பயனடையும் குறிக்கோள், அந்த நிலையில் வெள்ளி கிரகத்தின் (Planet Venus) பிரகாச நிலையே ஆகும். வியாழன் கிரகம் தான் அந்த விடி வெள்ளியின் ஒளிவிளக்கைத் தன் பிடியில் தக்க வைத்துக் கொண்டுள்ளது. மற்றும் சனிக் கிரகம் உயிர் வாழ்க்கையின் இலட்சியத்தைப் பூர்த்தி செய்யும் அனுக் கிரகமாக உள்ளது.

## யோக நித்திரையில் நீடுழி வாழ்வு:

மரணத்தை "மீளாத் துயிலில் ஆழ்ந்தார்கள்" என அழைப்பார்கள். ஆகவே மரணமும் தூக்கமும் உண்மையில் ஒன்று தான். ஜீவனின் காட நித்திரை, மறதியின் நிழல் என்பது அதுவே. எனவே தூக்கத்தைத் தாண்டுவதற்கு சனி கிரகத்தின் அருள் வேண்டும். அதனைத் தாண்டியவுடன் அடுத்துக் கனவுலகம். பூரண நினைவுடன் கனவு நிலையில் நிலைத்திருப்பது "யோக நித்திரை" எனப்படும். சகலத்தையும் அறிந்துணரும் ஆற்றல் படைத்த "யோக நித்திரையில் நீடுழி வாழ்வு" வாழ "வியாழன் கிரகத்தின்" அருள் வேண்டும். இதுவே அமரகவி சித்தேஸ்வரர் மக்களனைவருக்கும் உணர்த்தும் கருத்தாகும்.

"எண்ணம்" மற்றும் "பேச்சு" ஆகிய இவ்விரண்டு இரட்டையர்களின் ஆதிக்கத்தில் சிக்கிக் கொண்டுள்ள மனிதன் தானே, "ஆகாயத்தின்" வடிவில் தான் உள்ளான். அவன் யோக சாதனையின் மூலம் உயிர் பிழைத்திருந்தால், வாழ்க்கையின் அனைத்து ரகசியங்களையும் இயற்கை அவனுக்கு வெளிப்படுகின்றது. பண்டைய கால பாரத தேசம் வாழ்க்கையின் பாடங்களை

யெல்லாம் அந்த வகையில் தான் தெளிவாக அறிந்து கொண்டது. ஆகாயத்தை விட அங்கு பூமி தான் எல்லாவற்றின் காரணத்தையும் அறிய சேவை செய்துள்ளது. அமரகவி அதனைத் திறந்த மனத்தின் மூலம் விரிவாக எடுத்து விளக்கிக் கூறுகின்றார்.

அப்பு தத்துவம் – மனிதனின் உயிர் நிலை:

"பிரபஞ்சத்திற்கும், மனிதனாகப் பிறந்துள்ள உனக்கும், இடையே உள்ள "உயிர் வாழ்க்கையைப் பற்றி ஒரு மதிப்புரை" அல்லது உன் கருத்து என்ன?" (Review of Life betwixt Yourself and Cosmos) என்று அனைவரையும் "சுய சிந்தனை" செய்யுமாறு அழைப்பு விடுக்கின்றார்.

உடல் ஸ்தம்பனத்தின் அடிப்படையாகவுள்ள "பிருத்வி பூதமாக," ஆகர்ஷண பூதாகாசத்தில் வைத்து அடக்கியாளப்படுகின்றது. உயிர் வாழ்க்கையில் உடலின் இயக்கமெல்லாம் "பேச்சு" செல்லும் வழியில் தான் அடங்கியுள்ளது. பேச்சை உச்சிக்குத் தூக்கிக் கொண்டு செல்வது தான் "அப்பு தத்துவம்," மனிதனின் உயிர் நிலை எனப்படும். இதுவே தான் "அகம்" அல்லது ஆத்மன் என அழைக்கப்படுகின்றது.

ஆகவே "பேச்சு" தான் இப்பிரபஞ்சத்தினுடைய சக்தி வாய்ந்த உயிரோட்டமாகும். அம்பாள் உபாசனையாளர்கள் "சக்தி பீஜம்" எனவும் இதனை அழைப்பார்கள். மற்ற எந்த ஜீவ ராசிகளிடமும் இல்லாத ஒரு தனிச் சிறப்பு மனிதனிடம் மட்டுமே காணப்படும் "பேச்சை" வைத்துத் தான், ஆன்மீக "தெய்வீக வாழ்வுக்குரிய" வழிமுறைகளை ஒழுங்கு படுத்திக் கொள்ள முடியும். இந்த இரண்டு சுற்றுப் பாதைகளின் மூலமாகத் தான் உயிரைச் சமன்படுத்தி வைக்கிறது அல்லது வேறு வழிகளில் திசை திருப்பி விடுகிறது. அல்லது இரண்டில் ஏதோ ஒரு வழியில் சிக்க வைக்கின்றது. மரணத்துடன் உறவாடும் மனிதனின் ஜீவித வாழ்க்கையின் சட்ட விதிகள் யாவும் இவ்வாறு தான் வரையறைக்கப்பட்டுள்ளது.

ஆகாயம் திறவு கோல்:

இப்பொழுது நாம் பிரபஞ்சத்தின் அண்ட வெளியில் "உயிர் வாழ்க்கையின் நோக்கம்" என்னவென்று விரிவாகப் பார்க்கலாம். தற்காலத்தில் மனிதன் வான வெளியில் ஆராய்ச்சிகளை மேற்கொள்ளப் பல வகையில் முயற்சிகளைத் தீவிரமாகச் செய்து வருகின்றான். எல்லையில்லாமல்

எங்கும் பரந்து விரிந்துள்ள பிரபஞ்சத்தின் வான் வெளியினை "ஆகாசம்" தான் ஆட்சி செலுத்துகின்றது. அதுவே தன்னுடைய பூதாகாசத்தின் வழிமுறையில் உயிரை இயற்கையுடன் சக்தி வாய்ந்த ஆற்றலின் மேல் நடத்திச் செல்கின்றது. ஆகாயம் தன்னுடைய இரட்டை நண்பர்களான "அக்னி" மற்றும் "வாயு" இவற்றின் துணை கொண்டு உயிர் வாழ்க்கைக்குக் காரணமாய் விளங்குகின்றது. இவ்விரண்டில் ஸ்தூல தேகத்திற்கு உட்பட்டுள்ள சகல ஜீவன்களிலும் "அக்னி" தான் மிகவும் சக்தி வாய்ந்தது. "வாயு" தான் மானிடனின் ஸ்தூலத்தில் உண்டாகும் சிறு துயிலின் தடை. யோகம் மூலம்தான் "அக்னியை" எண்ணத்திலிருந்து கிளர்ந்து எழச் செய்து உயிரின் ஓட்டத்துடன் செயல்பட்டுக் கொண்டிருக்கும் "வாயுவை," "கும்பகம்" மூலம் அடக்கி, அதன் சவால்களை எல்லாம் எதிர் கொள்ள வேண்டும். ஒவ்வொரு சகாப்தத்திலும் யோகத்தின் மகத்தான கலை அதுவேயாகும்.

"அக்னி" மற்றும் "வாயு" ஆகிய இவ்விரண்டு இரட்டையர்களின் காரணத்தினால் தான் வான்வெளியில் அடங்கிக் கிடக்கின்ற அனைத்து ஜட தேகத்தின் அசையும் தன்மையே உண்டாகின்றது. அதுவே பூவுலகில் காணப்படும் அனைத்து உடல் வாழ்வுக்கும் தன்னுடைய சக்தியினால் தடையை உண்டாக்குகின்றது. அனைத்துப் படைப்புகளில் "வளர்ச்சி" மற்றும் "அழிவு" ஆகிய அனைத்தும் அதன் அனுகூலத்தின் கீழ் தான் செயல்படுகின்றது. மனம் பரிணாம வளர்ச்சி பெற்று உயிர் ஆற்றலின் சக்தியைப் பிடிக்கும் சமயம் இயற்கையில் நன்மையளிக்கும் பகுதியில் சேமித்து வைக்கப்பட்டுள்ளன. அதனுடைய அற்புத சக்திகள் யாவும் சாதகனுக்கு அளிக்கப்படுகின்றன. ஒவ்வொரு மனித சகாப்தத்தில் "உயிரின்" அற்புத சக்திகள் யோகத்தின் கலையினால் மீண்டும் கண்டுபிடிக்கப்படுகின்றது.

### சப்தம் – ஜடப் பொருள்களின்உற்பத்தி: (Sound Generates Matter)

சப்தம் என்பது காணக் கூடிய எழுத்து வடிவிலும், மறைபொருளாக ஒலி வடிவிலும் ஆக இரண்டு வகையிலும் உள்ளது. மனிதர்களிடம் சப்தம் அவன் பேசும் மொழியின் மூலம் அவன் உணர்வுகளைப் புரிந்து கொள்ளும்படியாகவும் அமைந்துள்ளது. "சப்தம்" (Sound) பிரபஞ்சத்திலுள்ள அனைத்து ஜடப் பொருள்களின் உற்பத்தி, மற்றும் அதன் அசைவு, இயக்கம் ஆகியவற்றிற்கு காரணமாக இருப்பதுமல்லாமல், அதே சமயம் உயிருக்குச் சப்தம்

எதிரிடையாகவும் உள்ளது. இந்த கொள்கை தான் இந்தப் புத்தகத்தில் "பேச்சின் மர்மம்" (The Mystery of Speech) நிறைந்த தன்மைகள் யாவும் மிகவும் விரிவான அளவில் நன்கு அலசப்பட்டுள்ளது. ஒவ்வொரு ஜீவராசியான உயிரினத் தொடக்கம் முதல், அதன் கடைசிக் கட்டப் பரிணாம வளர்ச்சியின் முடிவிலுள்ள மனித இனம் வரைக்கும், (Cosmic Evolution) அவைகளின் படைப்பின் நோக்கம், வளர்ச்சி ஆகிய அனைத்து சுவாரசியமான விஷயங்களும் ஆராய்ந்து சொல்லப் பட்டுள்ளன. "உயிர்" மூலம் "பேச்சு" முன்னேறி வளர வளர, அதன் வீழ்ச்சி, "எண்ணத்தின்" மூலமாக உள்ளது. பிரம்ம விசாரம் வாயிலாக அவை அனைத்தும் தன் புத்திக் கூர்மையின் வலிமையால் மனிதன் கிரகித்து ஏற்றுக் கொள்ள வேண்டும்.

மனித தேகத்தை ஆழ்ந்து ஆராய்ச்சி செய்யும் மானிட இயல் அறிஞர்கள், (Anthropologist) இந்தக் கருத்தை மனத்தில் நன்கு புரிந்து கொண்டு, அதன் அடிப்படையில் ஆய்வுகளை மேற்கொள்ள, சர்வதேச நாடுகளின் உலக அமைப்பின் தலைமையகமாகக் கொண்டு செயல்படும் யுனஸ்கோ நிறுவனம் அதற்கு தகுந்த உதவிகள் அளித்து, அறிஞர் பெருமக்களை உருவாக்க வேண்டும் எனறு அமரகவி சித்தேஸ்வரர் தன் நூல் மூலம் அழைப்பு விடுக்கின்றரர்.

நாமனைவரும் ஸ்தூல வடிவில் உணரக்கூடிய காற்று சூட்சுமத்தில் அதன் சக்தி ஸ்தூலத்தையும் மித மிஞ்சிய வலிமை மிக்க ஆற்றலாக உள்ளதை விஞ்ஞானம் இன்னும் ஆராய்ந்து கண்டுபிடிக்கவில்லை. சூட்சுமத்தில் உள்ள அதுவே, "வாயு" என்றழைக்கப்படுகின்றது. காற்றிற்கு ஏழு வடிவங்கள் உண்டு. அங்குதான் மனிதன் மரணத்துக்குப் பின் வான் வெளியில் உயிர் வாழ்வது மட்டுமல்லாது, அதோடு பூமியில் அவன் ஸ்தூல தேகத்திலும், வாயுவின் தயவால் உயிர் வாழ்ந்து கொண்டிருப்பது தான் மிகவும் கடினமான பிரச்சனையாகும்.

விண்வெளி வீரர்களின் சுவாசப் பயிற்சி:

விண்வெளியில் பயணம் புரியும் போது விண்வெளிக் கப்பல் காற்றினிடையே புகுந்து செல்லும் போது இதுவரை கண்டிராத புதிய அனுபவ நிலையினைத் தொடும் போது விண்வெளி வீரர்கள் சுவாசித்தலின் மேல் ஒரு ஆபத்தான மாற்றத்தைச் சந்திக்க வேண்டியுள்ளது. இயற்கையின் கட்டுக்

கோப்பான அதன் விதிமுறைகளை அதற்கு விரோதமாக மீறிச் செல்லும் போது, அறிவியல் இயந்திரங்களினால் செயல்படும் பலவிதமான புறக் கருவிகள் தாம் விண்வெளி வீரர்களுக்கு உதவி புரிகின்றது.

நடு வானத்தில் இவ்வாறு ஸ்தூலம் திடீரெனத் தலைகீழாக மாற்றமடையும் போது, அதன் விளைவுகள் சூட்சும சரீரத்தைத் தாக்கி பாதிப்புகளை உண்டாக்கி அதன் விளைவுகளால் விண்வெளி வீரர்களின் மனோநிலை மிகவும் ஆபத்தான நிலைமைக்குள்ளாகி கஷ்டத்தை உண்டாக்குகின்றது. விண்வெளி ஆராய்ச்சியை மேற் கொள்ள வேண்டும் என்கின்ற அடங்காத ஆவல் உள்ள வரை மனிதன், இயற்கையின் இந்த திகில் ஏற்படுத்தும் அனுபவத்திலிருந்து தப்பித்துக் கொள்ள அல்லது தன்னைக் காப்பாற்றிக் கொள்ள விண்வெளி வீரர்களுக்கு சுவாசத்தின் பயிற்சி முறைகளான “பிராணாயாமம்” அல்லது மூச்சுக் கட்டுப்பாடு ஆகிய உத்திகளைப் பற்றி விண்வெளிப் பயணத்திற்கு முன்பே தீவிரமாகக் கற்றுக் கொடுக்கப்படுகின்றது. அதற்கெல்லாம் ஆரம்ப இடத்திலுள்ள யோகம் தான் எல்லா அடிப்படைப் பாடம் கற்றுக் கொடுக்கும் பயிற்சி மூலம் பள்ளிகளுக்கு தன்னுடைய முதல் சேவையை துவக்கி வைக்கின்றது.

பிராணாயாமம்:

நாசிகளின் வாயிலாக நடைபெறும் மூச்சு அதன் இரண்டு பாதைகளின் மூலம் சுவாசத்தை நடத்தி ஜீவனை ஸ்தூல உடலில் உயிர் வாழச் செய்கின்றது. “பிராணாயாமம்” என்பது நாசிகளின் இரண்டு துவாரங்களில் சமச் சீராக இல்லாமலிருக்கும், வெட்டுண்ட சுவாசத்தை (Intermittent Breathing) ஒழுங்குபடுத்தி, “சீரான மூச்சு” மூலம் (Stable Breathing) உயிர் வாழ்வதேயாகும். காற்று, “ஆகாயம்” அல்லது “பூதா காசத்தை” (Ether) மூச்சின் ஓட்டத்தின் இடையில் பிடித்து வைத்துள்ளது. இதனையே யோகத்தின் மூலம் தப்பி வெளியே ஓடும் மூச்சைத் தப்ப விடாமல் உள்ளுக்குள்ளேயே பிடித்துத் தடை செய்தால், கும்பகத்திற்கு இடையே உயிரை அசையச் செய்யலாம்.

இந்த விளையாட்டில் மூச்சு அங்கு இரண்டு வழிகளில் பாதுகாக்கப்படுகின்றது.

1. ஒன்று "மூச்சு" முறையாகக் கட்டுபடுத்தப்பட்டு ஒழுங்கு படுத்தப்படுகின்றது.
2. "உயிர்" தொடர்ந்து அதன் சீரான, தடையில்லாத ஓட்டத்தை பெறத் தூண்டுகிறது.

பிரத்தியாஹாரம்

உண்மையில் இந்த இரண்டாவது கட்டம் தான் யோகத்தில் "பிரத்தியாகாரம்" என்றழைக்கப்படுகின்றது. ஆனால் விண்வெளி வீரர்களுக்கு அளிக்கப்படும் மூச்சுப் பயிற்சியானது முதல் ரகத்தையே சாரும். ஆகாயம் ஏற்கனவே தன்னாட்சியின் கீழ் செயல்பட்டு வரும் மனிதனை, தன் மூச்சுப் பயிற்சி திட்ட வழி முறைகளில் நெறி படுத்தியுள்ளவனை, மீண்டும் அதனையே வானத்தில் விண்வெளி வீரர்கள் புகுத்த முயலும் புதிய உயிர் வாழ்க்கையின் சட்ட திட்டங்களைக் கொண்டு தன்னுடன் நேருக்கு நேர் மோதுவதை அனுமதிப்பதில்லை.

மனிதகுல மேம்பாட்டின் அக்கறையும் நல்லெண்ணமும்:

"யோகம்" என்பது உண்மையில் தன்னுள் ஒரு விஞ்ஞான பூர்வமான அறிவியல் கலை தான். ஆயினும் தற்காலத்தில் பூலோகத்தில் மனிதர்களாக வாழ்பவர்களுக்கு ஒரு குறிப்பிட்ட வரைமுறையின் அளவுகளுக்குள் தான் யோகம் தன்னை வெளிப்படுத்திக் கொள்கின்றது. இயற்கை "ஆக்ஸிஜன்" என்கின்ற பிராண வாயுவை நமக்களித்து இப்பூலோகத்தில் உயிர் வாழ ஏற்பாடுகளைச் செய்திருந்தாலும், "நைடிரஜன்" என்கின்ற வாயுவின் பங்கையும் அதில் சமமாகக் கலந்து வைத்திருப்பதால் அது தரக் குறைவினை (மாசுபடுத்தப்பட்டுள்ள நிலையை – Pollution) ஏற்படுத்தியுள்ளது. "ஆக்ஸிஜன் மற்றும் நைடிரஜன்" இவை இரண்டும் என்றுமே இணை பிரியாத திருமண உறவைக் கொண்டிருப்பதால், உலகனைத்துமுள்ள ஜீவராசிகளின் உயிர் வாழ்க்கையில், இவற்றின் பாதிப்பு என்பது இயற்கையிலிருந்து நிறுத்த இயலாது. ஜீவித வாழ்க்கை முழுவதும் சுவாசத்தின் சுழலின் மேலுள்ள உயிர் வாழ்க்கையின் நல்லெண்ணம் பற்றிய அக்கறை நமக்கிருந்தால் "யோகம்" மீண்டும் தன்னுடைய உரிமையை அங்கு நிரூபித்துக் கொள்ள உதவுகின்றது. ஆகாயத்தைத் தன் வசப்படுத்தி அடக்கி விட்டதாக பெருமையைப் பறைசாற்றிக் கொள்ளும் விண்வெளி வீரர்களுக்கு உண்மையில்

அனைத்து மனித குல மேம்பாட்டின் சமூக வளர்ச்சியில் அக்கறையும் நல்லெண்ணமும் இருக்குமா?

விஞ்ஞானம் மிதமிஞ்சிப் போனால் தனி மனிதர்களின் வாழ்க்கைத் தரம், கேளிக்கை, சொகுசான வாழ்க்கை, ஆடம்பர வசதிகள் நிறைந்த சௌகரியமான வாழ்க்கை, ஆகியவற்றில் நாளுக்கு நாள் புதுமையான கண்டு பிடிப்புகளால் மேம்படுத்திக் கொள்ளத்தான் பயன்பட முடியும் என்பதை உறுதியாக நம்பலாம். (Science could at best improve our living standards on earth.)

ஆன்மிக வாழ்க்கையின் இலட்சியம்:

மனிதன் தன் வாழ்க்கையில் இந்த இரண்டு அம்சத்தின் அடிப்படையில் சுயமாகச் சிந்தித்து முன்னேற்றம் காண வேண்டும்.

1. அவனே தன் சுய முயற்சியால், இயற்கையைப்பற்றி அறிந்து கொள்ளும் நல்லெண்ணம் கொண்டவனாகவும், (Good will and Harmony of Life) அதே நேரத்தில் தன் வாழ்க்கையில் உள்ள அனைத்தையும் ஒற்றுமைப்படுத்தி கொள்ள (Unity in Diversity) ஆர்வமுடையவனாகவும் இருக்க வேண்டும்.

2. அதுமட்டுமல்லாமல் தன் வருங்காலத்தில் வரும் சந்ததியினருக்கு அவன் வாழ்ந்த வாழ்க்கையின் இலட்சியங்களை எடுத்துக் காட்டும் வகையிலும், (He should be a living example for all humanity in its next) அமைத்துக் கொள்ள வேண்டும். ஆன்மீக வாழ்க்கையை எப்படி வாழ வேண்டும் என்கின்ற சிறந்த உதாரணத்துடன், எடுத்துக் காட்டாகவும் விளங்கவேண்டும்.

நமக்கு முற்காலத்தில் வாழ்ந்த ஆன்மிகப் பெரியோர்களாகிய **12 ஆழ்வார்கள், 63 நாயன்மார்கள், 18 சித்தர்கள்** மற்றும் எண்ணற்ற இறைவனின் மெய்யடியார்களின் பூலோக வாழ்க்கை வரலாற்றை படித்துச் சிந்தனை செய்தோமேயானால், அதற்குத் தகுந்த விடையை நாம் எளிதில் காணலாம். **அமரகவி சித்தேஸ்வரர்** தன் எளிமையான சேவையை இப்புத்தகத்தின் மூலம், உலகத்தின் அனைத்து தரப்பின் மக்கள் படித்து ஆன்மீக பாதையில் முன்னேறி மேன்மையடைய வேண்டும், என்கின்ற அடிப்படையில் இறைவனை அருள் புரியும்படி அடக்கத்துடன் வேண்டிக் கேட்டுக் கொள்கின்றார்.

நாதோபாசனை சித்தி:

தொன்று தொட்டு வந்த உலகின் மிகப் பழமையான இந்து மதக் கலாச்சாரத்தில் இந்தப் புனிதக் கொள்கைகள் யாவும் "நாதோபாசனை சித்தியின்" மேல் அளிக்கப்பட்ட பெருமையாகும். நம்முடைய ஸ்தூல உடலின் உள்ளே அதன் வெகு ஆழத்தில், அடி மட்டத்தில் அடங்கிக் கிடக்கும் உயிர் சக்தியிலிருந்து தோன்றும் உடல் சலனத்தின் மேல் அலைகள் என்றும் உள் அடங்காமல் விலகியே செல்லும் இயல்புடைய அதன் மீட்பிலிருந்து தான், மெல்லிய பூவிதழ் போன்ற பேச்சின் ஆற்றலின் மூலம் பெறப்பட்டதே "நாதோபாசனை சித்தியாகும்." உடலின் சலனத்தினால் பேச்சு அங்கு துயரத்தின் வசப்பட்டுள்ளது. அதன் உள் ஆழத்தில் இரண்டு திசைகளின் மேல் ஒரு தலைப் பட்சமான சேவை புரிய அங்கு பேச்சு கட்டாயமாக்கப்பட்டுள்ளது.

பேச்சின் இரண்டு நிலைகள்:

1. தேக இயக்கத்தினால் அதன் மேல் உண்டாகும் புலன்களின் ஆட்டத்தினால் எண்ண அலைகளின் மூலம் ஓய்வு இல்லாமல் சலனமடையும் பேச்சு.

2. உயிரின் சூட்சும சக்தியின் வலிமையான ஆற்றல் மூலம் "பேச்சு" அதன் வெளி மட்டமாகத் திகழும் நாவில், சப்த அலைகளை (EBB) உண்டாக்குகின்றது.

வாக் மௌனம்:

உடலின் வெகு ஆழத்தில் இயற்கையானது சூட்சும சக்தியை ஓய்வு கொள்ளச் செய்துள்ளது. உடலானது இயற்கையின் அந்த சூட்சும சக்தியின் கயிற்றைப் பலமாகப் பிடித்துக் கொண்டே முன்னேறுகின்றது. அமரகவி வெகு சூஷ்மமான பிரக்ருதியை ஆத்ம விசாரணை செய்து, உடலின் சலனத்தைத் தன்னுடைய யோக சாதனையின் மூலம் தாண்டிச் சென்றுள்ளார். அது உயிரின் ஆற்றலின் மேலுள்ள புத்தி சாதுர்யத்தின் மேல் பெறப்பட்ட அறிவே ஆகும். அது தான் சுவாமி அமரகவியின் "அஜபா சித்தியாகும்." அங்கு தான் சுவாசத்தின் இரண்டு நாடிகளான "இடா நாடி, பிங்களை நாடி உயிரில் பூர்த்தி பெற்று," அந்நிலையில் தான் "வாக் மௌனத்தின்" மூலம் முடிவு பெறுகின்றது.

யோகத்தின் மௌனம்:

மனிதனின் சுவாசத்தின் வாயிலாக நடைபெறும் "உள் மூச்சு, வெளி மூச்சு," ஆகிய இவ்விரண்டு மூச்சும் ஒரே மாதிரியாகத்தான் நாசியின் மேல் நிகழ்கின்றது. நாக்கில் சொல்லின் அலைகள் ஒரே மாதிரியாக இணைந்து செயல்படுவது போல் அல்லாமல் பேச்சுடன் அந்த ("இடா, பிங்களை") இணைப்பு காணாமல் போய் உள்ளது. "யோகம்" அங்கு தான் ஊனமுற்றுக் குறைபாடுகளை உடையதாக உள்ளது. இந்தக் குறை எப்படி நிவர்த்தியாகும் என்றால், எப்பொழுது உயிரானது பேச்சுடன் மேலெழுந்து எண்ணத்தை ஆதரிக்கின்றதோ, அப்பொழுது தான் யோகத்தின் ஊனம் சரி செய்யப்படுகிறது.

யார் உண்மையிலே சித்த புருஷன்?

வாழ்க்கையின் மிக முக்கிய சாராம்சம் பேச்சு தான். தேகத்தின் ஆகர்ஷண சக்தியானது அனு தினமும் சுழல் போல் பகல், இரவு, இரண்டுக்குமிடைப்பட்ட நிலை ஆகிய "மூன்று நிலைகளில்" (விழிப்பு நிலை, கனவுநிலை, உறக்க நிலை – The Three Modulations) மாறி மாறிச், சுழன்று அந்த வட்டத்தை என்றும் தாண்டிச் செல்ல முடியாதபடி ஒரு வலிமையான அரண் அமைந்துள்ளது. இந்த அகிலத்தில் வாழும் எல்லா மனிதர்களும் இந்த மூன்று நிலைகளின் ஆதிக்கத்துக்கு நிரந்தரமாக அவன் ஜீவித வாழ் நாள் முழுவதும் உட்பட்டு, அடங்கிச் செல்லும் அளவுக்குக் கட்டுப்படுத்தி வைத்துள்ளது. எனவே யோகத்தின் முக்கியமான குறிக்கோள் பகல், இரவு, (விழிப்பு நிலை மற்றும் உறக்க நிலை) ஆகிய இவ்விரண்டு நிலைகளையும், சாதகன் தன்னுடைய தீவிர சாதனையின் மூலம் தாண்டிச் செல்வதேயாகும். இக்கடினமான முயற்சியில் சாதகன் நிலைத்து வெற்றி பெற்று விட்டால் அவன் உண்மையிலே ஒரு "சித்த புருஷன்" அல்லது "ஜீவன் முக்தி பெற்ற யோகியாவான்."

"எண்ணம்" மற்றும் "பேச்சு" இவற்றின் செயல் முறை:

இப்பொழுது நாம் "எண்ணம்" மற்றும் "பேச்சு" (Thought and Speech) இவற்றின் செயல் முறைகளைப் பற்றிச் சிறிது ஆராய்வோம். மூக்கு (சுவாசம்) எண்ணத்திற்கு விரோதமாகவே செயல்புரிந்து கொண்டே, அதே சமயத்தில் "பேச்சு" நடைபெறுவதற்கும் உதவி புரிகின்றது. பேச்சு எப்பொழுதும்

அதற்கு எதிரிடையாகவே பற்றிக் கொண்டுள்ளது. நம்முடைய நாக்கில் சுழலும் "சொல்லின்" அதி சூட்சும ஒலி அலைகளின் மேல் தான் இயற்கையின் நன்மையளிக்கும் அற்புத ஆற்றல்கள் அனைத்தும் அடங்கியுள்ளன. மூக்கு (சுவாசம்) அதற்குத் தீமை புரியும் படியாகவே உள்ளது. மேலும் இவ்விரண்டுக்கும் எப்பொழுதும் தடுக்கும் தொடர்பு உள்ளதாகவும் உள்ளது. (Check-mate and Live-wire contact)

"யோகம்" அதனுடைய குறியீட்டின் அளவுகளில் தான் புனிதமான தெய்வீகக் குரலை அவனுள் ஒலிக்கச் செய்கின்றது. இந்துமதப் பக்தி மார்க்கத்தின் உபாசனை முறையில் இதுவே "ஷட் சக்கர சித்தி" எனப்படும். மானிட வாழ்க்கையின் "ஜீவ லக்ஷணமாக" திகழும் இரண்டு நாடிகளான "இடா நாடி, மற்றும் பிங்களை நாடி" (2 Main Streams of Life) ஆகிய இவற்றின் செயல் முறையைப்பற்றி அமரகவி சித்தேஸ்வரர் விளக்கிக் கூறியுள்ளதை இனி நாம் காண்போம்.

இடா நாடி, மற்றும் பிங்களை நாடி:

நம்முடைய தூல தேக வாழ்க்கையில் உடலின் சலனத்தின் மூலம் நிரந்தரமாக மாறி, மாறி விடாமல் சுழன்று கொண்டேயிருக்கும் அந்த "மூன்று நிலைகளை" (விழிப்பு நிலை, உறக்க நிலை, இரண்டும் இடைப்பட்ட கனவு நிலை) "இடா கலை" தான் ஆதரிக்கின்றது. அந்த "மூன்று நிலைகள்" தான் வேதம் உபநிஷத்துகளில் ஜாக்கிரதம், (விழிப்பு) சுவப்னம் (கனவு) சுஷுப்தி (தூக்கம்) என்றழைக்கப்படுகின்றது.

ஜாக்ரதம், சுவப்னம், சுஷுப்தி ஆகிய இந்த "மூன்று நிலைகளையும்" உடல் சலனத்தின் மூலம் "இடா கலை" தான் செயல்படுத்துகிறது. இங்கு தான் மனிதன் வானத்தின் வலிமையான ஆதிக்கத்தால் தொலைந்து போய் உள்ளான் அல்லது ஆகாயத்தின் தன்னாட்சியின் இறுகிய பிடிக்குள் மீள முடியாமல் சிக்கிக் கொண்டுள்ளான். சுவாசத்தின் மற்றொரு நாடியான "பிங்களை நாடி" தான் சாதகனுக்கு மீண்டும் வானத்தில் சுயாட்சி புரியும் உத்தியை அளிக்கின்றது. உயிரின் வெற்றியை உடலில் காணும் யோகத்தின் அற்புத கலையை "பிங்களை" தான் அளிக்கின்றது. உயிரானது "கேவல கும்பகம்" என்றழைக்கப்படும் அந்த நன்மையளிக்கும் நிலையின் மூலம் தன்னை புதுப்பித்துக் கொள்கின்றது.

கேவல கும்பகம் என்பது சம அங்குல நீளமுடைய இரட்டை சுவாசமாகும் இடா, பிங்களை ஆகிய இரண்டு நாடியும் சமன்வயப்பட்ட நிலையாகும். "பிங்களை, கேவல கும்பகம்" ஆகிய இரண்டின் பூர்த்தி தான் "சுழு முனை" அல்லது "வாக் சித்தி" எனப்படுகிறது. மரணம் மீண்டும் மீண்டும், மனிதனை, தன் பலி பீடத்தில் நிறுத்தி அவனை நிரந்தரமாக வெற்றி கொண்டுள்ள அந்த துன்ப நிலையை தவிர்த்துச் செல்லக்கூடிய அறிவைப் பெற்றுள்ள மாபெரும் ஞானிகளால் தான், உண்மை நிலையை உணர்ந்து, மேன்மேலும், அதில் ஆத்ம திருப்தியைப் பெற்றுக் கொள்ள முடிகிறது. ஒரு மாபெரும் ஆன்மீக உண்மை கிடைக்கற்கரிய ஓர் அபூர்வமான எண்ணத்தின் மேல் நிலையின் மூலம், "ஏகோபித்த மனம்," "திட சித்தம்" வாயிலாக (A rare dimension of Thought is high lighted) இந்தப் புத்தகத்தில் அறிஞர் பெருமக்களைக் கொண்டுள்ள உலக மகா சபையின் முன் சூட்சுமத்தின் அர்த்தம் பற்றிய விளக்கம், இதுவரையில் புரிந்து கொள்ளவே மிகவும் கடினமாக இருந்த விஷயம், மிகவும் சரியான முறையில் ஆராய்ந்து சொல்லப்பட்டுள்ளது.

**இயற்கையின் வியப்பான அதிசய உண்மை:**

மனத்தின் சிந்தனைக்கு மூல உற்பத்தி ஸ்தானமாக உள்ளது "எண்ணம்." எண்ணத்தின் அடித்தளத்தில் வெகு ஆழத்தில் ஊடுருவியுள்ள "பேச்சு" அங்கு தான் ஓய்வு (Repose) பெற்று அடங்கியுள்ளது. மனித வாழ்வின் அடிப்படையான எண்ணம் சலனத்தின் மூலம் பூரண அறிவாக அங்கு உள்ளது. இயற்கையானது "பேச்சில்" மட்டும் மௌனமாய் இருக்கின்ற கபட நாடகத்தை, இந்த வியப்பான அதிசய உண்மையை, அமரகவி தன் சுய "ஆத்ம விசாரணையின்" மூலம் கண்டு பிடித்துள்ளார் (Amarakavi discovered the base of Human Life.) உண்மையில் மனித வாழ்வின் மேம்பாட்டுக்கும், ஆத்ம சாதனைக்கும், புரியாத புதிர்களுக்கும், விடை காண வேண்டிய விஷயம் எது? எது நம்மால் மிக முக்கியமாக புரிந்து கொள்ளக்கூடிய விஷயமாக இருக்க வேண்டுமோ, அந்த விஷயத்தில் மட்டும் இயற்கை மௌனம் சாதித்து, அமைதியாய் இருக்கின்ற அந்த உண்மையை அமரகவி சித்தேஸ்வரர், "ஸ்ரீ வித்தையின்" ஒப்பற்ற "சோடச கலையின்" மூலம் "மூல கணபதியின்" திருவருளால் கண்டு பிடித்துள்ளார்.

பரம அணு:

மனித வாழ்வின் இக்கட்டான இந்தச் சந்தர்ப்ப சூழ்நிலையில் உயிரின் சூட்சுமத்தில் பங்கு வகிக்கும் "பரம அணு" தான் பேச்சு உயிருடன் கலந்துள்ள ரகசியத்தை வெளிவிடாமல் கெட்டியாகப் பிடித்து வைத்துக் கொண்டுள்ளது. இதுவே, அண்ட வெளியான பிரபஞ்சத்தின் mid-air என்பதாகும். இயற்கைக்கே வாழ்வளித்து சகல சிருஷ்டிக்கும் ஜீவாதாரமாய் உள்ள அதுவே நம்முடைய ஜீவனின் "உயிர்" (Conciousness) ஆகும். நம்முடைய எண்ண அலைகளின் ஓட்டத்தினியிடையே காணப்படும் அந்த ஓட்டமானது, பேச்சுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளாமல் உள்ளது.

தபோ நிஷ்டை:

அங்கு தான் புனிதமான "தெய்வ வாக்கு" தனது இருப்பிடத்தை மையமாகக் கொண்டுள்ளது. மேலும் அந்நிலையில் தான் இயற்கை தன் நிலை மாறாத சீரான உயிர் ஓட்டத்தைப் பெற்றுள்ளது. மனிதனின் ஜீவித வாழ்க்கை என்பது உயிரை வைத்துத் தான் சகலமும் நடைபெறுகிறது. மனிதனின் ஜீவித வாழ்க்கையை அமரகவி மீண்டும் அதன் இயல்பான பழைய நிலைக்கே கொண்டு செல்கிறார். என்றும், எக்காலத்திலும் மாற்றமில்லாத சாஸ்வதமான "அறிவாகாச நிலைக்கு" பேச்சினைத் தன்னுடைய சிறப்பான யோகத்தின் "தபோ நிஷ்டையின்" மூலம் அழைத்து சென்று, அதனுள் புதைந்து கிடக்கும் உண்மைகளையும், உடல், உயிர் ஆகிய இவையிரண்டின் திரை மறைவு ரகசியங்களையும், தெளிவுற அறிந்து கொண்டு, இயற்கையின் நித்தியமான அற்புத விளையாடல்களையும், லிலா வினோதங்களை எல்லாம் பின்வருமாறு எடுத்துக் கூறுகின்றனர்.

ஆகாயம் மறை பொருள் ஆனந்தம்:

ஒவ்வொரு மனிதனும் தன் புறக் கண்களால் காணும் காட்சிகள், காதுகளில் கேட்கும் விஷயங்கள், மெய் உணர்வுகளால் அனுபவிக்கும் உணர்வுகள், நாவினால் சுவைக்கப்படும் அறுசுவை ருசி எனப்படும், "ஷட் ரசங்கள்" மற்றும் அவன் விடும் சுவாசத்தின் அளவுகள், ஆகிய இவையனைத்தும் இயற்கை ஆகாயத்தின் சக்தியினால் அவனைச் சுயமாக செயல்பட விடாமல் அடக்கி வைத்துள்ளன. வான் வெளியான "ஆகாயம்" என்பது உண்மையில் ஒரு மறை பொருளாகும். மற்ற நான்கு பூதங்களான

பிருத்துவி, அப்பு, தேயு, வாயு ஆகியவை அலைந்து திரிந்து செயல்படுமிடமாக "ஆகாயம்" திகழ்கின்றது. இதில் மற்ற நான்கு பூதங்களின் சக்தியைக் காட்டிலும் ஆகாயம் தான் வலிமையானதாகும். ஆகாயம் தான் எல்லாவற்றிற்கும் திறவு கோலாகும். பிரம்ம சிருஷ்டியின் ரகசியங்கள் யாவும் அதன் மர்மத்தில் தான் அடங்கியுள்ளது. "ஸ்ரீ நடராஜ பெருமானின்" (The Cosmic Dance of Lord Nataraja is that versatile motion of cosmos) நித்திய ஆனந்த தாண்டவம் (Everlasting Eternal Bliss) இக்கருத்தின் அர்த்தத்தையே கொண்டுள்ளது.

அமரகவியின் அனுபவ முறை:

1. முதலில் எண்ணத்தில் புலன்களின் சலனத்தினால் உண்டாகும் அசைவையும் எண்ணத்திலிருந்து தோன்றாதவாறு விலக்கி வைக்க வேண்டும். ("சித்தத்தில் எண்ணத்தின் அசைவு நிற்க.")

2. அதன் விளைவாக சுவாசம் நிதானமடைந்து காற்றின் வேகம் குறைந்து விடும்.

3. அந்த சமயத்தில் சாதகன் (இவை அனைத்தையும் சுய உணர்வின் மூலம் அறிந்து) கண்களின் மூலம் செயல்படும் பார்வையை உடலின் வசியப் பகுதி என்றழைக்கப்படும் (Hypnotic Point) புருவ நடு மைய (Mid-brow) ஸ்தானத்தில் நிலை நிறுத்தப் பயிற்சியில் ஈடுபட வேண்டும்.

4. ஜீவனின் தேகம் உயிரைச் சில வினாடிகள் கூட ஒரு நிலைப் படுத்த விடாமல் தூண்டிக் கொண்டேயிருக்கும் புலன்கள், அந்நிலையில் தணிக்கை செய்து மீண்டும் தோன்ற முடியாமல் செய்து விடுகின்றது.

5. அந்நிலையில் எண்ணம் ஜீவனின் சுய தேக உணர்வில் மீண்டும் தோன்ற முடியாமல் கள்ளத்தனமாக நழுவிச் சென்று விடுகிறது.

6. எண்ணம் முற்றிலும் ஓய்வு பெற்ற (Moments of Thought-free silence) சூழ்நிலையில் அமரகவி அஜபா என்கின்ற தன்னுடைய "மந்திர சித்தியை" மனம் ஓய்வு பெற்ற நிலையில் (Mental Repose) மிதக்க விட்டார் அல்லது எண்ணத்திற்கு குறுக்கே மூச்சை ஓடவிட்டார். வேதாந்திகள் கூறும் "எண்ணமற்ற நிலை" என்பது பிரயோஜன மற்றது, உபயோகமில்லாதது! எண்ண மற்ற எந்த ஒரு வஸ்துவும், ஒரு ஜடப்பொருளாகும். சாதகன் இதனைக் கவனத்தில் எடுத்துக் கொண்டு எச்சரிக்கையுடன் "ஆழ்நிலை

தியானத்தில்" ஈடுபட வேண்டும். அமரகவி கூறும் "எண்ணம் ஒய்வு பெற செய்யும் கலையை" நன்கு பயில வேண்டும். எண்ணம் பூரணமாக ஒய்வு கொண்ட நிலையில் தான் "அறிவு" மெள்ள மெள்ள, அதில் கலக்க துவங்கும். சாதனையில் தேர்ச்சி பெற்ற பின்னே அறிவு "சித் சக்தியாகி" சுயம் பிரகாச நிலையை அடையும்.

7. மானிடனைப் பேச வைக்கும் "சொல்" உயிரின் சக்தியிலிருந்து தான் உண்டாகின்றது. ஜீவனின் வாழ்நாள் முழுவதும் இது நாள் வரை பேச்சில் கலந்திருந்த உயிர் வெளியே தோன்றாமல், உடலில் வெகு ஆழத்தில் அடங்கிக் கிடந்த, ஆத்மனின் உயிரை எண்ணம் முழுவதும் காலியான வெற்றிடத்தில் கொண்டு செல்ல வேண்டும்.

8. எண்ணம் உள்ள வரை, மூச்சு உள்ள வரை, "உயிர்" என்றுமே மேல் எழாது என்பது இதன் மூலம் நிருபணமாகின்றது. உயிர், பேச்சில் கலந்து மாசுபட்டு சொல்லின் மூலம் அதன் ஆற்றல் யாவும் வீணாகி உள்ளது. "அஜபா" என்கின்ற மந்திர உச்சாடனத்தை உள்மனத்தில் ஒய்வில்லாமல் தானே இடைவிடாமல் உச்சரிக்க வைத்து, பொரிக்க செய்யும் ஆற்றல் தான் "மந்திர சித்தி"எனப்படும்.

9. எண்ணம் மூச்சிலிருந்து பின்வாங்கிச் செல்லச் செல்ல, மானிடனைப் பேச்சில் ஒலிக்கும் சொல்லிலிருந்து மேல் எழும் "உயிர்," அந்நிலையில் சுயம்பு வடிவமாகி "அமர வாக்கு" பெற்று ஆத்மனின் "ஞான போதனையைப்" பெறுகின்றது.

இத்தகைய அபூர்வ நிகழ்ச்சி எப்பொழுதோ ஒரு முறை நிகழும் இயற்கையின் அற்புதம், மனித குல சரித்திரத்திலே இந்தப் புத்தகத்தில்தான் அதை முதல் முறையாக விளக்கிக் காட்டப்பட்டுள்ளது. (This rare phenomena of Nature is exposed with the book for the first time in world history.)

புரோட்டான் (பேரறிவு - Super Wisdom):

ஜீவ வாழ்க்கையில் மூச்சு விடுவதற்கு அவசியமானது ஆக்ஸிஜன் என்கிற பிராண வாயுவில் நைடிரஜன் காற்றில் கலந்து மாசுபட்டு, நாம் சுத்தமான பிராண வாயுவை மட்டும் உடலில் எடுத்துக் கொள்ள ஒரு பெரும் தடையாக உள்ளது. நைடிரஜன் உடலின் புலன்களின் சலனத்திற்குக் காரணமாக உள்ளது.

| | | |
|---|---|---|
| புரோட்டான்<br>Cosmic energy with Nature | *பேரறிவு*<br>*Super Wisdom*<br>Divine Radiance (Supra Mental) | ஞான திருஷ்டி<br>பிரம்ம சிருஷ்டியின் சகல இரகசியத்தையும் அறிந்து கொள்ளுதல். |
| நைடிரஜன் | ஜீவித வாழ்வின் அடிப்படை | புலன்களின்சலனத்தினால் எழுச்சியால், மாசுபட்டுள்ளது |
| ஹைடிரஜன் | உடலின் ரத்த ஓட்டம் | திரவ நிலையில் அக்னியை உடலில் சீராக பரப்புதல் |
| ஆக்ஸிஜன் | உடலில் அடைகாத்து வளரச் செய்ய வேண்டும். | அனல் மின் வெப்பம் (Thermal Heat) குண்டலினி சக்தி எழுச்சி பெறுவதற்காக |
| ஆல்பா, பீட்டா, காமா கதிர்கள்<br>The Three cosmic radiation Alfa, Beta, and Gamma rays | பரம அணு,<br>*மூலப் பிராணன்*<br>Solar Heat<br>"யோகக் கனல்" | சர்வ வல்லமை படைத்த அகர ஒலி, பிரபஞ்சத்தின் ஒன்று கூடிய தெய்வீக சக்தி |
| பீட்டா அலைகள் | அதோமுகமாக ஓடும் மூச்சு | மனித சுவாசத்தின் பல நிலைகள் |
| காமா அலைகள் | ஸ்தூல தேகம் ஒடுங்கிய பின் தோன்றும் பிரக்ஞை | தேக சலனங்கள் அடங்கி தன்னை மறந்த நிலையில் உள்ள நினைவு |
| ஆல்பா, பீட்டா, காமா கதிர்கள் சனி கிரகத்தின் ஆட்சிக்குட்பட்டது | | |
| எலெக்ட்ரான்கள் | பேச்சில் மாசுப்பட்டுள்ள சொல்லின் அலைகள் | "பேச்சு"<br>நாவில் சுழலும்<br>"மூல அனல்" |
| சப்தம்<br>உலகின் முதல் காரியம் | ஒலி | ஜட பொருளை உற்பத்தி செய்கிறது ஜடம் – திட, திரவ, காற்று நெருப்பு அகியவைகள் |

எனவே புலன்கள் சலனத்தினால் எழுச்சி பெற்று சிலிர்த்து எழுந்து கொண்டிருக்கும் நைடிரஜன் காற்றை நிராகரித்துப் பின், ஆக்ஸிஜன் அலைகளை (சுத்தமான பிராண வாயுவை மட்டும்) உடலில் நன்கு வளர்த்து விருத்தி செய்து, அதன் மேல் "புரோடானை" நன்கு அடைகாத்து வளரச் செய்ய வேண்டும். மானிடனின் பரிமாண வளர்ச்சியின் மேல் நிலை என்பது "புரோட்டான்" வளர்ச்சியில் தான் அடங்கியுள்ளது. யோகம் எனபது ஞான திருஷ்டியின் (Mystic Vision) மேல் பெறப்படும் "பேரறிவே" (Super Wisdom) அதுவே புரோடான் எனப்படும்.

சமுதாய பாதுகாப்பு அக்கறை:

தற்காலத்தில் விஞ்ஞானம் அதன் கடினமான அறிவியல் சோதனையின் மூலம் அணுக்களை கதிர் வீச்சின் மூலம் பிளந்து அதனுள் அடங்கியிருக்கும் அணு ஆற்றல்களான, புரோட்டான், நியூட்ரான், எலக்ட்ரான் ஆகிய அணு ஆற்றலின் வலிமையான சக்தியைக் கண்டு திகைப்படைந்துள்ளது. மற்றும் விஞ்ஞானம் வேகமாக வளர்ச்சியடைவதற்கு இந்த ஆய்வுகளின் புதிய கண்டுபிடிப்பு முறைகளே ஒரு முக்கிய காரணமாகும்.

இயற்கையின் அணு ஆராய்ச்சி உண்மைகள் யாவும் பழங்காலம் தொட்டே புனிதமான பாரத நாட்டில் மிகவும் தெளிவான முறையில் அறியப்பட்டு, அவை யாவும் ரகசிய வார்த்தைகளால், இலக்கியக் கவிதைகளின் அல்லது பாடல்களின் மூலம் சிறப்பாக விளக்கிக் கூறப்பட்டுள்ளது. இதன் பொருள் தகுதி வாய்ந்த சீடனுக்கே எடுத்துச் சொல்லப்பட்டு, தீய குணம் கொண்ட சமூக விரோதிகளுக்கு, அதன் அர்த்தம் தெளிவுபடுத்தப்படாமல், மக்களின் பரந்த நலனைக் கருத்தில் கொண்டு மிகவும் பத்திரமான முறையில் தலைமுறை தலைமுறையாகப் பாதுகாக்கப்பட்டு இன்றளவில் புதுப் பொலிவுடன் விளங்குகின்றது.

பழங்காலத்தின் "சமுதாயப் பாதுகாப்பு அக்கறை" என்கின்ற உத்தியைப் பற்றிக் கவலைப்படாமல், தற்கால விஞ்ஞானம் தன்னுடைய அறிவியல் கண்டுபிடிப்புகளை எல்லாம் புவி மண்டலத்தில் அடங்கியிருக்கும் காற்று மண்டலத்திலுள்ள வாயுக்களான ஹைடிரஜன், நைடிரஜன், "மின்காந்த அலைகள்" (Elecdtro Magnetic waves) ரேடியோ அலைகள் (Radio Waves) எலக்ட்ரன் அலைகள் (Electron Waves) மற்றும் பிற கிரக மண்டலத்திலிருந்து வரும் புற ஊதாக் கதிர் இயக்கங்கள் (Ulta Violet Rays)

இவைகளையெல்லாம் விஞ்ஞான ரீதியில், தீவிரமாக ஆராய்ந்து கொண்டுள்ளது. இந்தப் புற ஆய்வுகளின் கண்டுபிடிப்புகள் யாவும் பிற்காலத்தில் வரும் சந்ததியினருக்கு விபரீதங்களாகவும், ஜீவித வாழ்க்கைக்கு அச்சுறுத்தலாகவுமே அமைந்து விடும்.

ஆத்ம விசாரணை:

யோகத்தின் வாயிலாக சாதகன் ஆகாயத்தில், "தன் சுயாட்சியில்" உடலை அடக்கிச் செல்ல வேண்டிய தெளிவான ஆழ்ந்த கருத்துக்களை எடுத்துக் கூறி வந்தாலும், இவற்றை எல்லாம் கருத்தில் கொள்ளாமல், பழமை வாதம் என்று ஒதுக்கித் தள்ளி விட்ட தற்கால நவீன யுக மனிதன் இதற்கு நேர் விரோதமாக வானத்தில் தங்களுடைய விண்வெளிப் பயணங்களை அறிவியல் தொழில்நுட்பக் கருவிகளின் துணை கொண்டு பல தேவையற்ற விஞ்ஞான ஆராய்ச்சிகளை மேற்கொண்டுள்ளான். "யோகம்," "விஞ்ஞானம்" இவையிரண்டும் அதன் அளவுகளில் முற்றிலும் வேறுபட்டது தான். "யோகம்" ஆத்ம விசாரணையின் மூலம் தனக்குள்ளேயே ("அகம்") ஆழ்ந்து சென்று, பிரபஞ்சத்தின் எல்லைப் பரப்பளவில் விரிந்துள்ள சகலத்தையும் அறிந்து கொள்கின்றது. ஆனால் "விஞ்ஞானமோ" ஆராய்ச்சியின் மூலம் இயற்கையின் புறப் பொருள்களான ஜட வஸ்துக்களை, ஸ்துாலத்தில் ஆராய்ந்து தன் நேரமனைத்தையும் வீணாக்கிக் கொண்டுள்ளது.

ஜீவித வாழ்வில் வெற்றி கொள்ள வேண்டிய –"இடா நாடி"

யோகம் மனிதனை அவனுள் அடங்கியுள்ள தேகத்தின் சுய உணர்வினை அல்லது அகத்தின் (சூட்சுமத்தின்) ஆழத்துக்கே சென்று "ஆத்ம விசாரணையின்" மூலம் உண்மையைக் காண வேண்டும் என வலியுறுத்துகின்றது. ஜீவித வாழ்க்கைக்கு ஏற்றவாறோ அல்லது உயிர் வாழ்வுக்கு அவசியமான மூச்சுக் காற்றுக்கு அத்தியாவசியமான அளவு முறைகளோ வான வெளியில் இல்லை. இயற்கையில் வெளிப்படையாக உள்ள விஷயங்களை விண்வெளி வீரர்கள் அண்ட வெளியில் தேடியலைந்து ஏதோ சில முயற்சிகளை மேற் கொண்டுள்ளார்கள். ஆனால் அவையெல்லாம் மிஞ்சிப் போனால், இயற்கை தன்னிடத்தில் வெளிப்படையாக வைத்துள்ள

விஷயங்களைத் தான் அவர்களால் கண்டு பிடிக்க முடியும். இயற்கை மறைத்துள்ள சூட்சும சக்தியின் ரகசியங்கள் அனைத்தையும், யோகத்தின் தத்துவ ஆராய்ச்சியின் மூலமாகத் தான் கண்டறிய முடியும். ஆகாயத்தில் காணப்படும் அனைத்து விதக் கதிர் வீச்சு இயக்கமாக உள்ள "இடா நாடியே" ஜீவித வாழ்வின் வெற்றி கொள்ள வேண்டிய முக்கியக் குறிக்கோளாக உள்ளது.

பீட்டா கதிர் இயக்கம்: (Beta Waves)

"இடா நாடியே" தேக உணர்வின் அலைகளாக என்றும் பூலோகத்தில் லௌகீக வாழ்க்கையில் சுவாசத்தின் மூலம் தொடர்ந்து உயிர் வாழ்வதற்கான உதவிகள் புரிகின்றது. "பிங்களை" அதனுடன் ஒரு நதியில் இணைந்து செல்லும் நீரோடை போல் இணைந்து செல்லும் "பேச்சு" ஆக உள்ளது. ஆல்பா கதிர் இயக்கம் (Alfa Waves) தான் உடலில் மாறுபட்டு "உயிர்" ஆக உள்ளது. பீட்டா கதிர் இயக்கம் (Beta Waves) மூச்சு தன் இஷ்ட விரோதமாக பேச்சுடன் கலக்கச் செய்து, நாக்கில் சப்த அலைகளாக விரிந்து செயல்படுகின்றது. அமரகவியின் யோக சாதனை, இயற்கையின் இந்த முக்கியமான இணைப்புக் கட்டத்தில் (பீட்டா கதிர் இயக்கம்) அத்துமீறி உள்ளே நுழைந்து, ஊடுருவிச் செல்வதாகும். இயற்கை வலுக்கட்டாயமாக மூச்சை நாக்கில், சப்த அலைகளாகத் திணிக்கின்றது. அமரகவி சித்தேஸ்வரர் பேச்சுடன் மூச்சைக் கலக்காமல் தடுத்து நிறுத்தி, அதன் மூலம் எண்ணத்தை ஒய்வு கொள்ளச் செய்து (Moments of Thought-free silence) பேச்சையும் நாவிலிருந்து எழாமல் செய்து அந்த வெற்றிடத்தில் "மூலப் பிராணனிலிருந்து" பிரித்து எடுத்து, மாசுபடாது உயிரை அங்கு கொண்டு வந்து சேர்ப்பதில் வெற்றி கண்டுள்ளார்.

மூலாக்னி – தாய் தந்த பிச்சை

மூலாதாரம் தான் "மூலாக்னியின்" இருப்பிடமாக உள்ளது. "மூலாக்னி" கர்ப்ப சூடு அல்லது ஜீவனின் ஸ்தூல உடல், தாய் கர்ப்பத்தில் தோன்றுவதற்கான "முதல் அக்னியாக"உள்ளது என்பதால் தான், "தாய் தந்த பிச்சை" என அழைக்கப்படுகின்றது. மானிடனில் தோன்றும் பேச்சின் சக்திக்கும் காரணமாக உள்ளது மூலாக்னி தான். அதுவே உஷ்ணத்தின் கலப்பில் சொல்லாக மலர்வது, இதுவே ஸ்ரீதேவியின் கருணையாகும்.

திருமூலத்தில் "பராவின்" இருப்பிடத்திலிருந்து "ஸ்ரீதேவி" அருள் புரிவதால் பராசக்தி எனவும் அழைக்கப்படுகின்றாள். யோக நூல்கள் வருணித்துக் கூறும்க் "நாபிக்கு கீழ் நல்லெழுத்துண்டு" என்பதும் இதுவே. அதுவே வெட்டுப்படாத / துண்டுபடாத பிராணன். யோகத்தில் இதுவே "மகா குண்டலினி" சக்தியின் தேஜஸ் ஆக வெளிப்படுகின்றது.

இரண்டு ஜீவித ரகசியங்கள்:

ஜீவாதாரமான உயிர் வாழ்க்கையில் இவ்வாறு குறுக்கே செல்கின்ற இயற்கையானது உடலை மட்டும் ஏற்றுக் கொள்ள மறுக்கின்றது. தோற்றத்தில் இவ்வாறு சாதுவாக அடங்கிக் கிடக்கும் தேகத்தின் சக்திமிக்க ஜடத்தின் அலைகளை யோகத்தின் வலிமையால் அதன் (உடல்) ஆற்றலை பன்மடங்கு பெருகச் செய்ய வேண்டும். அமரகவி சித்தேஸ்வரர் "நாதோபாசனை" படிப்பின் மூலம் இப்பாடங்களை எல்லாம் நன்கு அறிந்து கொண்டார். அவர் தன் பயிற்சி முறைகள் மூலம் நாவில் சுழலும் அதி நுட்பமான சப்த அலைகளின் மேல் அசைக்க முடியாத அளவுக்கு நம்பிக்கை கொண்டிருந்தார். ஏன் எனில் இயற்கை அதன் (நாக்கு) மேலிருந்து தான் பேச்சைத் துவக்குகின்றது. அமரகவி சித்தேஸ்வரர் தன் விடா முயற்சியில் சற்றும் மனம் தளர்ச்சியடையாமல் அதன் ஆழத்தின் உள் சென்று இரண்டு ஜீவித ரகசியத்தைக் கண்டு கொண்டார்.

1. ஜீவ தேகத்தில் தோலின் மேல் மட்டத்தில் உயிரானது "பூதாகாசமாக" மிதந்து கொண்டுள்ளது. அதுவே காற்றின் ஓட்டமாக ஸ்தூல வடிவத்தில் உடலைச் சுற்றி வலம் வந்து கொண்டுள்ளது.

2. அதன் அடிப்புறத்தில் மானிடனின் உண்மை சொருபம் துயரங்களில் சிக்கிக் கொண்டு துன்ப கதியினிடையே, விதியின் வலிய போராட்டத்திற்கு அடிபணிந்து, சுதந்திரமாக வாழ வழியின்றி, கண்ணீர் விட்டு அழுது கொண்டுள்ளது.

அத்தகைய துயரம் நிறைந்த மானிட கதியிலிருந்து மீண்டும் சர்வ சுதந்திர தேகத்தைப் பெற்று நீடூழி பல்லாயிரக்கணக்கான ஆண்டுகள் வாழும் "தேவகதியின் நிலைக்கு" மாறிச் செல்லுதலே "நாதோபாசனையின்" சித்தியாகும். இந்தப் புத்தகத்தில் இதன் விரிவான ஆராய்ச்சியைக் காணலாம்.

அமர கோசம்:

ஜீவனின் தேக வாழ்க்கையில், "ஆகாயம்" தொண்டையின் உணவு விழுங்கும் பாதையின் மேல், அல்லது "விசுத்தியில்" தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டுள்ளது. விசுத்தியின் சூட்சுமத்தில் அடங்கியுள்ளது தான் "அமர கோசம்." பேச்சுக்கு பின்னால் காணப்படும் வெற்றிடம் அதுவே. கடவுள் அங்கு அந்தர்யாமியாக மனிதனின் சுய உணர்வுக்குள் ஒய்வு பெற்றுள்ளார். புனிதமான தெய்வத்தின் குரல் ஒலிப்பது என்பது இறைவனின் அனுக்கிரகத்தினால் மட்டுமே. 12 அங்குல நீளமுடைய மனிதனுடைய கர்ம தேகத்திற்க்கே சொந்தமான "துண்டுபட்ட சுவாசம்" (Intermittent Breathing) நடைமுறை மாறி தேவ அனுக்கிரகத்தினால் எட்டு அங்குலமாக குறைந்து, நிலை பெறும் போது தான் மனிதனின் உயிர் வாழ்க்கை "அமர கோசம்" என்கின்ற திவ்விய நிலையை அடையும் பேறு பெறுகின்றது. அதுவே "காலம் vs. கட்டுக்கு அடங்காத நிலை" (Time vs. Space) தாண்டிச் செல்லுதல் என்பதாகும்.

காய சித்தி:

சிருஷ்டியில் காணப்படும் அனைத்து உயிரினங்களின் உள்நோக்கிப் பாயும் "உயிர்" என்பது அதுவே. அங்கு தான் அதி சூஷ்ம ஆற்றல் படைத்த அற்புத தேவ சக்தி, ஜீவனின் உடலில் பாய்ந்து செல்கின்றது. உணர்ச்சி பூர்வமான பாதையிலுள்ள இயற்கையின் சக்தியையும் மீறித் தோன்றும், தேவ சக்தியின் வருகையால் "உயிர்" ஸ்தூல உடலிலேயே இனி சேதாரம் என்கின்ற சொல்லுக்கே இடமில்லாமல், அதன் வளர்ச்சியைப் பெறுகின்றது. அந்நிலையில் தான் "யோக நித்திரை" தத்து எடுத்துக் கொள்ளப்படுகின்றது. உயிரின் மீட்புப் பெற்று உயிர்த்து எழுந்த பின்னே, இயற்கையினுள்ளே சூட்சுமமாய் அடங்கிக் கிடக்கும் அதன் சக்தியானது ஸ்தூல உடலிலேயே அதனை தாங்கிக் கொள்ளும் வலிமை பெறுவதைத்தான், சித்த மகா புருஷர்கள் "காய சித்தி" எனப் பெயரிட்டு அழைத்தார்கள்.

இத்துணை கடினமான "காய சித்தி" கைகூடப் பெற்றவர்கள், பார்வைக்கு முடி நரைத்து வயது முதிந்தவராக இருந்தாலும், தேகத்தில் முதுமை காரணமாக உண்டாகும் களைப்போ, உடல் தளர்ச்சியோ, (Fatigue) சோர்வோ, ஏதுமில்லாதவர்களாகவும், இளமை முறுக்கேறிய இளம் வாலிபராகவும், திட ஆரோக்கியமுள்ள மன வலிமையைப் பெற்றவர்களாகவும் திகழ்வார்கள்.

இவை யாவும் பண்டைய கால பாரத தேசத்தின் சிறப்பு மிக்க கலாசாரத்தின் மகிமையை உலகுக்குப் பறை சாற்றுவதாகும். அதில் ஆயிரத்தில் ஒரு பங்குகூட நவீன காலத்தில் தற்பெருமை பேசி போலி வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருக்கும் தற்கால ஆன்மீகவாதிகளால் எட்டிக் கூடப் பார்க்க முடியவில்லை, என்பது தான் வேதனைப் பட வேண்டிய விஷயமும் மற்றும் தீவிர சிந்தனைக்குரிய விஷயமும் ஆகும்.

அமரகவியின் தணியாத ஆர்வம்:

இறைவனால் அருளப்பட்ட இந்தத் திவ்விய கிரந்தத்தில் பழங்கால இந்தியாவின் பாரம்பரியம் மிக்க, தொன்மையான (The Ancient Spiritual and Cultural Heritage of India) அதன் பெருமைகள் மீண்டும் ஒருமுறை விளக்கிக் காட்டப்பட்டுள்ளது. சர்வ தேச அமைப்பான உலக மையம் ஐ. நா. சபை (United Nation Orgainsation) அமரகவி சித்தேஸ்வரரின் கடினமான இந்த செயற்கரிய சாதனைக்குத் தகுந்த ஆதரவினையும், ஒத்துழைப்பையும் நல்கி, அதன் மூலம் மனித குலத்திற்கு மேன்மையும் சிறப்பையும் உண்டாக்கட்டும். அமரகவி சித்தேஸ்வரர் சர்வதேச சகோதர வாஞ்சையுடன், (Universal Brotherhood) உலகின் அனைத்து நாட்டு மக்களும் பயன் பெற வேண்டும் என்னும் அவரது தணியாத ஆர்வத்தையும், இதன் மூலம் எடுத்துக் கூறுகின்றார்.

இந்தக் கிரந்தம் "உயிருக்கு" ஒரு புதிய நம்பிக்கையை அளிக்கின்றது. ("This Book casts a new hope with "Life.") இது உலகெங்கும் வாழ்கின்ற அனைத்து மக்களின் ஆராய்ச்சிக்கும், சிந்தனைக்கும் உட்பட்ட பொதுவான ஒரு விஷயமாகும். ஞானத்தைப் பற்றியும், (Cosmic Wisdom) தன்னைப் பற்றியும், (Human Self) இயற்கையைப் பற்றியும், (Sensitive Nature) மனித உடலின் இயக்கத்தைப் பற்றியும், (Anatomy of Human Body) இப்படிப்பட்ட சகல விதமான உத்திகளையும், அதனை மேற்கொள்ள வேண்டிய சிறந்த வழிமுறைகளையும், நம்முடைய அறிவிற் சிறந்த முன்னோர்களான பண்டையக் கால ரிஷிகள் மிகவும் விரிவான முறையில் எடுத்துக் கூறியுள்ளார்கள். ஜீவனின் "தேகத்தின் பாதுகாப்பு அரணாகத்" திகழ்வது "பேச்சு" தான். அதுவே "உயிரின் அசைவாகவும்" ஆக இரண்டும்

சிறிதும் வித்தியாசமில்லாமல் ஒரே மாதிரியாக உடலில் செயல் புரிகின்றது. இப்படி வேறுபாடில்லாமல் ஒரே மாதிரியாக உள்ளதால் அதனை இயற்கையின் மூலம் தான் அடையாளம் காண முடியும் என்பதை விஞ்ஞானம் இன்றும் தன்னுடைய உள்ளுணர்வால், இவ்வரிய உண்மையைக் கண்டு பிடிக்க முடியவில்லை. இங்கு தான் இந்தப் புத்தகத்தின் அழைப்பு “ஐக்கிய நாடுகளின் சபையின்” மூலம் விடுக்கப்படுகின்றது. உடலின் ஆகரஷண சக்தி மற்றும் அதில் உயிரின் அசைவு ஆகிய இவ்விரண்டின் சமத்துவம் பேச்சின் மூலம் பெறப்பட்டு அதன் மூலம் உயிரோட்டமுள்ள அதன் பாதையில் வழி நடத்திச் செல்லப்படும். அந்நிலை தான் பேச்சு – “உயிர்” எனப்படும். இந்தப் புத்தகத்தின் ஞானம், விவேகம் எல்லாம் அதிலிருந்துதான் பெறப்பட்டது.

பேச்சு மனிதனின் – சுய உணர்வு:

அமரகவி எந்தக் கருத்தை விஞ்ஞானம் அளிக்க வேண்டுமோ, அந்த விஷயத்தைத் தன்னுடைய யோக சாதனையின் முன்னுரிமையில் பெற்று, அதை உலக கவுன்சிலின் கவனத்துக்கு எடுத்துக் காட்டி, அதே சமயத்தில் யோகத்தின் பொருள் பொதிந்த பல ஆழமான கருத்துக்களைத் தெளிவாகப் புரியும் படியும், எளிமையான முறையில் விளக்கிக் கூறியுள்ளார். சுருக்கமாகக் கூற வேண்டுமானால் பேச்சு என்பது ஜீவனில் தானே சுயமாக இயங்கக் கூடிய “சுய உணர்வு” ஆகும். மானிடனின் சுயமான தானியங்கி நிலையை, இயற்கை தன் எல்லைக்குள் கட்டுப்படுத்தி, அதன் மூலம் உயிரை தேகத்தின் அறிவற்ற ஜடத்தின் உணர்ச்சிக்கே, நிரந்தரமாக அடிமையாக்கி வைத்துள்ளது. இந்த தடையை உடைத்தெறிந்து, யோகத்தின் மூலம் நிவர்த்தி செய்து மீண்டு வர வேண்டிய அவசியத்தை இப்புத்தகம் வலியுறுத்திக் கூறுகின்றது. “ஆகாயமானது” பேச்சு மூலம் திரையை நன்கு மூடி, ஜீவனை ஸ்தூலத்தின் பிடியில் நன்கு சிக்கி கொள்ளும்படி இறக்கியுள்ளது. அணு முதல் மூலக்கூறுகள் வரை இயற்கையின் அனைத்து இயக்கங்களும் அங்குதான் அதி நுட்பமான முறையில் அடங்கியுள்ளன.

ஹைடிரஜன் மாறுபட்ட குணாதிசயம்:

காற்றிலே கலந்துள்ள ஹைடிரஜன் என்கின்ற அணு அதன் சொந்த வடிவில் முற்றிலும் மாறுபட்ட குணாதிசயங்களைக் கொண்டுள்ளது. இயற்கையில் ஒரு மடங்கு ஹைடிரஜன் அதனை விட இரண்டு மடங்கு

அதிகமான ஆக்ஸிஜனில் கூடும் போது H2O தண்ணீராகின்றது. அதே முறையில் தான் ஜீவித உயிர் வாழ்க்கையிலும். ஏன்எனனில் உடலில் தண்ணீரின் ஓட்டம் ரத்த ஓட்டத்திற்கும், அனல் மின் வெப்பத்தின் வடிவமான பேச்சுக்கும் சக்தியளித்து உதவி புரிகின்றது.

1. ஹைடிரஜன் தனக்குள்ளே மற்ற அணுவைக் காட்டிலும் முற்றிலும் வித்தியாசமான அமைப்பு முறையைக் கொண்டுள்ளது. அதுவே பிரபஞ்ச முழுவதும் சர்வ வியாபகமாக உள்ளது.

2. ஆனால் ஹைடிரஜன் இயற்கையில் ஸ்தூல வடிவில் அதன் மற்றொரு அணுவான ஆக்ஸிஜனுடன் காற்றில் ஒன்று கலக்கும் போது அதன் 1 மடங்கு 2 மடங்கு அளவுடைய ஆக்ஸிஜனைத் தன்னுடன் சேர்த்துக் கொள்கின்றது.

3. ஆக்ஸிஜன் மற்றும் ஹைடிரஜன் இவையிரண்டும் ஒன்று சேர்ந்தது தான் மண்ணுலக ஜீவன்களின் உயிர் வாழ்க்கை முறையாகும்.

4. ஹைடிரஜன் மூலக்கூறுகள் அடங்கிய தண்ணீரின் மூலம் தான் உடலில் "ரத்த ஓட்டம்"

5. காற்றில் கலந்துள்ள ஆக்ஸிஜனின் (பிராண அனல்) அனல் மின் வெப்பத்தின் மூலம் ஜடதேகத்தில் உண்டாகும் "பேச்சு" இவையிரண்டுக்கும் காரணமாய் உள்ளது.

ஜீவப் பிரகாசம்:

இப்பொழுது நாம் இதன் கொள்கையைப் பற்றி சற்றுச் விரிவாகக் காணலாம்.

அணு சக்தியானது உயிரை பூரண நினைவின் மூலம் ஸ்தூல தேகத்தில் பாதுகாப்பாக வைத்துள்ளது. "பேச்சு" தான் அங்கு அதிசூட்சமமாக உள் ஒலிக்கும் குரலானது ("தெய்வ வாக்கு") மேலும் பிரிக்க முடியாத எலக்ட்ரான்கள் என்கின்ற எதிர்மறை அணுவின் மூலக் கூறுகள் ஆகிய இவற்றின் குறுக்கீடுகளின் தொல்லைகளால், (கஷ்ட, நஷ்டங்களால்) மேல் எழ முடியாமல் (மானிடனில் சுயம் பிரகாசமாய், சர்வமும் உணர்ந்துள்ள தெய்வீக் குரலாக மலர முடியாமல்) தொலைந்து போயுள்ளது. மானிடனின்

சுய உணர்வில் தடைபட்டுப் போய் உள்ள இந்த இயக்கம் தான் எல்லோரிடமிருந்தும் நீக்கப்பட வேண்டும்.

"பேச்சு" அதன் அடித்தளத்தில் ஜீவாதாரமாகவும் அதாவது மூலாதாரம் என்கின்ற "திருமூலத்தில்" ஸ்ரீ ஆதி சங்கரர் சௌந்தர்ய லஹரியில் வருணித்துக் கூறும் "பரா" என்கின்ற பராசக்தியாக – அம்பிகையின் அம்சமாக, ஸ்ரீ வித்தையின் முறையின் படி "மூலாக்னி" ஆகவும், "சக்தி பீஜமாகவும்," சுவாசத்தின் மூலம் ஸ்தூல உடலில் நிலை பெற்றும் மற்றும் அதுவே ஜீவனில் "உயிர்" எனவும் அழைக்கப்படுகின்றது. அதுவே மானிடனின் உடலின் மேல்மட்டமான கழுத்துப் பகுதியில் "ஜீவப் பிரகாசமாக" நினைவலைகளின் மேல், (Mental Awareness) சுற்றிக் கொண்டிருக்கும், ஜீவனின் சுய உணர்வுக்குரிய நிலையாகும். பொதி சுமக்கும் சுமையாக அதன் மீது திணிக்கப்பட்டுள்ள "உயிருக்கு" ஆதாரமாயிருக்கும் "பேச்சை" செல்லுபடியாகாமல் மறுத்து உயிரிலிருந்து "பேச்சு" மீண்டும் எழாமல் செய்ய வேண்டும்.

பல முறை ஜீவ கதியில் சுற்றிச் சுழன்று எத்தனையோ புது பிறவிகளில் மறு ஜென்மம் மூலம் மீண்டும் மீண்டும், பூலோகத்தில் பிறந்து கொண்டிருந்தாலும், இதற்கிடையே உயிரானது, அதன் ஆற்றல் சற்றும் கட்டுக் குலையாமல் தன் முழு பலத்துடன் என்றும் சாஸ்வதமாக உள்ளது போல் புதுப் பொலிவுடன் விளங்குகின்றது. எனவே நாம் யோகத்தின் மூலம் தீவிர யோசனை செய்து அடிமட்டம், மேல் மட்டம் (Undertones and Overtones) என இரண்டாகப் பிரிந்து உயிரில் மாசுபட்டு கிடக்கும் பேச்சை அடக்கி, பரிசுத்தமான ஜீவப் பிரகாசத்தை நினைவலைகளிலிருந்து மீட்டு, உச்சிக்கு (சிதாகாசத்திற்கு) பிரக்ஞையின் மூலம் தூக்கிச் செல்ல வேண்டும். இயற்கை அணுவின் மூலம் "உயிராகவும்," அதன் அணு ஜலக் கவர்ச்சியின் மூலம் (Hydro cohesive) "எண்ணமாகவும்" (நீர் அணுக்களின் இடையே உள்ள பற்றும் சக்தி) ஆகவும் உள்ளது. எண்ணம், உயிர் இவையிரண்டுமே என்றுமே வேறு வேறாயிருப்பதில்லை. அவையிரண்டும் ஒரு பறவையின் இரண்டு சிறகுகள் போல் தான் உள்ளன. ஒன்று ஸ்தூலத்துடன் கூடிய அங்க அசைவுகளின் பிராண சலனமாகவும், (உயிர்) மற்றொன்று இயற்கையின் பிரதிநிதியாகவும் அதன் பிடியிலேயே சிக்கி கொள்ளும் இயல்புடையதாகவும் உள்ளது. இதுவே புலன்களின் வாயிலாக எண்ணங்களின் பிரதிபலிப்பு. இதுவே மானிடனின்

சுய உணர்வானது என்றுமே மீற முடியாமல் நிரந்தரமாக இப்படித்தான் இயற்கையின் நிர்ப்பந்தம் என்கின்ற பொறிக்குள் சாஸ்வதமாக சிக்கிக் கொண்டுள்ளது.

### "பூமியா" அல்லது "ஆகாயமா"?

மனிதன் அன்றாடம் விடும் சுவாசத்தில் தான் (Human Respiration) பல மர்மங்களும், ரகசியங்களும் அடங்கியுள்ளன. அதன் புதிருக்கான விடை ஜீவனுடைய மனித வாழ்வுக்குள் தான் அடங்கியுள்ளது. அதுவே என்றும் ஆராய்ச்சிக்கும், தீவிர விசாரணைக்கும் உட்பட்டது. மூச்சு விடுவது இறைவனின் ஆணையின் படி, (It is an act of God) சகல ஜீவனிடத்திலும் நடைபெறும் ஒரு முக்கிய நிகழ்ச்சியாக இருந்தாலும், மூச்சானது உயிரில் ஒரு கலையின் அடிப்படையில்தான் நடைபெற்றுக் கொண்டே உள்ளது.

அதுவே இயற்கையின் பராமரிப்பில் சரியான முறையில் ஜீவ ஓட்டமாக தேகத்தில் இயங்கிக் கொண்டுள்ளது. சகல ஜீவன்களும் மூச்சின் மூலமே ஆகாயத்தில் வெளிப் பார்வையின் சலனத்தில், உயிருடன் வாழ்ந்து கொண்டிருந்தாலும், உயிரை ரத்து செய்யும் அதிகாரத்தில் (குறிப்பிட்ட காலம் மட்டும் உயிர் வாழ அனுமதி அளித்து) உயிர் இழந்து விடுகின்றனர். இவையனைத்தும் ஒன்றன் பின் ஒன்றாகத், தொடர்ச்சியாக, இயற்கையினால் வெகு சிறப்பாக இயக்கப்பட்டு நடத்தப்படும் போட்டியில், "பூமியா" அல்லது "ஆகாயமா" என்ற போட்டியில், (பூதாகாசத்தின் வலிமையா அல்லது வெளிப் பார்வைக்கு சலனத்தில் சுற்றி திரியும் மனமா) ஒன்று மற்றொன்று மேல் முடிவில்லாமல் செலுத்தும் ஆதிக்கப் போராட்டத்தின் இடையே சிக்குண்டு கிடக்கும் ஜீவனின் உயிர் வாழ்க்கை, மிகவும் துன்ப கதியடைந்து முடிவில் மீள முடியாத ஆபத்தான நிலைக்கு தள்ளப்பட்டுள்ளது.

### மனம் திறந்த ஆய்வு பற்றிய விமர்சனம்

இது நாள் வரை மனித குலத்தில் தோன்றியுள்ள மேதைகளும், விஞ்ஞான அறிவியல் அறிஞர் பெருமக்களும், பல பெரும் போராட்டங்களுக்குகிடையே தீவிர ஆய்வுகள் நடத்திக் கண்டு பிடிக்கப்பட்ட இயற்கை பற்றிய உண்மைகள் விதிகள் யாவும் மேல்மட்டமான அதன் அடிப்படை செயல்முறைகளையும், கொள்கைகளையும் பற்றியுமேயன்றி, வேறு புதிதாக ஏதும்

எடுத்துச் சொல்லப்படவில்லை. இயற்கையின் சூட்சுமத்தில் மறைந்து கிடக்கும் அதன் ரகசியங்களை இதுவரை விஞ்ஞானம் ஆராய்ந்து கூறிய கருத்துக்கள் யாவும் அதன் அடிப்படையிலேயே சற்றும் தெளிவில்லாமலும், பல சிக்கல்கள் நிறைந்த கேள்விகளுக்கு விடை காண முடியாத குழப்ப நிலையிலேயே, இன்றும் நின்று கொண்டுள்ளன. அமரகவி சித்தேஸ்வரர் தற்காலத்தில் விஞ்ஞானம் எங்கு விடை காண முடியாமல் தத்தளித்துக் கொண்டு திகைப்பு அடைந்து மேல் செல்ல முடியாமல் தடுமாற்றமடைந்துள்ளதோ, அந்த நிலைக்கு தன் அதிமானுஷ சக்தியின் வலிமையினால் சென்று, பல உண்மைகளைக் கண்டுபிடித்து, அதே சமயம் சூட்சுமமாய் உள்ள "பேச்சின்" மூலத்தையும், இயற்கையின் பல அதிசய நிலைகளையும், நன்கு ஆராய்ந்து தெளிவான முறையில் விளக்கிக் கூறியுள்ளார்.

இந்தப் புத்தகத்தில் எடுத்துக் கூறப்பட்டுள்ள அனைத்து விஷயங்களையும் அறிந்து மானிடன் தன் வாழ்வின் ரகசியத்தைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டிய அவசியத்தை சுவாமி அமரகவி தன் நீண்ட ஆய்வு கட்டுரையின் மூலம் ஆணித்தரமாகவும், ஆதாரபூர்வமாகவும், அதே சமயம் நவீன கால சிந்தனைவாதிகளின் சிந்தனைக்கு ஏற்றவாறும், விளக்கிக் கூறியுள்ளார். இந்தப் புத்தகத்தின் மனம் திறந்த ஆய்வுபற்றிய விமர்சனம் அறிவு ஜீவிகளிடமிருந்து தேவை என்கின்ற அழைப்பையும், அமரகவி சித்தேஸ்வரர் இதன் மூலம் அடக்கத்துடன் கேட்டுக் கொள்கின்றார். இந்தப் புத்தகம் மற்ற புத்தகத்திலிருந்து விளக்க உரையாக எந்தக் கருத்தையும் குறிப்பாகச் சொல்லவில்லை. அதே சமயம் பண்டைக் கால தொன்மையான வேதம், உபநிஷத், பகவத் கீதை, சாஸ்திரம், புராணங்கள், அத்வைதம், அஷ்டாங்க யோகம், ஆகிய இவற்றின் கொள்கையை ஒட்டியே அதிலிருந்து சிறிதும் மாறுபடாமல் விளக்கிக் கூறப்பட்டுள்ளது. இது இந்நூலின் மற்றொரு சிறப்பு அம்சத்திற்கு ஒரு சான்றாகும்.

இந்தப் புத்தகம் ஜீவித வாழ்க்கையின் முக்கிய அம்சமான "உயிரைச்" சுற்றி மூடி மறைந்துள்ள ரகசியத்தை ஆணித்தரமாக அடித்துத் கூறுகின்றது. அமரகவி சித்தேஸ்வரர் கண்டறிந்த தேவ ரகசியங்கள் யாவும் பண்டைய சரித்திர காலத்தில் நம்மிடையே வாழ்ந்த சித்த மகா புருஷர்கள் எப்படி இதனை உணர்வுப் பூர்வமாக யோகத்தின் வாயிலாக அனுபவித்து

உணர்ந்தார்களோ, அதுபோல் அமரகவியும் சுயமாக "யோக நிஷ்டையில்" தான் உணர்ந்து கொண்ட தன்னுடைய ஆன்மிக சுய அனுபவங்களை (Spiritual Self-experience) மனித குலமனைத்தின் நன்மையையும், மேன்மையையும் அடையும் பொருட்டுப் பல வருடங்கள் இரவு, பகலாகக் கடுமையாக உழைத்து, இதனை கிரந்தமாக ஆக்கித் தந்துள்ளார். அமரகவி சித்தேஸ்வரரின் ஆத்ம போதனைகள் எல்லை தாண்டிய விரிவும், ஆழமும், தேடிக் கொண்டு சென்றுள்ளதையே இப்புத்தகம் பறை சாற்றுகின்றது.

**சவி கல்ப சமாதி –ஆகாயத்தின் தன்னாட்சி புரியும் சுய வலிமை:**

வானத்தில் நாம் தேடியலையும், "ஆகாயத்தின் தன்னாட்சி புரியும் சுய வலிமையையே" "சவிகல்ப சமாதி" என யோகம் பெயரிட்டு அழைக்கின்றது. வான்வெளியில் துணிவு மிக்க சாகஸ விண்வெளிப் பயணங்களை மேற்கொண்டுள்ள விண்வெளி வீரர்கள், வானத்தில் தேடியலைகின்ற ஆராயச்சிகள் முடிவில் அவர்கள் முக்கியமாக எதைத் தெரிந்து கொள்ள ஆர்வமாகவும், ஆவலாகவும் உள்ளார்களோ அந்த விஷயம் நிச்சயம் எந்த ஒரு பலனையும் அளிக்கப் போவதில்லை. அமரகவி தன்னுடைய சிந்தனையில் தோன்றிய கருத்துக்களை, மேலும் நன்கு அறிந்து கொள்வதற்கு ஏற்ற வகையில் வழிகாட்டி அதே சமயம் எச்சரிக்கையுடன் இருக்கும் படியும் கேட்டுக் கொள்கின்றார்.

அமரகவி சித்தேஸ்வரர் இவாறு தன்னுடைய இறுதியான உரையின் மூலம், மனிதர்கள் அறிந்து கொள்ள வேண்டிய பொதுவான வழிமுறைகளை இங்கு கூறுகின்றார்.

பூலோகத்தில் தாய் வழி கர்ப்பம் மூலம் ஸ்தூல உடலை ஏற்றுக் கொண்டு ஜடத்தை அங்கீகரித்து, அதன் சட்ட திட்டங்களுக்கெல்லாம் கட்டுபட்டு நடக்கும் நாமெல்லாம், அதன் பின்னே மறைந்து நிற்கும் பிராண சக்தியான சூட்சும சக்தியானது, அதன் மறுபுறம் (Unbound cosmos) இயற்கையின் எல்லைகள் எல்லாம் தாண்டி, தன் சுய அறிவிலேயே என்றும் அழிவில்லாமல் நிலைத்து நிற்கும் ஆற்றல் பெற்றுள்ளது, என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும். அதே கண்ணோட்டத்தில் உண்மைகளை ஆராய்ந்து அறிந்து கொள்ளும் முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும்.

"யுகப் பிரளயம்" (Cosmic Deluge):

வான்வெளியில் அகண்டமாய், எல்லையே நிர்ணயமற்றதாக, கட்டுக்கு அடங்காத நிலையில் எங்கும் நீக்கமறப் பரவியிருக்கும் பிரபஞ்சத்தில், எண்ணற்ற சூரிய, சந்திர, கிரக, மண்டலங்கள், நட்சத்திர மண்டலங்கள், வாயு மண்டலங்கள் போன்ற ஸ்தூல வடிவங்களின் பிரம்மாண்டமான தோற்றங்கள் மற்றும் இம்மண்டலங்கள் ஒன்றை ஒன்று தத்தம் ஈர்ப்பு விசையான ஆகர்ஷண சக்தியின் மூலம் (காந்த சக்தி – Electro Magnetic Force) இயற்கையின் நியதியின்படி தாங்கிக் கொண்டுள்ளது. இயற்கையின் உள் செயல்படும் சூட்சுமமோ அல்லது உயிரின் அடிப்படை அம்சங்களோ முற்றிலும் அறியக் கூடிய விதத்தில் வாய்ப்புகள் எதுவும் வானத்தில் ஒளித்து வைக்கப்படவில்லை என்பது தான் நாமனைவரும் ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய விஷயமாகும்.

சூரியக் குடும்பத்தின் (Solar System) ஓர் அங்கமாகத் தன் அச்சில் நிலையாகச் சுழலும் பூமி, (Planet Earth) ஒரு போதும், அது தன் சுய கட்டுப்பாட்டிலிருந்து விலகிச் செல்லாது. அப்படி ஒரு வேளை ஏதாவது ஒரு யுகத்தில் தன் அச்சிலிருந்து விலகி, விண்ணை நோக்கி குறுக்காக நகர்ந்து சென்றால், அந்த நாளே பூமியின் கடைசி கட்டமான சர்வ நாசத்தை உண்டாக்கி, சகலத்தையும் அழித்து விடும் "யுக பிரளயமாகும்" (Cosmic Deluge.) இயற்கையினுள் அடங்கியுள்ள பஞ்ச பூதங்கள் (Five Elements in Nature) ஒன்றுடன் மற்றொன்று இணைந்துள்ளதால் பஞ்ச கிருத்தியங்களாகிய படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல் அருளல் ஆகிய இவையனைத்தும் தங்குதடையின்றி பிரம்ம சிருஷ்டியில் நடந்து கொண்டுள்ளன. பூமி விண்ணை நோக்கிப் பறந்து செல்ல ஆரம்பித்தால், அந்த நாளே பஞ்ச பூதங்கள் (Seperation of Five Elements in nature) அதன் கூட்டமைப்பிலிருந்து விலகித், தனித்தனியாகப் பிரிந்து விடும். பஞ்ச பூதங்கள் ஒன்று கூடினால் "பிரம்ம சிருஷ்டி" தனித்தனியே பிரிந்து நின்றால், அதுவே யுகப் பிரளயம் என்பது.

விண்வெளி வீரர்களின் முயற்சி:

எனவே பூமியும் ஆகாயமும் என்றுமே ஒன்று சேர முடியாத படி எங்கும் அகண்டமாயும், வரம்பற்றதாகவும் உள்ள இயற்கை தன் நிகரற்ற சக்தியின் மூலம் பல தடைகளை உண்டாக்கி லௌகீகத்தில் உயிர் வாழ்ந்து

கொண்டிருக்கும் சகல ஜீவராசிகளுக்கும் ஏற்ற வகையில் பூமி, ஆகாயம் எனத் தனிதனியாக பிரித்து, அவையிரண்டும் அதன் சுயமான பரந்த குறிக்கோளின் அடிப்படையில் செயல்படத் துணை புரிந்து கொண்டுள்ளது.

நவீன காலத்தில் வான் வெளியில், அறிவியல் கருவிகள் துணையுடன் சுற்றித் திரியும் விண்வெளி வீரர்கள், பூமி, ஆகாயம் இவ்விரண்டையும் ஒன்றாக இணைத்துச் சேர்த்து வைக்க படாதபாடு பட்டு உயிருக்கே ஆபத்து விளைவிக்க வல்ல வகையில் பல கடினமான விஞ்ஞான ஆராய்ச்சிகளை மேற்கொண்டுள்ளனர். பூமி, ஆகாயம் இவையிரண்டும் எப்பொழுதும் ஒன்று சேர முடியாதபடி இயற்கை பல தடைகளையும் முட்டுக் கட்டைகளையும் நிரந்தரமாக ஏற்படுத்தி உள்ளதால், மனிதனின் சுயமுயற்சி எக்காலத்திலும் அதனை தகர்க்கவே முடியாதபடி அமைந்துள்ளது. மனிதனின் தற்போதைய சாதனைகள் எல்லாம் மிக சிறிய அளவில் அமைந்துள்ளது.

சீரான மூச்சு வளர்ச்சி:

யோக சாதனையில் புலன்களை அடக்கிச் சுவாசத்தை ஒரு நிலை பெறச் செய்து ஏகோபித்த மனத்தின் மூலம் **"சீரான மூச்சு"** (Stable Breathing) வளர்ச்சி பெற்று, அதன் வழியாகத் தன்னுடைய சுய சொரூபமான சூட்சும சரீரத்தை நோக்கிச் சென்று படிப்படியாக, **"ஆத்ம ஞானத்தை"** அபிவிருத்தி செய்து கொள்ள வேண்டும்.

சிருஷ்டி தத்துவத்தில் ஒருவர் எவ்வளவு பெரிய மகானாக, சித்த புருஷராக இருந்தாலும், பிரக்ருதியின் பிடியிலே நிரந்தரமாகச் சம்பந்தப்பட்டுள்ள உயிரை, **"சீரான மூச்சினை"** (Stable Breathing) பல மனிதப் பிறவிகளில் மூலம் தொடர்ச்சியாக சித்தி பெற்று, சாஸ்வத நிலையினை படிப்படியாக, பலநிலைகளை தாண்டிச் செல்ல வேண்டிய கட்டாயத்தில் இருப்பதனால், "பிறப்பு" என்பது அவர்களுக்குத் தவிர்க்க இயலாத காரியமாகின்றது. (Birth is inevitable even to Mahapurushas.) இந்தத் தத்துவத்தின் அடிப்படையில் தான் கடந்த பிறவியில் சித்தி பெற்ற அதி மானுஷர்கள், தங்களுடைய ஆன்மீக சாதனையை எந்த இடத்தில் விட்டு சென்றார்களோ, மீண்டும் அதன் தொடர்ச்சியை, பிறக்கும் போதே **"பெரிய ஞானியாகவும், மகான்களாகவும், சித்த புருஷராகவும்"** பக்தியும் தர்மமும் சீர்குலையும் போது பூமியில் மீண்டும் சாதாரண மனிதர்களைப் போல் தோன்றி

"அவதாரம்" புரிகின்றனர். அவர்களுடைய திவ்விய வாழ்வும், வாக்கும் சகலருக்கும் வழி காட்டியாகவும், சிறந்த முன் உதாரணத்தின் எடுத்துக் காட்டாகவும், மனிதப் பண்புகளின் நல் இலக்கணமாகவும் திகழ்கின்றது.

அண்ட வெளியில் அணுசக்திகள்:

பிரபஞ்சத்தின் அண்ட வெளியில் அணுசக்திகள் ஒன்றுடன் ஒன்று அதி பயங்கரமாக மோதிக் கொள்வதனால் உண்டாகும் அணுவின் சிதைவுகளின் மூலம் உற்பத்தியாகும் அனு ஆற்றலின் சக்தி வாய்ந்த கதிர் இயக்கங்கள், சர்வ வியாபகமாய் வான்வெளியில் அலைந்து திரிந்து, கொண்டுள்ளது. இயற்கையானது ஆகாயத்தின் அதி பயங்கர ஆபத்துக்களை உண்டாக்கும் அணுக் கதிர் சக்திகள் பூமியைத் தாக்காதவாறு, காற்று மண்டலத்தின் மூலம் ஒரு தடுப்பு வலையை – ஒசோன் படலத்தைப் பின்னியுள்ளது!

பூமியும் அதன் பங்குக்கு சகல உயிரினங்களையும் ஒரு வரம்பு முறைக்குள் செயல்படும் "உடல்" என்னும் கூட்டில் ஜீவனைப் பாதுகாப்பாக பூதாகாசத்தின் சக்தியின் மூலம் பிடித்து வைத்துள்ளது. ஆனால் பூமியின் மேல் கூரையாக உள்ள ஆகாயத்தில் தான் அனைத்துத் தீமைகள் பல உண்டாகும் அணு அழிவின் கழிவுகள், அதி பயங்கரமான பக்க விளைவுகளைத் தோற்றுவித்து, மனிதனை உருத்தெரியாமல் அழித்து விடும் அபாயத்தை பெற்றுள்ளது என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

சுவாசத்தின் அதிசயமான துடிப்பு:

இந்த உலகத்தில் காணப்படும் சகல ஜீவராசிகளின் உயிர் வாழ்க்கையையும் "சுவாசம்" தன் சுவாரசியமான நிகழ்ச்சியின் மூலம் உயிர் காக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டுள்ளது. மேலும் சுவாசமே சகல ஜீவன்களுக்கும் ஆக்ஸிஜன் என்கின்ற "பிராண வாயுவை" தொடர்ச்சியாக அதன் வளர்ச்சி முதல் ஆயுள் காலம் முடியும் வரை அளித்து, அதன் இறுதி மூச்சாகவும் செயல்படுகின்றது. நமக்குள் உண்டாகும் இந்த அதிசயமான துடிப்பு தான் என்ன? இது எவ்வாறு நமக்குள் தூண்டப்படுகின்றது? இந்த கேள்விகளுக்கான விடையை ஒருவரும் தன்னுள் ஆழமாக யோசிப்பது கிடையாது.

அமரகவி சித்தேஸ்வரர் இதனைப்பற்றிச் சற்று விளக்கமாக கூறுகின்றனர். மூச்சு என்பது வானுலகத்திலிருந்து மனிதனின் சுய உணர்வுக்காக (தேக அபிமானத்திற்காக) அளிக்கப்பட்ட இந்தக் கதிர் இயக்க ஆற்றலானது, ஜீவனின் மண்ணுலக லௌகீக வாழ்க்கையை வாழ்வதற்காக அளிக்கப்பட்டதேயாகும். சாதனையின் மூலம் இந்தத் தடையை முறையாக விலக்கி அதன் மேலேறிச் செல்லும் போது ஜீவனின் அகங்கார உணர்வு நீங்கி "தேவ உணர்வு" அவனுள் அற்புத வெளிச்சமாக (Mystic Flame) பிரகாசமான ஜோதி வட்டம் போல் சூழ்ந்து கொள்வதால், மனம் அதனிடத்திலேயே லயித்து ஒருமைப்பட்டு விடுகின்றது. இந்தச் சாதனையின் கலையே "யோகம்" என பெயர். இவ்வாறு மாயத் திரைக்குள் ஜீவனை மூடி மறைத்து அவனுடைய வெளி உலகத் தற்காலிக வாழ்க்கையில் ஒன்றுமே நடவாது போல் தோற்றமளிக்கின்றது. இதனை வெற்றி கொள்ள வேண்டுமானால் இந்த சுவாசத்தின் திரையை நாம் முதலில் விலக்கிச் செல்ல வேண்டும்.

"காணாக்கண்" (Vacant Look)

ஜீவ கதியில் மனிதனுடைய மனத்திற்கு பின்னால் இயங்கும் சக்தியாக உள்ள "எண்ணம்" மற்றும் "பேச்சு" இவையனைத்தும் "மூச்சின்" மூலமாக மூடி மறைத்து, ஜீவனால் என்றுமே அதன் குறிக்கோளை அறிந்து கொள்ள விடாமல் திரையிட்டு தடுத்து வைத்துள்ளது. இயற்கையில் எங்கும் நிறைந்திருக்கும் வானுலகக் கதிர் இயக்கத்தில் ஒன்று கலந்துள்ள நினைவின் அலைகளாகும். வெளிப் பார்வையின் (Perception Vision) சலனத்தினால் மானிடன் தன் "சுய நினைவு" பெற முடியாமல் விரட்டப்பட்டிருப்பதற்குக் காரணமாக "எண்ணம்" உள்ளதால், அது மனிதனுக்கு தீமையே அளிக்கின்றது. மனிதன் தன்னுள் இழந்து தவிக்கும் அந்த முக்கியமான சக்தியை மீண்டும் பெறுவதற்கான அனைத்து வழி முறைகளையும் இந்தப் புத்தகம் ஒழுங்குபடுத்திக் கூறுகின்றது. பார்வையை வெளியே செல்ல விடாமல், "சகஜ நிஷ்டையின்" மூலம் தடுத்து நிறுத்தி, கண் திறந்திருந்தும் காட்சியில்லாத நிலை, என்கின்ற "காணாக்கண்" (Vacant Look) பெறுவது தான், ஆகாயத்தின் அற்புதங்களை எல்லாம் "ஞான திருஷ்டியில்" (Clair-voyant Vision) காட்டும் திறவு கோலாக உள்ளது.

அங்கு தான் என்றுமே ஒரு வரம்புக்குள் உட்பட்ட ஜீவ உடலை பெற்றுள்ள மனிதனை, "யோகம்" அதன் அதி அற்புத சக்தியினால் வரம்புகளை எல்லாம் மீற செய்து, எல்லை தண்டிய விரிவில் (Infinite potentialites of Omniscience Intelligence) "தான் தன் மயமாய்" நிலைத்து நிற்க உதவி புரிகின்றது. அங்கு மூச்சு சாதகனில் செயல் புரிவதற்கு இடமில்லாமல் (கும்பகத்தில் அடங்கி) உடலை விட்டே துரத்தப்படுகின்றது. அந்நிலையில் தேவ கதிக்கு உகந்த "திருமூச்சு" (Virgin Breath) சாதகனின் தேகமெங்கும் பரவி "மூலப்பிராணனை" அதன் சுய நிலைக்குக் கிட்டத்தட்டத் திரும்ப அழைத்து வந்து விடுகின்றது. எவன் ஒருவன் அதில் நிரந்தரமாக நிலைத்து வெற்றி காண்கின்றானே அவனே "சித்தி பெற்ற யோகியாவான்."

"அகர ஒலி" – பிரபஞ்சத்தின் ஒன்று கூடிய தெய்வீக சக்தி:

அமரகவி சித்தேஸ்வரர் அப்படிப்பட்ட புனிதமான "மூலப்பிராணனின் உச்சியை," ஒரு தடவை அவர் வாழ்நாளில் தொடும் பாக்கியத்தை "மூல கணபதியின்" திருவருளினால், இந்த திவ்விய கிரந்தத்தை எழுதும் பொருட்டு அதன் தொடக்க நாளில் (1969) அடைந்தார். யோக சாஸ்திரத்தில் எத்தனை பெரிய தேர்ச்சி பெற்ற மகா யோகிகளானாலும், அந்நிலையில் உடலைச் சிறிதும் சலனமில்லாமல், ஸ்தம்பனமாக (திடமாக) வைத்திருக்க முடியாது. ஏன்எனில் முழுவதும் சலனமற்றுக் கிடக்கும் உடலை, ஒரு வினாடி நேரம் கூட நீடிக்க மரணம் அனுமதியளிக்காது. அதனை மீறுவது என்பது எவராலும் முடியாத மிகவும் கடினமான காரியமாகும். அமரகவி சித்தேஸ்வரர் மரணத்தின் அந்த பயங்கரமான கோர நிலையையும், தன்னுள் தெய்வீக சக்தியின் பேரருளினால் தாங்கி, பிரபஞ்ச அண்ட வெளியில் உள்ள அனைத்து சக்தியையும் ஒன்று கூடினால் உண்டாகும் தெய்வீக தேஜஸ் என்கின்ற சர்வ வல்லமை படைத்த, "அகர ஒலியின்" மூலம் தானே ஒரு அரண் அமைத்துக் கொண்டு, நிகரற்ற சாதனையைப் படைத்தார். ("*Akara Oli*" or Cosmic Ray in its single compound of all outer cosmos)

வேத, உபநிஷத் காலத்தில் பாரத தேசத்தில் வாழ்ந்த பண்டைய கால மகரிஷிகளும், ஞானிகளும் இதே வழிமுறையில் சென்று தான் இயற்கையின் ரகசியங்கள் அனைத்தையும் தங்களின் "தபோ நிஷ்டை" பலத்தின் மூலம் அறிந்து கொண்டார்கள். இதுவே மானிட குல சரித்திரத்தில் "அதி வீரதீர பராக்கிரமச் செயல்" என வருணிக்கப்படுகின்றது. தற்காலத்தில்

இக்கலியுகத்தில் அமரகவி சித்தேஸ்வரர் அதன் அருமை பெருமைகளை எல்லாம் மீண்டும் ஒரு முறை இக்கிரந்தத்தின் வாயிலாக நிலை நிறுத்தியுள்ளார்.

முடிவுரை:

இநூலை ஆர்வமுடன் படிக்கும் மக்கள், யோகத்தின் மகிமையையும், அமரகவி சித்தேஸ்வரரின் "யோக நிஷ்டையின்" ஆழ்ந்த துல்லியமான கண்டுபிடிப்புகளைப் பற்றியும் தெளிவாக அறிந்து கொள்ளலாம். இந்த நீண்ட கட்டுரையை எடுத்துக் கூறிய அமரகவி, "ஒரு விண்வெளி வீரரோ," அல்லது விஞ்ஞான மேதையோ, பெரிய பட்டம் பெற்ற அறிஞரோ அல்லது "உலகத்தைத் துறந்த ஒரு சுவாமிஜியோ," என்று நாம் நினைத்துக் கொண்டால், நிச்சயம் ஏமாந்து தான் போவோம். அமரகவி சித்தேஸ்வரரும் நம்மைப் போலவே மிகுந்த தெய்வ பக்தியும், சிறந்த மனித நேயப் பண்புகளும் அடங்கிய, ஒரு சாதாரண உத்தியோகத்தில் இருந்து ஓய்வு பெற்ற, நடுத்தரக் குடும்பத்தைச் சார்ந்த மனிதர்தான்.

சர்வப் பிரபஞ்சத்தின் பிரம்ம சிருஷ்டியை உட்கார்ந்த இடத்திலேயே, மனத்தின் அதிசூட்சும நிலையில் (Supra Mental) தீவிரமாக பக்தி சிரத்தையுடன் ஆராய்ந்து சென்று, உணர்வு பூர்வமான இயற்கையின் (Sensitive Nature) அதிசயங்களை எல்லாம், தன்னுடைய அதிமானுஷ சக்தியினால் கண்டு பிடித்து (The wonders and mysteries of creation) அதனை மக்களுக்கு உணர்த்தியுள்ளார்.

சர்வ தேச நாடுகள் விண்வெளிப் பயணத்திற்காக பல கோடிக்கணக்கான பில்லியன் டாலர்களை செலவிட்டுக் கொண்டு, அனைத்துத் தரப்பு மனித குலத்தின் பரிணாம வளர்ச்சியில், அதன் முன்னேற்றத்தில் சிறிதும் அக்கறை காட்டாமல் விண்வெளியில் தேவையற்ற கவனத்தை செலுத்திக் கொண்டு வருகின்றது. இத்தகைய விண்வெளி ஆராய்ச்சிகள் யாவும் மனிதனின் ஆர்வத்தையும், ஆவலையும் பன்மடங்கு தூண்டிக் கட்டுக்கடங்காமல் விருத்தி செய்து, ஒரு முடிவில்லாமல் நீண்டு கொண்டே செல்லும். இன்று உலகம் முழுவதும் மனித சமுதாயம் அமைதியற்று, பயங்கரவாதிகளின் பிடியில் சிக்கிக் கொண்டுள்ளது. இந்த நிலைமை நீடிக்க அனுமதித்தால் நாளுக்கு நாள், இதன் விளைவுகள் அதிகமாகி, மனிதன்

ஒருவனை ஒருவன் சகிப்புத் தன்மையற்ற முறையில் தாக்கிக் கொள்ளும், அபாயம் உள்ளது. எனவே சர்வ தேச நாடுகள் இதற்கு உடனடியாக தீர்வு காண விழித்தெழுந்து, உடனே செயல்பட வேண்டும்.

சர்வ தேச நாடுகள் "மனிதனின் பரிணாம வளர்ச்சியில் நல்ல முன்னேற்றம் காண," என்ன வழி முறைகளை மேற்கொள்ளலாம் அல்லது உத்திகளைக் கையாளலாம் என தீவிரமாகச் சிந்தித்து, நன்கு ஆராய்ந்து, அதன் மூலம் உலகத்தின் அனைத்து தரப்பு மக்களையும், அதன் வழிகளில் ஊக்குவிக்க வேண்டும். இதற்காக பொருளாதார ரீதியாக பெரிய அளவில், செலவு செய்ய வேண்டிய அவசியமில்லை. விண்வெளிப் பயண திட்டங்களுக்கு ஆகும் லட்சத்தில் ஒரு பங்கு நிதி ஒதுக்கினாலும் போதுமானது. விண்வெளிப் பயண திட்டங்களைத் தீவிரமாக ஊக்குவித்து, ஆதரிக்கும் சர்வ தேச நாடுகள், அதே கண்ணோட்டத்துடன் மனிதனின் பரிணாம வளர்ச்சியின் சுய முன்னேற்றத்திலும் அக்கறை காட்ட வேண்டும். நவீன கால உலகத்தின் அவசரத் தேவை, உலக அமைதி, பரஸ்பரம் மனிதன் ஒருவனை ஒருவன் மதித்து நடந்து கொள்ளும் மனிதத் தன்மை, நல்லெண்ணம், மற்றும் மனிதனின் மேன்மைக்கான அடுத்த கட்ட பரிணாம வளர்ச்சியின் முன்னேற்றம். இதற்குத் தேவையான வாய்ப்புகள், வழி முறைகள் எவை உள்ளன என்பதை ஆராய்ந்து அறிந்து கொள்ளட்டும்.

அமரகவி சித்தேஸ்வரர் இந்தச் சந்தர்ப்பத்தில் விடுக்கும் அறைகூவல் "மனிதன் தனக்குள்ளேயே ஆழ்ந்து செல்லும் பயிற்சி முறைகளைப் பற்றிய பாடங்களை எல்லாம் நன்கு கற்றுக் கொண்டு, அதன் மூலம் சுய அனுபவங்கள் பெற்று, சித்தத்தையடக்கி, இயற்கையைத் தன் வசமாக்கி, ஆகாயத்தை தன் சுய வலிமையால் தன்னாட்சி புரியும் பேரறிவைப் பெற முயல வேண்டும் என்பதே."

# சித்திகளை அள்ளித்தரும் வர சித்தி விநாயகர்

(அமரகவி சித்தேஸ்வரர்)

யோக சாதனையில் சாதகன் "சித்திகள்" பெருவது என்பது மிக மிக அவசியம். ஏன்எனில் அப்பொழுதுதான் சாதகன் பிரம்ம சிருஷ்டியின் தத்துவ ரகசியங்களை முழுமையாக அறிந்து கொண்டு அந்தத் தத்துவங்களை தன்னுள் ஜெயித்து வெற்றி காண முடியும். சித்திகள் அடைவதன் மூலம் யோகி இயற்கையின் நியதிகளையும், விதிமுறைகளையும் தன் கட்டுக்குள் கொண்டு வந்து தன் விருப்பம் போல் அதனை மீறிச் சென்று செயல் படவும் முடிகின்றது. யோகத்தின் தவ வலிமை அப்படிப்பட்ட மகத்தான சக்தியை அளிக்கின்றது. யோக சாதனையில் அவரவர் திறமைக்கேற்ப மேற்கொள்ளும் வழிமுறைகள் பல்வேறு வகையாக இருப்பினும் அடையும் "சித்திகள்" யாவும் ஒரே மாதிரியாகத்தான் இருக்கும் என்பதை நினைவில் கொள்ள வேண்டும். யோகத்தில் பல வகையான சித்திகளுக்கு சில வகையான அபூர்வ பெயர்களும் உண்டு.

**சுத்த ஓங்காரம்**

சிருஷ்டி தத்துவம் நம்மில் விரோதமாக அல்லது எதிர்த்தும் செயல் புரியும் விதமாக உள்ளது. எனவே யோகத்தில் சித்திகள் பெறுவது என்பது அவசியமாகும். அப்படி அது உன்னை எதிர்க்கவில்லையானால் நாம் ஏன் சாவை கண்டு பயப்படவேண்டும். தீராத நோய்கள், மனித ஜீவித வாழ்க்கையின் அவலங்கள், கஷ்ட நஷ்டங்கள், நரை, திரை, மூப்பு, பிணி, சாக்காடு போன்ற அவஸ்தைகள் ஏன் நடக்க வேண்டும் யோசித்து பாருங்கள்.

பிரபஞ்ச சிருஷ்டியினால் உண்டானது அசுத்த உடல். அதுவே 'அசுத்த ஓங்காரம்.' தத்துவங்களை வெற்றி கொள்வது என்பது சுத்த ஓங்காரம் பெருதல் என்பதாகும். "சுத்த ஓங்காரம்" என்பது படைப்பு தத்துவங்களை ஒவ்வொன்றாக வெற்றி பெற்று 'மீட்சி' காணுதல். அதாவது சித்திகள் அடைவது என்பது இயற்கை விதிக்கும் கட்டுபாடு களிலிருந்தும், அதன் தடைகளிலிருந்தும், அதனை மீறி அல்லது தாண்டிச் செல்லுதல் என்பதாகும். அதுவே மூன்று விதமாக உள்ளது.

1. தத்துவம் அடைதல் – இதுவே முதல் நிலை
2. தத்துவத்தில் நிலைத்து நிற்றல் – இது இரண்டாவது நிலை
3. தத்துவத்தை தாண்டிச்செல்வது – இது மூன்றாவது நிலை

வர சித்தி விநாயகர்

வேதகாலத்தில் வாழ்ந்த மகரிஷிகள், ஞானிகள், முனிசிரேஷ்டர்கள் அவற்றை எல்லாம் தங்கள் தவ வலிமையால் அறிந்து வைத்திருந்தார்கள். அவற்றின் பெயர்களை எல்லாம் தற்கால யோக சாதகர்கள் அறிந்திருக்க வாய்ப்புமில்லை, நியமும்மில்லை. மேலும் இவை யாவும் தெய்வ சங்கல்ப்பத்தினால் அடையும் பேறாக உள்ளது. மனித முயற்சி மட்டும் பலன் அளிக்காது. இவ்வாறு "சித்திகளை" யோகத்தில் அள்ளித் தரும் தெய்வமாக உள்ளவர் ஸ்ரீகணபதியே ஆவார் என்றால் அது மிகையாகாது. ஆகையால்தான் அவருக்கு "சித்தி விநாயகர்" என்ற சிறப்பு பெயரும் உண்டு.

ஸ்ரீகணநாதன் கருணையினால் அமரகவி சித்தேஸ்வரர் பல அபூர்வ சித்திகளை யோக சாதனையில் அடைந்ததால் அவருக்கு "வர சித்தி விநாயகர்" என்ற திருநாமமும் உள்ளது. அமரகவி அடக்கத்தின் சிகரம். எளிமையின் சின்னம். நற்பண்புகளின் இலக்கணம். சகல அபூர்வ சித்திகளை அவர் தெய்வ அநுக்கரத்தினால் பெற்றிருந்தாலும், சாதாரண மனிதனைப் போல் சகஜமாக வாழ்ந்து வந்தால் ஸ்ரீகணநாதனையே தன்னுடைய உற்ற நண்பனாகவும், உயிர் தோழனாகவும் அடையும் பாக்கியத்தை பெற்றிருந்தார்.

## அமரகவி சித்தேஸ்வரர் அடைந்த சித்திகள்

யோகத்தில் அஷ்ட மகா சித்திகளைத்தான் மிகவும் பெருமை வாய்ந்த "சித்திகள்" என்பார்கள். உண்மைதான். ஆனால் அணிமாதி சித்திகளில் "ஈசத்துவம், வசித்துவம்" நீங்கலாக மற்றயை சித்திகள் யாவும் "சித்து விளையாட்டுகள்" நிகழ்த்த வல்லது. மாயை என்கின்ற மயக்கத்தில் சாதகனை ஆழ்த்த கூடியது. யோகத்தின் மேன் நிலை வைபவங்களை எல்லாம் அடைய முடியாமல் தடுத்து விடும் சக்தி வாய்ந்தது. "ஈசத்துவம், வசித்துவம்" இவ்விரு சித்திகளும் தெய்வத்திற்கே உரித்தானவை. அவை மனிதர்களுக்கு அல்ல.

அமரகவி சித்தேஸ்வரர் "அற்புதங்களை" நிகழ்த்தவல்ல அவ்வழியை கடைபிடித்து செல்லாமல், ஔவை, நக்கீரர், திருமூலர், அகஸ்தியர், திருஞான சம்பந்தர், நம்மாழ்வார் போன்ற மகா புருஷர்கள் சென்று அனுபவித்த யோக நிஷ்டை மார்கத்தில் பல படிகளை நிதானமாக தாண்டிச்சென்றுள்ளார். பல ஆண்டுகள் இரவு, பகல் என பாராமல் கடுமையான யோக சாதனைகள் புரிந்து மூலகணபதியின் அநுக்கரத்தினால் "சித்தாந்த சித்தன்" ஆகி அடைந்த சித்திகள் அவையாகும். அதன் மூலம் அவர் அடைந்த யோக பாக்கியங்கள் இரண்டு.

1. எந்த யுகத்திலும் மாறாது சாஸ்வதமாய் இயங்கும் இயற்கை அவர் அடைந்த சித்திகள் மூலம் அதன் நியதிகளை கடந்து சென்று அதனை அடக்கியாளும் வலிமையைப் பெற்றுள்ளார். இனி இயற்கை அமரகவியின் கட்டளைக்கு இணங்கி அடிபணிந்து நடந்து செல்லும்.

2. ஞான யோக மார்க்கத்திலும் பக்குவமாகச் தேர்ந்து தேர்ச்சி பெற்றுள்ளதால் சிருஷ்டியின் சகலவிதமான இரகசியங்களையும் அறிந்துக் கொள்ளும் பேராற்றல் மிக்க "பேரறிவையும்" பெற்றுள்ளார்.

அமரகவி சித்தேஸ்வரர் அடைந்த அபூர்வ சித்திகள் சிலவற்றின் விரிவான தொகுப்பை மட்டும் இங்கு காண்போம்:

| சித்தாந்த சித்தன் | | |
|---|---|---|
| 1 | **குண்டலினி சித்தி** | யோக சாதனையின் தொடக்கத்தின் முதல் படி. மூலாதார சக்கரத்தை தாண்டுதல். "**மனோலயம்**" ஆகுதல். |
| 2 | **ஷட்சக்ர சித்தி** | சூட்சும சரீரத்தில் உள்ள ஆறு ஆதார சக்கரங்களையும் ஆராய்ந்து சென்று அதனைத் தாண்டி, "**நிராதார நிலைக்கு**" செல்லுதல். |
| 3 | **கேவல கும்பக சித்தி** | இரு மூச்சும் சமன் வயமாகுதல் (இடா, பிங்களை.) "**பூலோக நிவைு, தேவ லோக நினைவு**" இரண்டிலும் தேர்ச்சி பெறுதல். |
| 4 | **வைகரி சித்தி** | நாவில் சென்று மடியும் பேச்சின் நாத அலைகளை அடக்குதல். வாக் மௌன நிலையை அடைதல். "**பிங்களையின் கீதம்**" கேட்டல். |
| 5 | **சகஸ்ரார சித்தி** | சித்த விருத்தி நிரோதம் பெறுதல். "**மனோ மவுன**" நிலையை எய்துதல். |
| 6 | **மகா சோடசி சித்தி** | மந்திர சாதனையில் தேர்ச்சி பெற்று "**சோடசக் கலையை**" வெற்றி காணுதல். ஸ்ரீவித்யையின் சிகரத்தை அடைதல். |
| 7 | **அஜபா சித்தி** | வாக் மௌனத்தில் வெற்றி காணுதல். துரிய நிலையை அடைதல். "**யோக நித்திரையில்**" லயித்திருத்தல். |
| 8 | **பூத சித்தி** | பூதாகாசத்திலிருந்து கொண்டு பூத உடலை வெற்றி காணுதல். "**அக்னி கலையில்**" (ருத்ர பூமி) நிவர்த்தி காணுதல். |
| 9 | **ரூப சித்தி** | மானிட சரீர ரூபத்தை வெற்றி கண்டு, தன் சுயரூபத்தில், பல சதுர் யுகங்கள் தன் விருப்பம் போல், தன் நிலை மாராதிருத்தல். |

| | | |
|---|---|---|
| 10 | **கண்ட சித்தி** | திரி காலத்தையும் அறியும் "ஞான திருஷ்டியை" அடைதல். (சகஜ நிஷ்டை) கண்ட சித்தியே சுவப்ன தேக சித்தியாகும். |
| 11 | **ஏகாக்ரக சித்தி** | எண்ணத்தின் சலனத்தை நிறுத்தி மனதை ஒரு நிலைப்படுத்துதல் **ஏகோபித்த மனம்** பெறுதல். |
| 12 | **வாயு சித்தி** | வாயு தாரனையின் மூலம் "**வாயு தேக**" அமைப்பைப் பெற்று சூட்சும லோகங்கள் அனைத்திலும் தங்கு தடையின்றி சஞ்சாரம் புரிதல். |
| 13 | **பரியங்க யோக சித்தி** | கண்,காது இணைப்பே ராஜசம் தாமசம் நீங்கல். அது தேகமிருந்தும் நினைவு அறுந்திடும். இதன் வெற்றியே பரியங்க யோக சித்தி எனப்படும்.<br>பரியங்கயோக சித்தி சஞ்சிதம் அகலுதல். இருதாள் மாயையை என்ற தீவினை, நல்வினை ஆகிய இவற்றில் தீய வினையே சஞ்சிதம் என்பது. சஞ்சிதம் அகன்ற பின் தோன்றுவது நல்வினையே. அதுவே தேவ வாக்கு பெறுதல் என்பது. அதுவே பரியங்கயோக சித்தியின் வெற்றி ஆகும். |
| 14 | **நிர்விகல்ப சித்தி** | மனோ லயம் எய்திய எண்ணம் அற்ற யோக நிலை. |
| 15 | **வாயு தேக சித்தி** | காலன் அகலல். பசி தீபாக்னி நீங்கும். வாயு தேகம் சம்பூரண கலை. சோடச கலாம் ருதம் அதுவே. இருள் தேகம் நீங்கி, மருள் தேக அமைப்பு காணுதல். முதலில் வாயு தேக சித்தி, பின் அப்பு சித்தி. வாயு தேகம் கர்ப்போட்டம் நீங்கின இடம். பிரணவ தேக அமைப்பு பெறுதல். |

| | | |
|---|---|---|
| 16 | **அப்பு சித்தி** | அப்பு சித்தி மறுபிறவியை நீக்கும். மறு பிறவி இல்லை என்று பொருள். அப்பு சித்தி பெற்றால் ஜீவ லக்ஷனம் முடிவு பெற்று தேவ லக்ஷனம் வந்து சேரும். இருள் தேகம், மருள் தேகம் ஆகிய இவ்விரண்டு தேகங்களும் தொலைந்து போய் அருள் தேகம் பெருவதே அப்பு சித்தி எனப்படும். அப்பு சித்தியே கொட்டும் நீர் விழ்ச்சி, ஆகாய கங்கை என்பதாகும். |
| 17 | **பரிவராஜ யோக சித்தி** | பரிவராஜயோக சித்தி கைகண்ட மருந்து. த்வீப்தம் என்பார்கள் அதை, கல்ப கோடி காலம் வாழும் கலை. பலநான் புண்ணியம் அது. அற்புத மணி சங்க நாதம் ஒலிக்கும் இடம் அது. |
| 18 | **ஓம்கார சித்தி** | பிரணவ நாதத்தின் ஒலியை (பவித்ர சங்க நாதம்) பிரம்ம நிஷ்டையில் கேட்டு பிரம்ம உபதேசம் பெறுதல். |
| 19 | **அகார சித்தி** | நிரபஞ்சம் முழுவதும் எங்கும் எதிலும் நீக்கமற பரவி உள்ளது அகாரம். அகார சித்தி பெற்று சர்வ வியாபகம் ஆகுதல். (ஆதித்யன் ஓடி அடங்கும் இடம் காணுதல்) அகார சித்தியே பூரண சந்திரிகா யோகம் எனப்படும். |
| 20 | **பிரணவ சித்தி** | சித்த மகா புருஷர்களின் "**பிரணவ தேக**" அமைப்பை (தாய் கர்ப்பமற்ற, மாயையின் கலப்பற்ற, சுத்த சாத்வீக உடலை) பெற்று சர்வ சுதந்திர தேகத்தைப் பெறுதல். தேவ பிராணன் "**வியானன்**" உதிப்பது அமோக வெற்றி அதன் சித்தியே ஆகும். |

| | | |
|---|---|---|
| 21 | **சொரூப சித்தி** | ஆத்ம சொரூபத்தை தரிசனம் செய்தல். ஜாக்கிர நிலையிலேயே பேரறிவை பெற்று விடும் சித்தியே சொரூப சித்தியாகும் |
| 22 | **சவிகல்ப சித்தி** | பேச்சின் நான்கு நிலைகளும் இணைந்து யோகத்தில் அந்தர்யாமியின் குரலை அறிய உதவும் சித்தி இது. நிர்விகல்ப சமாதியை விட மேம்ப்பட்ட நிலை. |
| 23 | **மூல கணபதி சித்தி** | புலனடக்கம் பெற்று புலன்களைத் தன் விருப்பம் போல் அந்தர்முகத்தில் செலுத்தி **சந்திரக்கலையில்** தேர்ச்சி பெற்று பூரண சந்திரிகா யோக நிலையை அடைதல். ஜோதி சொரூபமான "**சோம வட்டம்**" உடல் முழுவதும் சூழ்ந்து ஆட்கொள்ளல். |
| 24 | **அத்வைத சித்தி** | பிரம்ம நிஷ்டையில் ஜீவ–பிரம்ம ஐக்கியமாகி அத்வைத ஞான பூர்த்தி காணுதல். |
| 25 | **அஷ்டாங்க யோக சித்தி** | உயிர் நாடியை ஸ்தூல தேக அமைப்பிலி ருந்து கொண்டே நிரந்திரமாக அறுத்தல். ஸ்ரீகணநாதன் தும்பிக்கையில் இருக்கும் "**அமிர்தகலசம்**" இதன் வெற்றியையே குறிக்கும். |
| 26 | **நாதோபாசனை சித்தி** | பாட்டு, பஜனை போன்ற இசை நிகழ்ச்சிகள் நடத்தும் கலை அல்ல. பேச்சைக் கொண்டு புலனடக்கத்தை வென்று, அகம் அழிந்து, சூட்சும கதியில் நிற்கும் யோக நிலையே நாதோபாசனை சித்தியாகும் |
| 27 | **தெய்வதம் சித்தி** | பரமாகாச நிலையை அடைந்து, தெய்வீகக் குரல் மூலம் ஆத்ம போதனையை பிரம்ம நிஷ்டையில் பெற்று பிரம்ம ஞானியாகி "**ஞான தேகம்**" அடைதல். |
| 28 | **அங்குச சித்தி** | கணநாதனையே தன் உற்ற தோழனாகவும் உயிர் நண்பனாகவும் அடையும் பாக்கியத்தைப் பெற்றுள்ளதால் அதுவே ஆனைமுகன் சித்தியாகும். |

| | | |
|---|---|---|
| 29 | **மாருதி சித்தி** | மனித ஜீவித சரித்திரத்திலே இது நாள் வரை பிரம்ம சிருஷ்டியின் தத்துவ ஞான இரகசித்தைப் பூரணமாய் அறிந்திருந்த ஆஞ்சநேயருக்கு அடுத்தப்படியாகத் தத்துவ ஞானத்தை அறியும் பேறு பெற்று உள்ளதால் மாருதி சித்தி அதுவேயாகும். |
| 30 | **காய சித்தி** | நம் ஸ்தூல தேகத்தில் "துரிய நிலை" இயங்க துவங்குகிறது. அதுவே "காய சித்தி" என்கினற ஒரு தவ நிலையாகும். தேகம் வெளி மூச்சிலுள்ள பிராண சக்தி அல்லது பிராண வாயுவன் துணையின்றி சுயமாக உயிர் வாழும் நிலைக்கு உயர்கிறது. அதுவே காய சித்தியாகும்., <br><br> உயிரின் விழ்ச்சியை உடலில் நீக்கி உயிர்பித்தல் உடலை. சத்யோ ஜாதம் என்பது இதுவே. |
| 31 | **சித்தாந்த சித்தி** | ஜட மனம் அழிந்து, உயிர்ப் பித்தல் உடலை. **உயிர் உடலை வெல்லுதல்** அதுவே. ஸ்ரீ வித்தையின் உச்சக்கட்ட நிலையை வேதகால ரிஷிகள் சென்ற வழியில் பூர்த்தி காணுதல் |
| 32 | **நாற்சதுர சித்தி** | அமரகவி சித்தேஸ்வரர் அடைந்த சித்தி நாற்சதுர சித்தியில் தேவ காப்பு மற்றும் தேவ உயிரில் கலப்பும் உண்டு. "**அனுகத த்வனி**" அதுவே. |

ஓம் தத் சத்

உண்மை தத்துவங்கள் சூத்திரங்கள் அனுபவங்கள் ஆகிய இவைகளை ஒருங்கிணைத்து கட்டுரைகளாக இதில் தந்திருக்கிறார் பிரபோதரன் ஸ்ரீ சுகுமாரன். வேதம், உபநிஷத், விஞ்ஞானம், சித்தர்கள் பாடல்கள் ஆகிய யாவையும் உணர்த்தும் பல விஷயங்களைத் திரட்டி மக்கள் யாவரும் அறியும் வண்ணம் கட்டுரைகளாக இங்கு தரப்பட்டுள்ளன. இப்புத்தகத்தை ஒவ்வொரு மனிதனும் படித்து உண்மை நெறியை உணர வேண்டும். மனிதன், இயற்கை, இறைவன் என்ற நிலைகளிலுள்ள தத்துவங்களை இணைத்து விளக்கியுள்ளார் ஆசிரியர். இதுவரை மனிதன் அறிந்து கொள்ளாத பல விஷயங்களை இந்த புத்தகம் வழங்குகிறது. மக்கள் இதனைப் படித்து பயன் அடைய வேண்டும்.

ISBN 978-81-903924-7-1

